சனகர்- சனந்தரர்- சநாதரர்- சனக்குமாரரென்னும், நால்வருக்கும்உபதேசஞ்செய்தபின்பு எங்களுக்கு நிச்சியக்கியானம் உண்டாகுநிமித்தம் சிரேட்டத்தையுடைய அஷ்டாதஜபுராணங்களையும்-உபதேசஞ்செய்தனர்—( எ - று. )

பதினெண்புராணமாவது-

சைவம் - மச்சியம் - கூர்மம் - வராகம் - வாமனம் - பிரமம் - வைணவம் - பாகவதம் - இலிங்கம் - பவுடிகம் - நாரதீயம் - காருடம்- பிரமகைவர்த்தம்- ஸ்காந்தம்- மாற்கண்டேயம்- பிரமாண்டம-பதுமம், இவற்றுள் சைவம்-ஸ்காந்தம்- இலிங்கம்-கூர்மம்- வாமனம்-வராகம்- பவுடிகம் - மச்சியம் - மார்க்கண்டேயம்- பிரமாண்டம-

ஆகசிவபுராணம், ய.

பாகவதம் - நாரதீயம் - காருடம் - வைணவம்.

ஆக விட்டிணுபுராணம். ச

பிரமம் - பத்மம். பிரமாவின்புராணம உ

பிரமகைவர்த்தம்· சூரியபுராணம், க.

ஆக்கினேயம் அக்கினிபுராணம் க.

இவைகளன்றியும் உபபுராணம்- யஅ.

உசனம் - கபிலம் - காளி - சனற்குமாரீயம் - சாம்பவம்- சிவதன்மம் - சௌரம் - துர்வாசம் - நந்தி - நாரசிங்கம் - நாரதியம் - பாரசரீயம் - பார்ககவம் - ஆங்கிரம்- மாரீசம் - மானவம்-வாசிட்டம் - இலிங்கம் - வாருணம், இப்புராணங்கள், அவரவர்கள், பெயரால் விளங்கப்படும். (யசு)

என்றுமுன்பகர்ந்தறத்தினையிலகிடுமியல்பு .. ... *
நன்றுமேவியகருமமுநவின்றபினெளிதின் ... ...*
வென்றுதீவினைவீட்டுதற்கானுமைவிருப்பால் ... *
ஒன்றுதானமூந்திர்த்தமுமூர்த்தியுமுனாத்தான் ...*

( இதன்பொழிப்பு )

இப்படியென்றுசொல்லிய தருமங்களைப் பிரசிக்கத்தக்ககுணங்களையும் நன்மைதங்கிய தன்மங்களையும் உபதேசித்தபின்புதீவினைகளைச் சேதிப்பதற்கு பரமசிவமும், பார்வதிதேவியாரும்,

இன்பத்திற் பொருந்தியிருக்கின்ற தீர்த்தங்களும் தானங்களும் சிவலிங்கங்களும் ஆகிய இவைகளை உபதேசஞ்செய்தார் (எ - று.) (௰௭)

ஆங்கவற்றினுட்டீர்த்தங்களொருபுடையதிகத் .. *
தோங்குமோரிடைச்சினகரங்கேத்திரமுயருந் . .*
தீங்குதீர்தரமூன்றுமோரிடைச்செறிந்தெளிதிற்... *
பாங்குறநற்பதப்பளிப்பதும்பரிந்துனைம்பலரா *

(இதன்பொழிப்பு.)

அந்தத்தானங்களிலிருக்கின்ற தீர்த்தம் மூர்த்தி தலம், என்று மூன்றில், தீர்த்தங்களேஒரிடத்தில், விசேடமாகவிளங்கும், ஓரிடத்தில்ஆலயம்விசேடமாகவிளங்கும்ஓரிடத்தில்தலவிசேடம் விளங்கும்,தீங்குநீங்கும்படியாகமூன்றும்ஓரிடத்திலே கூடியிருந்துஎளிதிலே பக்குவமாகிய, நல்லமோக்ஷத்தை கட்டளையிடத்தக்கத்தலத்தையும்,அன்புகூர்ந்துஅனுக்கிரகஞ்செய்யுமென்றார்கள்——(எ-று)

மூக்குறும்பெறிந்துசான்றமுனிவரர்வினவச்சூத *
னெக்குளமுருகிநீலநறாயிதழ்க்கருங்கட்செவ்வாய் -*
மைக்குழன்மங்கைபாகன்வளமொளியனைத்துளாக்கித் *
தக்கநருணாமேவாந்தும்தனிவுறச்சாற்றுகின்றார் . *

(இதன்பொழிப்பு)

வெகுளி-காமம்- மயக்கம் என்பவைகளை நிக்கிரகஞ்செய்து- மேன்மைதங்கிய முனிவர்கள்கேட்டகாலத்தில், சூதபுராணிகரானவர் மனமானது- உருகி நீலோற்பலத்தின் அடுக்காகிய, இதழ்போன்ற கருங்கண்ணும், சிவந்தவாயும்,கரியகூந்தலையும்உடைய, உமையவள்தங்லவமருகிய, சிவபெருமானது- தேஜோமயத்தை மனத்துக்குள்ளே ஆவாகனஞ்செய்து- விசேடமாகிய திருவருளானது- அறிவிக்கத்தெரிந்து முனிவர்களியாவர்களுந் தெளியும் வண்ணம் கூறுகின்றார்——(எ- று.) (௰௯)

வேதனூன்மாபினுற்றிமேதகுகுணத்தின்மிக்கீர் ... *
ஆதலாலுணர்த்தலாகுமத்தகுபதியொன்றுண்டான். *
மேதகுபதியின்மேன்மைவிண்டதின்றளவுமின்று. *
நாதனுருருவமென்றேயென்றுபினவிற்றுகின்றார். .*

(இதன்பொழிப்பு.)

வேதசாஸ்திர முறைமைப்படி, யெக்கியங்களைச்செய்து- விசேடமாகிய குணத்தினுல், மிகுந்தவரானீர்கள் ஆகையால், உங்களுக்கு, அறிவிக்கலாகும்,அவ்விதமாகிய தீர்த்தம்-மூர்த்தி- தலம். மூன்றுமபொருந்தியஸ்தலம் ஒன்றிருக்கின்றது- அந்தமேன்மையாகியஸ்தலப்பெருமையை,இதுவரையிலும்யாம்,சொன்னதில்லை அந்தஸ்தலமானது- பரமசிவனது-உருவமேயென்றுவியந்துகூறி பின்பு முனிவர்களுக்கு சொல்லத்தொடங்கினார்-(எ-று.) (உ௰)

அறிகுறியகன்றதூயவநந்தவானந்தமாயப்...... ...*
பொறிமுதலகன்றசோதிப்புனிதனுட்புகுந்துபோத *
நெறியினையுதவவாய்ந்துநினைந்திதுவினவப்பெற்றீர் *
வெறிகமழ்தருவினீழல்விண்ணவர்விழைவதாகும் .. *

(இதன்பொழிப்பு)

இவ்விதமென்று அறியும்படியானதற்கு ஓர் அடையாளம் இல்லாமற்பரிசுத்தமாகியும் அநந்தஆனந்தகுணமாகியும்,பஞ்சேந்திரியங்களுக்கும், அயிக்கியப்படாமல் விளங்காநின்ற சோதிமயமாகியசிவபெருமான்உங்கள் இதயத்துக்குள்ளே சென்றுபோதமார்க்கத்தை அனுக்கிரகஞ்செய்த தன்மையினுல் பரிசோதித்துஇதனை வினவப்பெற்றீர்கள் பரிமளிக்கின்ற கற்பகவிருக்ஷ நீழலில் வீற்றிருக்கின்ற தேவகணங்கள் விரும்பத்தக்கதாகும் இத்தலம்-(எ-று)

முனம்பலபிறப்பினேற்றுமுறைமறைநிறையினுற்றி.......*
யினந்தருகிரிச்சிராதியியந்தியோகத்தினேய்ந்து .. ...*
கனங்குழைபங்கன்செய்யசமலிணைகலந்தகாதன் .. .. *
மனங்குழைந்தவர்கட்கெய்துமற்றையார்க்கரியதாகும்... *

(இதன் பொழிப்பு)

ஆதியில், அநந்த சன்மந்தோறும் தவஞ்செய்தும் முறைமையாகியவேதோத்தபடி நிறைந்தயாகங்களைச் செய்தும், கூட்டமாகிய விரதாதிகளைச் செய்தும், தீக்ஷைகூடியிருந்தும்,உமையவள்பாகனாகிய சிவபெருமானது- சிவந்ததிருவடித்தாமரைகளிற், கலந்த அன்பினால் மனமானது- குழைந்து- உருகினவர்களுக் கல்லாமல் மற்றவர்களுக்கு அருமையாகும்—(எ-று.) இதற்குநாயனாரும் தவமும் தவமுடையார்க்காகும் அவமதனை யஃதிலார்மேற்கொள்வதுஎன்றனர் (உஉ)

(வேறு)

தெய்வநாயகன் சிவனெனத்தெளிந்தசிந்தை யர்தாம் *
உய்ய வுய்ய வனவொருமுதலுதவி யதாகும் ... ...*
வெய்ய தீவினைக்கு வெயலாங்கணத்திடைவீட்டிக் ..*
கைய ராபுறப்பத்தி பமுத்தியுங்காட்டும் ... ... ...*

(இதன் பொழிப்பு)

சகலதேவர்களுக்கும் நாதனாகி விளங்காநின்றவன் சிவபெருமானேயென்று நிச்சயித்துத்தெளிந்த சித்தத்தை யுடையவர்களாகிய புண்ணியவான்களெல்லாம் வுச்சீவிக்கும்படி யாகியதானபாகுப்பிலாதபரசிவமே தந்தருளியதாகும் கொடிதாகிய தீவினைத்திரள்களையெல்லாம் வேரறும்படியாகககடிந்து கைத்தல நெல்லியங்கனியைப்போல புத்தியையும்முத்தியையுந்தெரிவிக்கின்றதலமாம்— (எ-று) அமரர்-சித்தர்-அசுரர்-தைத்தியர்-கருடர்-கின்னரர்-காந்தருவர்கிம்புருடர்நிருதர்இயக்கர்விஞ்சையர்-பூதர்பைசாசர்அந்தரர்முனிவர்உரகர்ஆகாயவாசிகள்- போகபூமியர்,என்னும்,கணங்கள் பதினெட்டு நிலம் - நீர் - மதி -பிராணவாயு - சூரியன் -அக்கினி- வாயு - ஆகாயம், இந்த அஷ்டமூர்த்தங்கள்பிர்மா விஷ்ணுமுதலிய, பஞ்சமூர்த்திகள் அஷ்டதிக்குப்பாலகர்- மருத்துக்கள்- வசுக்கள்- இவர்களமுதலிய தேவதைகள் சகலருக்கு நாயகமானதால்தெய்வநாயகனென்றார். "சிவனெனத் தெளிந்த சிந்தையரென்றது- காட

# உ-அ திருவாலங்காட்டுப்புராணம்.

கி-அனுமானம்- உவமானம் - அருத்தாபத்தி - அபாவம் - ஐதிகம-சம்பவம்-ஆகமம், என்னும், அஷ்ட அளவைகளால்அறிவதாம் காண

ல்காட்சி நெருப்பைக்கண்டுபுகையுண்டெனல், அனுமானம்,

மரைபசுப்போல், உவமானம் பெரியோர வாய்ச்சொல், ஆகமம், பகலுண்ணான், பருத்திருப்பா னென்பது- அருத்தாபத்துமுன்னுமில்லை பின்னுமில்லை யொருகாலத்திலுமில்லையெனல்,

அபாவம்.

இம்மரத்திற் பேயுளதென்பது- ஐதிகம், ஆயிரத்தில், நூறுண்டெனல், சம்பவம், ஆகிய, அளவைகளினால், சகலதேவர்களுக்கும், புகலிடமாயும் நாதனுயும், இருக்கின்றகடவுள் பரமசிவமேயென்று தெளிந்தசிந்தையர் என்றுகூறினார்.

அரியஞானமும்யோகமுமகவினையாவும் .. ...*
எரியிலோற்றிடுந்தவங்களுந்தானமுமின்னும் . *
புரியவேண்டுவவின்றியுய்புரிசடைப்பெருமாற்... ...*
உரியவப்பதியடைந்திடில்முத்தியாக்குதவும் ... *

(இதன்பொழிப்பு)

கிடைத்தற்கரிய ஞானமும், யோகமும், யெக்கியச்செயல்களியாவும்,அக்கினியிலிருந்து செய்கின்றதவங்களும், தானங்களும், இன்னுஞ் செய்யத்தக்கவைக ளொன்றும் இலலாமலும், கட்டியிருக்கின்ற சடையையுடைய, சிவபெருமானுக்கு உரித்தாகிய, அத்தலத்தைச்சேர்ந்தால், மோக்ஷத்தை யங்குகட்டளை செய்யும்(எ-று,)

ஆயதொல்பதிவினவியநீவிருமியானும் . ... *
வாயவோர்ந்திடும்வழக்கிலுந்கதிபுறவாழ்ந்தோம் ... *
பாயசீர்ப்பதிப்பெருமையைப்பரமனையல்லால். *
வயமால்முதலியாவருமுணர்ந்தளந்தோயார் ... .. *

(இதன்பொழிப்பு)

அந்த பழமையாகிய க்ஷேத்திரத்தை வினவியநீங்களும் யானும் உண்மையாக அறிந்திடும் ஞாயத்தினுல் கதிபெறும்படியாக

வாழ்ந்தனம், விசால மாகிய சீர்பொருந்திய, அந்தக்ஷேத்திரத்தின் மகத்வத்தைப் பரமசிவனேயல்லாமல் பொருந்நயவிரிஞ்சு முதலிய தேவர்கள்யாவர்களுந் தெளிந்து இவ்வளவென்றுகணக்கிட்டுப்பொருத்தமாகச்சொல்லார்களெ—(எ-று) (உ௫)

ஞாலமேத்திடுமப்பதிநலம்பெறுநாமம்... . *
ஆலங்காடெனவறைகுவரப்பெயர்பகரில் ... *
வேலவாற்றியதீவினைத்திரளெலாமிரியம்... ... *
பாலலோசனனடிநிழற்பதவியுமளிக்கும் ... *

(இதன்பொழிப்பு)

உலகமெல்லாந் துதிக்கின்ற அத்திருத்தலத்தின் நன்மைபெற்ற நாமமானது- திருவாலங்காடென்று கூறுவார்கள் அந்தத் திருநாமத்தைச்சொல்லுமளவில் பொருத்தமாகச்செய்ததீவினைக்கூட்டமெல்லாம்அகன் றோடிப்போய்விடும்நெற்றிக்கண்ணையுடையபரமசிவனது-திருவடிநீழலாகிய,பதத்தையுங்கட்டளையிடும்—(எ-று)

விரிநிலாமதிவயிற்றினைக்குடைந்துமீதாலம் .. . *
பரியவீழ்சுதைபாந்துறவெங்கணும்பாயக் ... *
கரியகானமுநிலவொளிகலந்துறுந்திங்கட் .. . *
குரியவப்பெயர்தானுமாலோனெனவுறுமால் ...*

(இதன்பொழிப்பு)

விரிந்த கிரணத்தையுடைய சந்திரனது- வயிற்றைத்துளைத்துக்கொண்டு மேலே ஆலவிருக்ஷமானது- செலவுதலால் பாலிப்பொருத்தமாக யெங்கணும் அச்சந்திரனிடமாக யிருந்துவீழ்ந்த அமுதமானது- பாய்ந்ததன்மையினால் கருமையாகிய ஆரண்யமும்நிலவின்காந்தியைப் பொருந்தி யிருக்கும் சந்திரனுக்குஉரித்தாகிய,திருநாமமும், ஆலோனென்று சொல்லும்படியாகஇருக்கும்.
(என்றவாறு.) (உ௬)

மூலமேவியவிரிநிலத்தொளியில் மென்றாரி ... ...*
யாலமேல்முகிலடைபலதவழ்ந்துறுமந்த ... ..*

நீலமேனியன்பாற்கடற்பணிப்படநீழற் .. ... *
கோலமாரணிமீதுறங்கொள்கையிற்குலவும் ... ...*

(இதன்பொழிப்பு)

வேருகளானவை பூமிருவியிருக்கின்ற விரிவாகியபூமியினிடத்துஒளியையுடையதாகவும், பிருதுவாகியும், பெரிதாயும், இராநின்ற ஆலவிருட்சத்தின் மீது- மேகமானது- பல இலைகளினும் தவழ்ந்து பொருத்தமாக வசித்திருப்பது- எத்தன்மையாக இருப்பதென்றால், நீலம்போன்ற திருமேனியையுடைய விஷ்ணுவானவன் பாற்கடலினிடத்து- சர்ப்பப்படத்தின் நீழலாகிய, அழகுபொருந்திய சயனஸ்தலத்தின்மீது தங்கியிருக்கும் பெருமைபோன்றுபொருந்தியிருக்கும்—(எ-று) (உஅ)

பாலலோசனன்பரிவுறப்பங்கயத்தொருவ ... ...*
னீலமாமணிமண்டபமுத்தணிநிறைத்துக் .. ... *
கோலமார்தரகருயிற்றியேகால்பலதொடுத்தாங் ...*
காலமார்விழுதவனிவீழ்ந்தூன்றிவிண்ணளவும் ... *

(இதன்பொழிப்பு)

நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் இன்பங்கொள்ளும்படியாக தாமரைக்கமலத்தில் வசித்திருக்கின்ற பிரமதேவனானவன் நீலரத்தினங்களாற், செய்தமண்டபத்துக்குமுத்தின்வரிசைகளைப்போல்நிறையச்செய்து அழகுநிறையும்படியாகப் பதித்துப்பலதூண்கள்நாட்டியவைபோல், ஆலவிருக்ஷத்தில்நிறைந்த விழுதானவைபூமியினிடமாகப்பொருந்தி யூன்றிக்கொண்டு ஆகாயத்தையளாவிஇருக்கின்றன-(என்றவாறு) (உகூ)

பிடியினோடுவெங்களிற்றினமடித்தலைப்பிறங்கி... ...*
முடியின்மாமுகின்முழங்கிடப்பின்றியேமூரி ... *
நெடியமாக்கரநீட்டிடநீங்கியேகுலத் ... ... ...*
தடிகள்கோபுரத்தந்தகாசுரனெனவடரும் ... ... *

(இதன்பொழிப்பு)

பெண்ணானையுடனே கொடிதாகிய ஆணானையின் கூட்டமான வை ஆலவிருக்ஷத்தின் அடிவாரத்திற் கொர்சனைசெய்து அந்த ஆல விருக்ஷத்தின் உச்சியினிடத்து மகத்தாகிய மேகமானது- சந்தத லாம், பிறகிட்டுப்பெருமைபொருந்தியும் நீண்டும் உயர்ந்தும் இ ருக்கின்ற துதிக்கையை நீட்டியவளவில அவ்விருக்ஷத்தை விட் டுவிலகியந்தமேகம் சிவபெருமானது- கோபுரத்தினிடத்து அந் தகாசுரனைப்போல், அமர்ந்திருக்கும்—(எ-று) (௫௰)

பூந்துணர்த்துகள்பொதுளியேபொன்னிலம்பொருவுங்... *
காந்திசெய்திடக்கடிமலர்மதுத்துளிகால .. ... ... *
மாந்தியாழ்செயவண்டினங்குயிலிசைவழங்க... ... ....*
வேய்ந்துதோகைமாமயினடமேவிடுமெங்கும்... ..... *

(இதன்பொழிப்பு)

புஷ்ப்பக் கொத்துகளினிடமாக இருக்கின்றமகரந்தங்க ளுதிர் ந்தபூமியெங்கணும் நிறைந்து தேவலோகத்துக்குச்சமத்துவமாக ப்ரகாசத்தைச் செய்பவும் பரிமளம்பொருந்தியபுஷ்பமானதுதே ன்றுளியைச் சொரியவும் அத்தேன்களையுண்டு வண்டினங்களான வை யாழ்பாடவும் கோகிலங்களானவைஇசைகூறவும் பொருத்தமா கக் கலாபத்தையடைய பெருமையிற்சிறந்த மயில்களானவையெ வ்விடத்தும் நடனஞ்செய்துக்கொண் டிருக்கும்—(எ-று.) . (௫௧)

பொன்னிறச்செழுங்கற்பகப்புதுமலரேந்தி .. ...*
மின்னுமாமணிக்காஞ்சிபொற்சிலம்பொடுமிழற்ற . *
வன்னலாரணியிளமுலைக்கதிப்பினுக்காற்று . ... *
தின்னல்கூரிடையோடுசேர்ந்திறையடிபோற்றி. .... *

(இதன்பொழிப்பு.)

சொர்ணகாந்தியாகிய கற்பகவிருக்ஷத்தினிடமாகப் புஷ்பித் தபுதிய மலர்களைக்கையிலே தாங்கிக்கொண்டு ப்ரகாசிக்கப்பட்டஇ ரத்னங்களினாற்செய்த மேகலாபரணமானது- பாதத்திலணிந்திரு

க்கின்ற பொன்னாற்செய்த சிலம்பினுடனே ஒலிக்கும்படியாக அத்தெய்வப் பெண்களானவர்கள் அழகுபொருந்தியும், இளைத் தங்கியும் இருக்கின்ற ஸ்தனபாரத்துக்குச் சகிக்காமல் துன்பத்தையடையப்பட்ட இடையுடனே ஆலயத்துக்குவந்து சிவபெருமான் திருவடிகளைப்போற்றிசெய்து —(எ-று,) (௩௨)

இனியதிஞ்சுவைத்தேன்மழைகான்றெனவிரங்கிக் .. *
கனியுநல்லிசையாழொடுமிடற்றொலிகலந்து... .. *
பனியகீதமும்பணித்தனர்பணிந்தனர்படர்வார்... *
புனிதமேவியபுண்ணியப்பதியெனப்புகழ்ந்தே ...*

(இதன்பொழிப்பு)

இனிப்பாகியமதுரம்பொருந்திய,சுவையையுடையதேன்வருஷிமானது பொழிந்தது போல இரக்கமுற்றுக் கனிந்த நல்லிசையைத்தருகின்ற யாழினுடனே கண்டத் தொனியானது பொருந்தி குளிர்ச்சி பொருந்திய கீதங்களையும் பாடினவர்களாய் நமஸ்காரஞ் செய்து தேவலோகத்துக்குப் போவார்கள் சுத்தபவித்திரம்பொருந்தியபுண்ணியஸ்தலம் இத்திருவாலங் காடென்று புகழ்ந்துசொல்லி (என்றவாறு) (௩௩)

மிக்குயர்ந்தபல்வளத்தொடும்பெருகொளிமேவிப் *
புக்குறைந்தவக்கணத்திடைவினையெலாம்போக்கி .. *
நெக்குளங்கனிந்தமலமாநெறியுறநிகழ்த்தி. .. *
மூக்குறும்பறுமுத்தியுங்காட்டிடுமுனிவீர். ... ...*

(இதன்பொழிப்பு)

மிகுதியாகவுயர்ந்தபலவாகிய, வளமைகளுடன் பெருகியஒளியானது- பொருந்தியத்தலத்திற்சென்றுவசித்த, அந்தக்ஷணமே வினைக ளியாவையையும் அகற்றி உருகியமனமானது - களியுற்று சுத்தபவித்திரமாகிய மாற்கத்தைச் சேரும்படியாகச்செய்து வெகுளிகாமம்- மயக்கம்என்பவைகளைக்கெடுக்கு மோட்சத்தையுங்காட்டிடுமுனிவர்களே—(எ-று)குறும்பென்பது-பகை. (௩௪)

உறைதலாற்பிறப்புறுதலானுடல்விடுஞ்செயலால் . . *
இறைதலானுமின்பளித்திடுந்தீவினையகற்றும் *
முறைபிறந்துவெம்பாவமேமேவிடுந்தீமைக்.  *
கறையினராவராயினுந்தொழக்கதிகாட்டும் *

(இதன்பொழிப்பு)

முன்சொல்லிய திருவாலங்காட்டினிடத்து - வசித்திருக்கின்ற தினாலும், அவதாரஞ் செய்தலினாலும், மடிதலினாலும், ஒருநாழிகை இருநாழிகை ஒருதினப், இருதினப், தங்கியிருப்பதினாலும், பேரின்பத்தைக்கொடுக்கும் தீவினைகளைச்சேதிக்கும் முறைமையாகச்சனித்து கொடியபாவங்களே முதன்மையாகிய தின்மையென்னுங்குற்றமுடையவர்களே யாயினுந் தொழுதமாத்திரத்திற்பாகதியைய காட்டும்—(எ - று) (௫௰)

(வேறு.)

நொடியளவதனிற்பாதியாயினுநுகர்ச்சிமேவற் . . . *
கடிநிழலாற்றற்கங்கணமரினுமவலமாய . . *
கடிவினையொழிக்குமென்றாற்கண்ணுதலாலங்காட்டு [ரி
நெடிவரையுறைவார்மேன்மையுணர்ந்தெவருரைக்கற்பாலா

(இதன்பொழிப்பு)

நொடியத்தனையிற் பாதிநேரமாயினும், போசனஞ்செய்வற்கு அல்லது-நடந்துவந்தஇளைப்பாற்றுதற்கு அத்திருவாலங்காட்டினிடத்துவசிக்கினும்விரத்தமாகியகடியவினைகளை நீக்குமென்றால் சிவபெருமான்வீற்றிருக்கின்ற அத்திருத்தலத்தில்நொடியத்தனைநேரம் வசிக்கத்தக்கவர்களின் மேன்மையை அறிந்து யாவர்கள்சொல்லும், பகுதியானவர்கள் —(எ-று) (௫௬)

அந்தணாளர்தங்கொலைமுதற்பாவங்களைநீத்து .. .. *
நிந்தையாகமுப்புரதகவெனநிகழ்த்தினவுந் *

சிந்தைசேர்ந்தவுமல்லவுந்தீர்த்தநீர்படிந்தே ...*
யெந்தைதாடொழவிரிந்திடுநற்பயனெய்தும் .. *

(இதன்பொழிப்பு.)

பிரமஹத்திமுதலிய,பஞ்சபாதகங்களுந்நினைத்தனையுடனேதிரு புரத்திரன்தருதியென்றுசொல்லும்படியாகச்செய்தவைகளும்மன தறிந்துவந்தகுற்றங்களும் மற்றவைகளும்,முத்தித்தீர்த்தத்தில,ஸ்தா னஞ்செய்து- வடாரண்யப் பெருமானுடைய, திருவடிகளை வணங் கியமாத்திரத்திலோடிப்போம்நற்பலன்கிடைக்கும்—(எ-று) (௫௭)

(வேறு)

சொற்றதேசொற்றும்வேறுபயனிலைச்சுருதியீன்ற *
கற்றையஞ்சடையார்க்கொக்குங்கடவுளரில்லைகாத *
லுற்றனவளிக்குமாலங்காடெனவுலகமேவு .. .. *
நற்றலமில்லைமெய்ம்மைநற்றவஞானமிக்கீர். ... . *

(இதன்பொழிப்பு)

முன்சொல்லியதைத்தானே சொல்லுகிறோம், வேறொருவித த்தாற் பிரயோசனமில்லை வேதத்தைத் திருவாய்மலர்ந்தருளிய, தொகுதியாக அழகுபொருந்திய சடாபாரத்தையுடைய பரமசிவ னுக்குவப்பாகிய தேவர்களில்லை இன்பமுற்றபொருள்களியாவையு ந்தாராநின்ற திருவாலங்காடென்னுந் திருத்தலத்தைப்போல உலக த்திலிடத்துப் பொருத்தமாகிய நல்லஸ்தலமில்லைஉண்மையாகிய நல்லதவமும் ஞானமுமிகுந்தமுனிவர்களே(எ-று.) (௫௮)

(வேறு)

வரியரவெண்மதியணிதருசடைமுடிமூவாளன் .. *
அரியயன்முதலியவமரர்கடொழுதெழுமடிபேணி *
வரியினமுராதிருவடவனமதுசெலுமதியோனா.... *
விரிதருதருநிழலமரர்கடிதொழவிழைவாரே ... *

(இதன்பொழிப்பு.)

வரிகள்பொருந்திய சர்ப்பத்துடனே சந்திரனை யணிந்திருக்கின்ற ஜடாமகுடத்தையுடைய மழுப்படையைத் தாங்கிய, சிவபெருமானது- பிரமவிஷ்ணுக்கள் முதலிய தேவதைக ளெல்லாரும், நமஸ்கரித்தெழாநின்ற திருவடிகளை விரும்பி வண்டினங்களான வைசப்திக்கின்றவடாரண்யத்துக்குச்செல்லாநின்றஅறிவினையுடையவர்களை விரிந்தகற்பகத்தருநீழலில் வசித்திருக்கின்ற தேவர்கள்நமஸ்காரஞ் செய்யும்படியாக விரும்புவார்கள்—( எ-று ) (௬௬)

விழிதருசழல்கொடுமதனுடல்பொடிசெயும்விமலேசன்... *
வழிமதுவொழுகியவடவனமதுதொழுமதியோரோ .... *
யழிதருபிறவியினலமரலொழிவறவயர்வாகும் . ... ...*
கழிதருதுயரொடுகழிதாவுழல்பவர்கருதீரோ .... ... *

(இதன்பொழிப்பு)

நெற்றிக்கண்ணினது- அக்கினியைக்கொண்டு மன்மதனது- தேகத்தைச் சாம்பலாகச்செய்தருளியவிமலமாகியசிவபிரான் எழுந்தருளியிராநின்ற வழிந்ததேனகளானது- சொரிந்துக்கொண்டேயிருக்கின்ற திருவாலங்காட்டைத் தொழப்பட்ட புத்திமான்களே அழியப்பட்ட சனனத்தாலுண்டாகிய சுழற்சியானது ஒழிவில்லாமலவருத்தப்படுத்துகின்ற தாழ்ந்ததுன்பத்துடனே நீங்கும்படியாகச் சஞ்சரிக்கின்றவர்களாம்இதனையெண்ணியறியுங்கள்—(எ-று )()

மறையொடுமிறையவர்வழிபடும்வடவனமதுமேவிச் . *
சிறையளிமுரல்புதுமலரொடுசிவனடிசெறிவாரே . ...*
சுறைபணிவளரொளிகளமுறமழுமறிகரமேவப் . . . *
பிறையணிசடையொடுகனலுறுநுதல்விழிபெறுவாரே . .*

(இதன்பொழிப்பு.)

வேதகோஷ்டத்துடனே பிராமணர்கள் பூசிக்கின்ற, வடாரண்யமென்னுந் தலத்துக்குச்சென்று சிறகினையுடையவண்டினங்களான வைசப்திக்காநின்றபுதியமலர்களுடனே பரமசிவனது திருவடித்

தலத்துக்குஅருகானவர்கள் விடத்தையுடையசர்ப்பமானது-வளராநின்ற ஒளிதங்கிய கண்டத்திற்பொருந்தவும் மழுமானுணவைகளைத் தலத்திற்பொருந்தவும் இளஞ்சந்திரனை யணிந்தசடையுடனே அக்கினிதங்கி யிருக்கின்ற நெற்றிக்கண்ணையும் பெறுவார்கள்-(எ-று)

பசைபறுமுடலொடுபகுவாயன்மிகவொறுபசிமேவி .. *
யசைவொடுமனைமனையவிழ்பதமிடுமெனவலைவீர்காள் *
இசைசெயுமளியினமினிதுமணதுமழையெனவீசுந் . . *
திசைதொழும்வடவனமருவிடிலிமையவர்திருவாமால் ... *

(இதன் பொழிப்பு)

மாமிசப்பற்றுக்க ளற்றவுடனே உபாதிக்கின்றதேகத்தைக்கொல்வோமென்னும், பசியானதுபொருந்தித்தளர்ச்சியுடனே பலபல வீடுகடோறும்போய் சாதமிடுங்கோளென்று சொல்லி யலையாநின்றவர்களே கேளுங்கள் இசைபாடுகின்ற வண்டினங்களானவையின்பமா - 'உண்ணுமபடியாய்த் தேன்களை மழையைப்போல் பொழியாநின்ற அஷ்டதிசையும் தொழுதேத்தும் வடாரண்யத்தைச் சேருவீர்களாகில் தேவமாதர்களுடைய செல்வமுண்டாகும் (எ-று)

தரியலர்திரிதருதிருபுரமெரிசெய்ததனிநாயன் . *
பரிபுரவொலியொடுபாதநடனவில்பதியாகும்.. *
கரிதிரிவடவனமருவினர்கடவுளரடிதாழ . *
புரிதிலாயமுதுறமுணவொடுதருநிழன்மூனியாரோ *

(இதன் பொழிப்பு)

சந்திராதிகளினிடத்து சஞ்சரிக்குந்தொழிலா யிருக்கின்ற முப்புரமாகிய மூன்றுமதிலையு நகைத்தெரித்தருளிய ஒப்பிலாத சிவபெருமான் பரதசாஸ்திர விதிப்படிக்கு நன்மையாகிய ஊர்த்ததாண்டவஞ் செய்தருளாநின்ற திருத்தலமாகிய யானைகள்சஞ்சரிக்காநின்ற திருவாலங்காட்டை யடைந்தவர்கள் தேவர்கள்யாவர்களுந் தங்களடியை வணங்கும்படியாக உடைந்தோடாநின்றஅலைகளையுடையகடலினிடத்துண்டாகும் அமிர்தமாகிய உணவினையருந்தினவர்களாய் கற்பகத்தருநீழலின்சுகத்தைமெய்யுறுகசாய விருப்பார்கள் (எ-று)

வானவர்தொழுதொழுவடவனமருவியமதியாளர் ...*
ஊனமதுறுவினைதுகள்படவளரொளியுருமேவி ...*
யானமர்கொடியினனமர்தருகயிலையினயல்மேவி ..*
ஞானமுனிலைபெறவுறைகுவர்பிறவியினையாரே.... ..*

(இதன்பொழிப்பு)

தேவர்களெல்லாந் தொழாநின்ற திருவாலங்காட்டை அடைந்த அறிவினையுடையவர்கள் துன்பம் பொருந்திய வினைகளானவை தூளியாகும்படியாக நாள்தோறும் வளராநின்ற ஒளிதங்கிய அழகானது- பொருந்திய, இரிஷபமெழுதிய, கொடியினையுடைய சிவபெருமான் வீற்றிருக்கின்ற சிவகயிலாயத்தி னிடத்துச் சென்று ஞானமாகிய முதன்மைப்பெற்ற நிலை பெறும்படியாகவசித்திருப்பார்கள் பிறவித்துன்பத்தில் வருந்தார்கள் —(எ-று) ()

(வேறு)

பேதையர்கற்றோர்காதலரெற்றேபிரிவாரென்*
றூதாமுற்றேகாதலடைத்தேயலையாமுன் ..*
வேதமுதற்றோம்போதமிகுத்தோர்விழைவாகுந் .*
தீதறுபற்றாமாலவனத்தேசெறிவீரே .. . *

(இதன்பொழிப்பு)

பெண்சாதியும் கற்றோர்களும் புத்திராளும் வெவ்வேறாகப் பிரியப்படுவார்களென்று அன்புபொருந்தி ஆசையடைந்து அலைவதற்குமுன்பு வேதத்துக்கு முதல்வராயும் போதத்தின் மிகுத்தவராயுமிருக்கின்றவர்கள் விரும்பத்தக்கக் குற்றமற்றமெய்பற்றாகிய, திருவாலங்காடடினிடத்துச்சேருவீர்கள்—(எ-று) (சரு)

ஆடகமுற்றார்மாடகமிக்கேளவையோவிச .*
காடகமுற்றேதீயுணவைத்தேகழியாமுன் *
நீடியாதக்கோர்யோகவரத்தோர்பெரியோர்சூழ ... *
ஆடனடத்தாலவனத்தேயடைவீரே .... .....*

(இதன்பொழிப்பு)

பொன்றிரளையும் பந்துக்களையும் மாடுகளையும் வீடுகளையும் பிருந்தசினேகங்களையும்நீங்கிசுடுகாட்டினிடத்துச்சென்றுஉடலை யக்கினியானது-உண்ணும்படியாகவைத்துககழிவதற்குமுன்புபெரு மையாலுயர்ந்த பெரியோர்களும் யோகீஸ்வரரும் சான்றோர்களு ஞ்சூழ்ந்திருக்கின்ற திருநடனத்தானாகிய இரத்னசபாபதி வீற்றிரு க்கின்ற திருவாலங்காட்டையடைவீர்கள்—(எ-று) (௬௬)

(வேறு)

சூலமேகொடுகாலனேவியதூதர்சேர்தருநாளை *
யாலதாபுறுமூலநோயிறவாழ்வுசேர்பதியாம் *
பாலலோசனனேலவார்குழலபாகனூர்கவிசார *
ஆலமேயுணவாயசீலனதாலமாவனமே *

(இதன்பொழிப்பு)

சூலத்தையே கைத்தலத்திற் சுழற்றிக்கொண்டு யமனால்விடப் பட்ட தூதாள்வந்து சேருங்காலையில் மயக்கமாகப் பொருந்திய மூலநோயானது- தீரும்படியாக வாழ்வையடையத்தக்க பதியாம் நெற்றிக்கண்ணனும் உமையவள்பாகனும் இருக்கின்றவனுங்கட லினிடமாகச்சேர்ந்த விடத்தையே அமுதமாக உண்டவனுமாகிய, சிவபெருமானது திருவாலங்காடென்னுந்தலம்—(எ-று) (௬௭)

(வேறு)

வாரிநடுவலைதிறவிவலியினொடுதனிகடையுமாலவனமே ...*
காரியவ்வருமமார்கணமிரியமிடல்கதுவுமாலவனமே .. ..*
நாரியொருபாகமுறுநாதன்மிடறமருமிடமாலவனமே [யே
வேரிசொரிபலமலர்கள் விரைபொழியவெறிகமழு மாலவன

(இதன்பொழிப்பு)

சமுத்திரத்தின் மத்தியிலே மந்தரகிரியை நாட்டி வலிமையு டனே ஒப்பிலாமற் கடையப்பட்ட விஷ்ணுவும் அவனுடைய, வர்

னமேயாகியமேகக்கூட்டத்துக்குச்சமத்துவமாகவந்த தேவகணர்
களும், ஓடிப்போகும்படியாகவலுவமையினாற்பற்றப்பட்டஆலகா
லவிடத்தின் வண்ணமாகவே யிருக்கும் பெருமைதங்கியும்
அழகுபொருந்தியு மிராநின்ற பார்வதியானவர் ஒருபாகத்திலவீற்றி
ருக்கின்ற சிவபிரானது- கண்டஸ்தானமானது- தேன்களைச்சொரி
யப்பட்ட பலபுஷ்பங்கள் வாசனையை வீசுதலால் பரிமளிகத்தக்
கதுஆலவனம் (எ-று) (சஅ)

( வேறு )

ஆலவனன்றலமாகரனே......... ...*
சீலமறைத்திறமாகரனே ...... ...*
காலனெனத்தெறுமாகரனே ......*
மாலவடுங்கணைமாகரனே. .........*

(இதன்பொழிப்பு )

திருவாலங்காட்டைத் திருத்தலமாக வீற்றிருக்கின்ற பரமசி
வனும் சீலம்பொருந்திய வேதப்பகுதிகளுக்கு இடமாகவிருக்கின்
றவனும் யமன்வந்தானென்று மார்கண்டேயர் சொல்லியவளவில்,
அந்த யமனைஉதைத்தருளியமகத்தாகியகண்டிதத்தை யுடையவனு
ம்,போர்செய்யும்படியாக விஷ்ணுவைப் பாணமாக வேந்திய பெ
ருமைதங்கிய கையையுடையவனும்(எ-று.) (சகூ)

கையினங்கமர்வேந்துங்கபாலனே ...... ......*
காமனங்கனல்வேந்துங்கபாலனே ......... *
தையல்காணநடந்திருப்பாகனே............ .... *
தாவும்வெள்விடையூர்திருப்பாகனே .. . *
மையமெலுஞ்சமலஞ்சக்கரத்தனே ... ... .......*
மாவினங்கைமலாஞ்சக்கரத்தனே ..... ...*
செய்யமேனிசெறிபூதியணியனே .............*
சேர்த்தவல்பாறுபூதியணியனே... ... ...*

(இதன்பொழிப்பு.)

கைத்தலத்தினிடத்து- அங்கு பொருத்தமாகத்தாங்கி யிருக்கின்ற கபாலத்தை யுடையவனும், மன்மதனானவன் அங்கு அனலினால் வேகத்தக்க உயர்வாகிய நெற்றியை யுடையவனும்,பார்வதிதேவியார் பார்க்கும்படியாக நடனத்தை விகற்பித்துக் காட்டுகின்றதிருமேனியை யுடையவனும் பாய்ந்து நடக்கின்ற வெண்மையாகிய இடபவாகனத்தின் மீது யேறிநடத்துகின்றபாகனானவனும்மயக்கமானது- இலைக்கும்படியான சுத்தபவித்திரமாகிய பஞ்சாக்ஷரத்தையுடையவனும்மஹாவிஷ்ணுவினது- அழகுபொருந்திய கையினால், அருச்சித்தபுஷ்பங்களுக்காகத்தந்தருளிய அழகியசக்கரத்தை யுடையவனும் சிவந்த திருமேனியினிடத்து- நெருங்கியவிபூதியினது- அழகையுடையவனும் தனது- திருவடியைச்சார்ந்தஅடியார்களுடைய சுவானுபவதனுக்குச் சமீபமானவனும்(எ-று) (ருய)

(வேறு.)

மழுவரவணிந்தவானேன்கோயிலாய்வகுத்துக்கொண்ட ...*
வழுகமாலங்காட்டினணிசிறிதுரைத்தாமாதி .. ... .. *
விழவொடுபூசையாற்றவெறுக்கையானிரப்புமேன்மைப். . *
பழையனூர்பதியின்மேவிப்பயில்வளஞ்சிறிதுசொல்வாம் .*

(இதன்பொழிப்பு )

இளமையாகிய சர்ப்பாபரணத்தைத் தரித்திருக்கின்றகடவுளாகியசிவபெருமான் தனக்குத்திருக்கோயிலாக நிர்மாணஞ்செய்துக்கொண்ட அழகுபொருந்திய, திருவாலங்காட்டின் அலங்காரங்களிலவற்றைச்சொன்னேம், அந்தவடாரண்யப் பெருமானுக்குஉச்சவங்களுடனே பூசைகளைச்செய்வதற்குத்தனத்திரள்களினாற் பூர்த்திசெய்யாநின்ற கனம்பொருந்திய பழையனூரென்னும், நகரத்திற்பொருந்தி பழகத்தக்க வளமைகளைச் சொல்வாம்—(எ-று) ()

(வேறு )

ஒளிநிரைக்கடலுலகுறுவளமெலாமொருங்கு ......*
பொலியவைத்திதுபுடவியிற்சுவர்க்கமாமென்னக் ...*

கலியகற்றியேகவினுறவடவனக்கடவுட் ... .... *
பலியுறப்படைத்தளித்தனன்பழையனூரையம் .... *

(இதன்பொழிப்பு)

சப்தநிக்கா நின்றசமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலுண்ணுள்ளவ ளமைகளெல்லாம் ஒன்றாகநிறையவைத்து இம்பூ- உலகத்தில் தேவலோகமாமென்றுகூறும்படியாக வடாரண்யத்தில் வீற்றிருக்கின்றதேவர்சிங்கப்பெருமான் நிவேதனங் கொள்ளும் பொருட்டாகப் படைத்து இரட்சித்தனன் பழையனூரில் வீற்றிருக்கின்றதரூவக்கு ழைத்தநாயகன்(எ-று) (௫௨)

சுடர்பரப்பியபன்மணிமாளிகைத்தொகுதி *
படரிருட்பகைதுரந்திடப்பருதியுமதியும் *
இடரகற்றினமினித்திசைந்திலோக்கலமென்ன *
அடரமைத்தபொற்றசும்புறுமரமியநெருங்க *

(இதன்பொழிப்பு)

ஒளிவிடுகின்ற பலரத்னசிகரமாகிய வீட்டின் கூட்டங்களா னவை பரவிய இருட்டாகிய பகையினை நீக்கிட சூரியசந்திராவிரு வரும் துன்பத்தை யொழித்தோம இனிமேல் தேய்ந்து- நோக மாட்டோமென்று சொல்லும்படியாக நெருக்கமாகச்செய்த பொ ற்கலசங்கள் ஸ்தாபிதநிருமகன்ற அரமியங்கள் நெருங்க---(எ-று) அரமியமென்பது- மேல்வீடுகளில் உலாவததகவெளியிடம்(௫௩)

பாலனத்திரட்சரிவையரளித்தபால்பாப்பி . .*
ஞாலனிக்குலமுருத்தபூந்தேன்பாந்தொன்றிக் .*
காலெனப்படர்ந்தெழுந்தநெற்காடுசெங்கழைக்கா *
டேலவோங்கிடக்களிறுமாய்க்கழனியாயிலங்கும் *

(இதன்பொழிப்பு)

வெண்மையாகிய அன்னக்கூட்டத்திற்கு ஸ்ரீசாதிகள்பலபொ ன் பாத்திரங்களிற் சொரிந்துவைத்த பாங்கலிற்சிந்திய பால்களுட

னே சப்த்திக்கப்பட்ட வண்டினங்களானவை, சொரிந்த புஷ்பம் தேனுனது- பரவி யதனுடன் கலந்து- வாய்க்காலாகப்பாய்ந்ததன் மையால்வளர்ந்த செந்நெற்காடுகள் கருப்பஞ்சோலைகள் யாவும், பொருத்தமாக ஓங்கிடயானையை மறைக்கத்தக்க நெற்களையுடைய வயலாகவிளங்கியிருக்கும்---(எ-று) (ருச)

பலவுதிக்கிலப்படலைசூழ்மாளிகைப்பரப்பா....... *
துலவுதிங்களூற்றொற்றுமையால்வடிவொளிப்ப , ..*
நிலவுமூகசிகலயர்ந்திடத்தண்மணிநிலைபோய்க் . ...*
கலவியுற்றவரிளைப்பறச்சுதைத்துளிகாலும் . ... *

(இதன்பொழிப்பு)

பல்தானங்களிலேயும் முத்தின்காந்தியானது- சூழப்பட்டமாளிகையின் பரப்பினால் சஞ்சரிக்கின்ற சந்திரனுனது- வந்து ஒருதன்மையினால்வடிவமானது- மறைந்திட்டபடியால் அச்சந்திரகிரணத்தையருந்துகின்ற சகோரப்புள்ளினது- மூக்கானது- வருந்தும்படியாகக் குளிர்ச்சிபொருந்திய மணிமயமாகிய மேன்மாளிகைக்குச்சென்று லீலைசெய்தவர்கள் ஆயாசமெல்லாம் ஒழியும்படியாகத்தனது- அமிர்தத்துளியைச் சொரியும்—(எ-று.) (ருரு)

மாமணித்திரண்மாளிகைசெம்மணிவகுத்துத் . . .*
தாமமுற்றியவரமியப்பெருகொளிசார்ந்து .... . *
சோமனற்கதிரொத்திருகொவின்வாய்த்துன்னி *
நாமமற்றனரெனவுலா நடந்திடுநாளும் ...... *

(இதன்பொழிப்பு.)

இரத்னக்கூட்டத்தினுற் கசிதஞ்செய்யப்பட்ட மேல்வீடுகளினிடத்தும் ஆணிமுத்துக்களாற் கோவையாகிய மாலைகளால்நிறையப்பட்ட மேல்வீடுகளில்உலவத்தக்கவெளியிடத்திலும், பெருகிய ஒளியானது பொருந்தி சந்திரகிரணத்தையும் சூரியகிரணத்தையும் ஒத்தலினால், இராகுகேதுக்களால் விழுங்கப்பட்டு அச்சூரியசந்திரரிருவரும் பெயரற்றுப்போனர்களென்று வழங்கிவருகின்றது நித்தியகாலமும் —(எ-று) (ருசு)

மாடமங்கையர்சாளரத்தூடுறுமதியை ........ *
யாடியென்றுகொண்டங்கையினணிமுகநோக்கி ....*
நாடிமற்றிதுகுறமுயற்கூடெனநகைத்து. . . *
வீடலுற்றயலவிளங்குமனத்திரள்விழையார் .. ..*

(இதன்பொழிப்பு)

மேல்மெத்தைகளில் வசித்திருக்கின்ற பெண்களானவர்கள் பலகணியின் வழியாகவருகின்ற சந்திரனைக் கண்ணாடியென்றெடு த்து- உள்ளங்கையில் வைத்துக்கொண்டு அழகுபொருந்திய முகங் களைபபார்த்து இஃது- சிறிதாகியமுயற்கூடென்று நகைசெய்தது மன்றி அச்சந்திரன் போன்றவெண்மையென்றுவாட்டமடைந்து- பக்கத்தில் விளங்காநின்ற அன்னக்கூட்டங்களிடத்திலும், இன்பந் தகாரர்கள்—(எ-று) (ருஎ)

(வேறு)

பன்மலர்த்துகண்மெய்புறக்காவினிற்பயின்றரம்பையர்வந்திம் ..*
மி ..னிமைத்தனவிருந்தெழுந்தாடியவிழுந்துமஞ்ஞையுமாட *
முன்னமுற்றவர்நோக்கியேமனையுறவொய்குழற்பொழின்மேவு *
தில்முயக்குணர்ந்தனமினித்தீண்டிலநீங்கெனமிகவாடி ........ *

(இதன்பொழிப்பு)

பலபுஷ்பப்பொடிகள் சரீரத்திற்படும்படியாகக்கற்பகவிருட் சத்தில்,வாசஞ்செய்து- தெய்வப்பெண்கள்வந்து- இந்தமின்னல் களானவை ப்ரகாசித்தனவென்று சொல்லும்படியாக நின்றும்ம ழுந்தும் நடனஞ்செய்தும்கொடிகளைப்போல் துவண்டுவீழ்ந்து ப மயில்களும் அவர்களுடனே நடனஞ்செய்யுங்காலத்தில் அத ற்கு முன்பாகச்சென்றவர்களாய் நாயகாள் அவ்விநோதங்களைப் பார்த்து தங்கள்வீட்டுக்கு வந்தவளவில் ஸ்ரீசாதிகள் வாசஞ்செ ட்பாநின்ற வுத்யானத்துக்குச் சென்றநினது இன்பத்தை அறிந் தன இனிமேல் உம்மைத்தீண்டமாட்டோம் நீங்கென்று மிகவா ட்டியபடி --(எ-று) (ருஅ)

ஊடலுற்றவர்பளிக்கறைமறைந்திடவுருநிழற்சுவைதோன்றும். *
பாடகத்தளிரடியிசைப்பணிந்தவர்பற்றிடப்பதம்பற்று ...... *
நீடழித்தவரயர்ந்திடநோக்கியேயிலங்குபொற்கொடியன்னார் . *
சேடியர்க்கிதுவியப்பெனநகைத்திடச்சேர்ந்தனர்திளைப்பாரால் *

(இதன்பொழிப்ப.)

நாயகாள்மீது- பிணக்குற்றமாதர்கள் பளிங்கினாற் செய்திருக்கின்ற அறையினிடத்தில் மறைந்த அளவில் அப்பெண்களது- தேகத்தினிழலினாற் சுவர்க்கத்தலத்திற் றோன்றுநின்ற பாடகமணிந்தத ளிரைப்போற்ற பாதத்தினமீது- நமஸ்காரஞ்செய்தவர்களாய பாதத்தைப்பிடிக்கும்போது- பிடிக்கவொட்டாமல் சமத்துவத்தையழித்து அந்தநாயகா வருந்தும்படியாகப் பார்த்துப் பிரகாசிக்கின்ற பொற்கொம்பிற்கு ஒப்பாகிய பெண்களானவர்கள் தோழியாகளுக்கெல்லாம் இதை ஆச்சரியமென்றுதோன்றிநகைசெய்யும்படியாகச்சேர்ந்தவர்களாய்போகிப்பார்கள —(எ-று) (ருகூ)

(வேறு)

மான்மறித்திரள்கன்றொடுகானத்துமருவி . *
யான்முலைப்பசும்பாலினையதனொடுமார்ந்தி . *
நீநிறசசுரிநெய்த்தலைப்பேதையரோடும் . . ... *
பான்மையுற்றிடநாடிடுமினமெனப்பயின்றே.... *

(இதன்பொழிப்பு)

மான்குட்டிகளின் கூட்டமானவை பசுங்கன்றுகளுடனேமுல்லைநிலத்துக்கு உறவாகச்சென்று பசுவின்முலையினிடமாக யிருந்துவராநின்ற அழகியபாலினை யக்கன்றுகளுடனே யருந்தி நீலநிறம்பொருந்தியுங்குருளாகியமயிர்கள்தங்கியும் நெய்ம்மணம வீசாநின்றதலையையுடைய பேதைவயதாகியயாதவப்பெண்களுடனே முறைமையானது- பொருந்தும்படியாகப் பார்த்துக்கொண்டு தம்மினமென்றுபழகியிருக்கும்—(எ-று) (கூம)

கொன்றையங்குழற்குளிரிசைச்செவிபுகக்கமழு ...*
மன்றன்முல்லையம்மாந்தரின்மான்கலைநுயின்று *
துன்றுமதத்தொடுதொடக்கிவெண்டயிர்கடைதுழனி *
யவாறுகோட்புலிமுழக்கெனவெருவியேயகலும் .*

(இதன்பொழிப்பு)

கொன்றைக்கிளையை ஒடித்துக்குழல்செய்து ஊதாநின்றகுளிர்ச்சியாகிய இசையானது- செவியினிடத்துப் புகும்படியாக பரிமளிக்கின்ற வாசனையையுடைய முல்லைமாலையையணிந்த அழகுபொருந்திய இடையர்களைப்போலக்கலைமானானது நிக்கிளாமெய்து நெருங்கியமதத்துடனேகயிற்றைச்சேர்த்துக்கொண்டுதயிர்கடைந்து அதிலிருந்தெழுந்த சப்த்தத்தைப்பகைத்துக் கொல்லப்பட்டப்புலியினது-சத்தமென்றுபயங் கொண்டேயோடிப்போம் (எ-று)

எறிந்ததூண்டிலின்வெடித்துமீமெழுச்சுபோர்வாளை *
செறிந்தகாந்திபைங்குலையிளநீர்க்குலைசிதறி . .. *
மறிந்துமாங்கனிவாழையின்றீங்கனியுதிர்ந்து . *
நிறைந்துமுண்டகநெரிதரப்புரிவொடுநிலவும் ..... *

(இதன்பொழிப்பு)

விசிய தூண்டிலைப் பிளந்துக்கொண்டு மேற்செல்லாநின்ற யுத்தஞ்செய்யத்தக்க வாளைமச்சமானது-நெருங்கியவொளியையுடைய அழகிய தடாகவோரத்தி லிருக்கின்ற இளநீர்க்குலையை உதிர்த்துக்கொண்டுதிரும்பி மாங்கனிகளும் மிருதுவாயும் இனிப்பாயுமிருக்கின்ற வாழைப்பழங்களும் உதிர்ந்து நிறைந்ததனைப்போல் அத்தடாகத்திலிருக்கின்ற தாமரைக்கமலங்களானவை கசங்கும்படியாக அன்புடனே பிரகாசிக்கும்-- (எ-று) (சாஉ)

வருக்கைமென்கனிவாழையிற்றீங்கனிபலவின் . . *
குருக்குமாம்புறச்சுடைக்கனியுடைந்துருகுபூந்தேனு . *

பெருக்குவீதியிற் பூநறுந்தாதொடும்பிறங்கி . ... . ... *
யுருக்குசெம்பொன் பொடிபொடிவீதிகளோங்கும்........ *

(இதன் பொழிப்பு)

பலாமரத்தினிடத்துண்டாகிய மெல்லியபழங்களும் அழகு பொருந்தியும் மதுரமாயும் இருக்கின்றவாழைப்பழங்களும் பலா மரத்தின்வேரினிடத்துக் குருத்துப்பூமியைத் துளைத்துக்கொண்டுபழுத்திருக்கின்ற முள்ளுகள் தங்கிய மேற்புறத்தையுடைய குடப் பலாக்கனிகளும் உடைபட்டு அதிலிருந்து ஒழுகிவருகின்ற கொழுமையாகிய தேன்வெள்ளமானது- வீதிகளிலிருக்கின்ற புஷ்பப் பொடிகளுடனே கூடிவிளங்கிய தன்மையால் உருக்கிவிட்ட சிவந்தபொன்னினது- மிகுந்தவொளியுடனே வீதிகளானவை வளர்ந்திருக்கும்—(எ-று) (சுரு)

அலங்குவீதியிற்சூல்வளையினந்தவிழ்ந்தார *
மிலங்கவீன்றிடப்பதிந்தவையெங்கணுமிலங்க . *
நலங்கொள்பூமகளையப்புறநகைமணியழுத்தி . *
ப்பாலங்குயிற்றியபொற்புறுபட்டமேபோலும்... *

(இதன் பொழிப்பு)

ப்ரகாசிக்கா நின்ற வீதிகளிலே கெர்ப்பத்தைஉடைத்தாகியசங்குக்கூட்டங்கள் தவழ்ந்துபோய் முத்துக்களைஒளிவீசும்படிசொரிந்தன அம்முத்துக்கள் பூமியிலழுந்தி எந்தவிடங்களிலேயும் ப்ரகாசத்தைச் செய்தலினால்தன்மைபொருந்தியிராநின்றமஹாலட்சுமிதேவியானவள்சந்தோஷிக்கும்படியாகப்ப்ரகாசிக்கின்றஇரத்னங்களைப்பதித்து தங்கமிழைத்து அழகுபொருந்திய பட்டத்தைப் போலிருக்கும்—(எ-று) (சுசு)

எண்ணிலபல்வளமினையனசெறிந்தெதிரகற்றி ... *
மண்ணின்மேம்படுபழையனூர்வடவனத்தமர்ந்த ..*
புண்ணியன்திருப்பூசனைக்கங்கமாப்பொலிய... ...*
விண்ணினூர்தொழவடவனஞ்சிறந்ததுவியப்பால் ...*

(இதன்பொழிப்பு.)

கணக்கிலாத பலவளமைகளும் இத்தன்மையனவாக நெருங்கி தனக்கு நிகரில்லாமல் உலகத்தினிடத்து மேன்பாடாகிய பழைய ஊரானது- வடாரண்யத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானது- பூசைக்குத் திரவியங்களாக நிறைந்திருப்பதனாலே தேவர்களெல் லாம்வணங்கும்படியாகத் திருவாலங்காடானது- சிறப்பை யுடைத் தாயினது- அதிசயமாக—(எ-று.) (கரு)

(வேறு)

நற்குணமொழுக்கஞ்சீலநடுவழியாமைநல்லோர் .. *
சொற்பொருளென்றுதேறித்துறந்தவர்புரந்துபேணல
கற்புடைமடவார்மைந்தர்கலந்துறக்கனிந்துசெல்வத் *
திற்பயில்வாட்கைமேவிவிருந்தினையென்றும்போற்றி *

(இதன்பொழிப்பு)

நற்குணங்களும் நற்செய்கைகளும் நடுநிலையழியாத தன்மை யும் பெரியோர் வாக்கியங்களைப் பொருளென்று தெளிந்து துறவி களைப்பாதுகாத்து விரும்புந்தன்மையும், பதிவிரதா தருமத்தையு டையவராகிய பத்தினிமார்களும், புத்திரர்களும், பொருந்தியிருக்கு ம்படியாகஅன்புமிகுந்து செல்வத்தையுடையமனையினிடத்துப்பழக த்தக்க வாழ்க்கையிற் பொருந்தினவர்களாகவிருந்தினர்களை யெக் காலத்தும் பாதுகாத்துவருவார்கள்—(எ-று) (கசு)

நிலமகடன்னைப்பேணிநிறைவளமேவியேரோ... ...*
டலமருதொழிலாலோங்கியரசினைக்காத்துவேளாண் *
குலமதிலுதித்தோர்கூறுங்குணமெலாமுடையராய *
பலர்புகழ்மறையோர்சூழவடவனம்பணிந்தேங்கும் *

(இதன்பொழிப்பு.)

பூமிதேவியை விரும்பி உபசரித்து நிறைந்தவளமைகளான வைவ பொருந்தி ஏரினுடனே சுற்றிவருகிறதொழிலினாலேவிருத்தி யடைந்து இராசாவையும்பாதுகாத்து வேளாளர்களுடைய குலத் திலே அவதாரஞ் செய்தவர்களுக்குச்சொல்லப்பட்டகுணங்களெல்லா வையும் உடையவர்களாகியபலபேர்களாலும் புகழத்தக்கபிராமண

ர்களுஞ் சூழ்ந்திருக்கும், வண்ணமாகத்திருவாலங்காடானது-மிகுந் தருணத்துடனேவிளங்குகும்(எ-று) "நிலமகள்தன்னைப்பேணி, என்றது- பூமியினிடத்து மிக்கவிருப்புடனே யெக்காலமுஞ்செய்பத்தகக மேவலைகளைச்செய்வதாம், (சுஎ)

(உதாரணம்,)

திருவள்ளுவநாயனார் "செல்லான்கிழவனிருப்பினிலம்புலர்ந்- தில்லாளினூடிவிடும், என்றனர். "வேளாண்-குலமதினுதித்தோர்கூறுங்குணமெலாம், என்றதற்கு, நாயனார் "தென்புலத்தார்தெய்வம் விருந்தொக்கல்தானென்றாங்- கைம்புலத்தாறோம்பறலை, என்றனர்.

(வேறு)

உன்னுவார்கதிபுற்றிடவொண்பிறை . ............. *
மின்னுவார்சடைவேந்தன்விழைவினாற் .... *
றுன்னுமாலவனப்பதிதூயசீர்... . . ......... *
பன்னுவார்முனைப்பாவம்பறிப்பரோ..... .... *

(இதன்பொழிப்பு.)

தம்மை நினைக்கத்தக்க அடியார்களெல்லாம் பரகதியைச்சாரும்வண்ணம் ஒளிபொருந்திய சந்திரனனது-ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்ற நீண்டசடாபாரத்தை யுடைய சிவபெருமானது- உச்சவங்களினால் நெருங்கிய திருவாலங்காடென்னுந் திருத்தலத்தினது- பரிசுத்தமாகிய சிறப்பினைச் சொல்லத்தக்க அடியார்கள் அங்குரத்தையுடைய, பாவங்களையைப் பறிக்கத்தக்கவர்கள்—(எ-று) (சுஅ)



# நைமிசாரண்யசருக்கம்

முற்றும்.



ஆக திருவிருத்தம் - அஉ.



இந்தமுறைபலவுமுணர்வியாதனெனக் .. .... . *
கனித்தமையாலியானுமோர்ந்தேன் ...... ........*
வந்தபரிசிதாகுநைமிசத்து................ ....... *
மாதவத்திரமனத்துட்கொள்வீர் . .. ........ ..*
சந்தமறைபிகழ்ந்தவர்களத்தியர்பாவி ....... .... .*
கள்சிரத்தைத்தவிர்ந்தார்தம்மு. .. .. . ......*
னெந்தைவடவனப்பெருமைமறைத்திடுவீ . . *
ரெனச்சூதனியம்பிச்சொல்வார் .... .. . .. ...*

( இதன்பொழிப்பு )

இவ்விதமாகிய, பரம்பரைமுறைகள். பலவற்றையும், அறிந்துவியாத மஹாமுனிவரானவர். அடியேனுக்கு, அநுக்கிரகஞ்செய்த தன்மையால, யானும், அறிந்தேன் வந்ததன்மை இப்படியாகும், நைமிசாரண்யத்திலிருக்கின்ற, மஹாமுனிவர்களே! அங்கீகாரஞ் செய்யக்கடவீர்கள் ஜோதிஷ்டத்தை யுடைய, வேதவிதிகளை நிந்தித்தவர்களுக்கும், பிரமஹத்திமுதலிய, அத்திகளைச்செய்தவர்களுக்கும், பஞ்சபாதகமுதலிய, மஹாபாதகர்களுக்கும், குருலிங்கசங்கமபத்திகளிற்சிரத்தைநீங்கியவர்களுக்குமமூல் பாக, எம்பெருமானாகிய, சிவபெருமானுக்குரிய, வடாரண்யத்தின்பெருமையை மொழியாமல், மறைத்துவிடுங்களென்று சூதபுராணிகர் சொல்லியதற்கு, நைமிசாரண்யத்து முனிவர்கள்கூறுவார்கள் (என்றவாறு) (உ)

வாகைநெடுவேற்றடக்கைச்சகஸ்திரா ........ .. *
னீகனுயர்மதிமார்கண்ட .... ......*
னீகையுறவினவவவற்கிசைத்தபடி.......... ..... .... *
யெமக்கிசைப்பாயெனச்சூத . .. ........ . *
ஞகைகயொடுமெவனுரைத்தாங்குரைத்திடுவன்...... *
கேண்மினெனவுவந்துகூறிப் . .......... ... . ...*
பாகைநிகர்மொழிபாகன்பதநினைந்து ...... ...... . *
வரன்முறையேபகரானுற்றான் ........ ... .......*

( இதன்பொழிப்பு. )

வெற்றிபொருந்திய, நீண்ட வேலைத்தாங்கியும், விசாலமாகியும், இருக்கின்றதையையுடைய, சகஸ்திராணீகனென்னும், பெயர்தாங்கிய, அரசனானவன் உயர்ந்தஅறிவினையுடைய, மார்க்கண்டேயமுனிவரைக்கூறும்படியாகக்கேட்க அவ்வரசனுக்குச்சொல்லியவண்ணம், எங்களுக்குப் போதிக்கக்கடவீரென்று சொல்ல சூதபுராணிகரானவர் சந்தோஷித்துடனே மார்க்கண்டேயமுனிவர் அருளிச்செய்தது போலவே சொல்லுகிறோம் கேளுங்களென்று இன்பமாகமொழிந்து- பால்போன்ற மொழியினையுடைய, பார்வதிதேவியாருக்குப்பாகனாகிய சிவபெருமான் பாதாரவிந்தங்களைக்கருதிக்கொண்டு பரம்பரையாகவே சொல்லத்தொடங்கினான்—(எ-று) (௩)

தன்னளிசேர்மார்க்கண்டன்பதம் ...... ...*
போற்றித்தசகஸ்திராவனீகன் .......... . ...*
பின்னவருந்தொழுந்தேவதேவன்மையினை .....*
விரித்துரைத்தாய்விழைந்திப்போதும். . . ....*
பன்னமருமொழிகாளிமேன்மையுஞ்சா . .....*
ராலவனப்பதியின்பண்பு... ... .. ........*
மன்னம்பெருமைபுந்தீர்த்தமேன்மையுநீ . ...*
யுரைக்கதியெனவருளுகின்றான் ..... .... ....*

( இதன்பொழிப்பு )

அளிசேர்ந்திபொருந்திய, கிருபைதங்கியிருக்கின்ற மார்க்கண்டேயா திருவடியைத் துதித்துக்கொண்டு தகுதியாகிய, சகஸ்திராவனீகனது- தேவதைகளுந்தொழப்பட்ட தெய்வத்தன்மைபொருந்திய, விசேடத்தை விசாலமாகச்சொன்னீர் இன்பமாக இப்போது, இசைபானது- பொருந்தியிருக்கின்ற சொல்லையுடையவளாகிட, சாமுண்டியினது- விசேடத்தையும், பொருந்திய, திருவாலங்காடென்னுந் திருத்தலத்தின் குணமும், சிவபெருமானது விசேடத்தையும் தீர்த்தவிசேடத்தையும், நீர்சொல்லுமென்றுகேட்டருளினன், சூதபுராணிகர் திருவாய்மலர்ந்தருளுகின் [illegible] — எ-று [illegible])

ஆதியுகந்தன்னின்முதற்பாதத்துமுதன் . *
முறைமையதனின்மாயச். . ... .. . *
சோதிவிழாவியற்றுதற்குப்பங்குனி............. ...*
யுத்திரத்திராத்தந்துணிந்துசூழ ...... *
வீதியலங்கரித்தரம்பைபூரணகும்பங் ... .. *
கருப்புவிளைவிறுத்திக் ... ... *
கோதினமதிக்குழம்பதனால்வேதியினை . . ..*
மெழுகியலர்குளிரச்சூழ்ந்து ........... .. *

( இதன்பொழிப்பு )

திரேதாயுகத்தில், முதற்பாதமுதன்மையாக, முறைநடையினால், தோன்றுந்துணையாகிய, பரமசிவனது- உச்சவத்தைச் செய்வதற்கு, பங்குனியுத்திரத் திருவிழாவிற்கு, துணிவாக ஆலோசித்தநகாலத்திலே, வீதிகளை அலங்காரஞ்செய்து- பூரணகலசங்கள கரும்புகள், இவைகளைத் தூருதமாகத் தொங்கவிட்டு குற்றமற்ற சந்தனக்குழம்பதனால், யாகமேடையைமெழுகி, புஷ்பமாலைகளைக்குளிர்ச்சியாகத் தரித்து—(எ-று) (ரு)

(வேறு)

பொதியவிழ்ந்தளிகண்மூசுமபுதியபூந்தாமமாலை *
கதிராமணிமுத்துமாலைக்கிடையிடைக்கலந்துநாற்றி *
யெதிர்கமழ்ந்திலங்குந்தூபதீபங்களெங்குமேற்றிப் *
பிதிர்செழும்பசியசெய்பொற்றோரணம்பிறங்கநாற்றி *

( இதன்பொழிப்பு )

கட்டுப்பாடாகிய, அருப்புமலர்ந்து-வண்டுகள்மொய்க்கப்பட்டபுஷ்பச்சரமாகிய, மாலையை ஒளிசெய்யாநின்ற இரத்னமாலைக்கும்முத்துமாலைக்கும் இடையிற்சேர்த்துத் தொங்கவிட்டு அதற்கு எதிராகப்பரிமளித்து ப்ரகாசிக்கின்ற தூபதீபங்களெங்கும் ஏற்றிவைத்து காந்தியாகிய, துளிகளையுடையதாயும், செழிப்பாயும்பசுமையாயும் இருக்கின்ற சிவந்த பொன்னரிமாலையாகிய, தோரணங்களை விளக்கத்தோடு செய்யும், பரபாகத் தொங்கவிட்டு—(எ-று) (சா

(இதன்பொழிப்பு)

அழகு மிகுந்திருக்கின்ற திருவாலங்காடென்னுந் திருத்தலத்திற்குவந்து சென்றுமுந்தீர்த்தமென்னும் பெயரையுடைய முத்தி தீர்த்தத்தையணைந்தவர்களாகஸ் தானஞ்செய்து-தங்கள்தங்கள் நித்ய கருமங்களை விதிப்படிக்குச்செய்துஒப்பிலாதபரம்பொருளாகியும் அன்பர்நிறைவாகிய வூர்த்தவதாண்டவஞ்செய்யும் ஒருமுதல்வனுகையும் விளங்காநின்றஇரத்னசபாபதியை அவர்பாகத்தில வீற்றிருக்கின்ற வண்டார்குழலியம்மையுடனேஅன்புமிகுந்துதுதிசெய்து-(எ-று)

அருமறைச்சிரத்தின்மேயவநந்தவாநந்தமாகி . *
கருமவியுயிர்கட்கெல்லாங்களைகணுய்க்கதியுமாகி *
பொருவருபுலகனைத்தும்படைத்தளித்துமையோடாடுந்
திருவமேயாலங்காட்டுச்செல்வமேபோற்றிபோற்றி *

(இதன்பொழிப்பு)

அரிதாகிய வேதமுடிவிற் பொருந்தியிராநின்ற ஆநந்தவிசுவாநந்தருணமாகியும், கற்பத்திலிடமாகயிருந்துநிறைந்த ஆன்மாக்களுக்கெல்லாங் கருணையாயும் பரகதியாயும், ஏகதுவரூபமில்லாவடங்களையும், சிருட்டித்து-இரட்சித்து- பார்வதியுடனேநிருத்தஞ்செய்தருளியசுந்தரமே திருவாலங்காட்டில் வீற்றிருக்கின்ற செல்வமேதுதிக்கக்கடவேன் துதிக்கக்கடவேன்---(எ-று) (௰)

இன்னதித்துணையதென்னுமியல்பினைமாற்றியின்ப. *
முன்னமாமொன்றதானப்பேருண்முகிழ்த்தகாலைப் . *
பன்னருமவிகற்பமாயபண்பெவருணர்வார்மற்று ....*
மன்னஞ்சேயாலங்காட்டுளப்பனேபோற்றிபோற்றி .....*

(இதன்பொழிப்பு)

இத்தன்மையதெனவும், இவ்வளவெனவும், சொல்லப்பட்ட சுபாவத்தை யொழித்து-இன்பத்தின் முதற்காரணமாய்நின்ற பெருமையிற்சிறந்த திருவருண்மலர்ந்தகாலத்தில சொலவதற்

யரியயற்கரியபெம்மானுடகவரவமீன்ற .... ... ... *
வெரிமணித்தொடக்கிச்செய்தகேடகத்திலங்கிமேவ . *

(இதன்பொழிப்பு)

கெடுதியில்லாத சிவந்தகண்களையுடைய, ரிஷபவுருவத்தை முயற்சியாக எழுதிமற்றவைகளையுந்தாட்கிய, சுமங்கலங்களையும் ஊரிய கொடியினை சிவபெருமான் சந்நிதானத்தில் ஆரோகணஞ்செய்து பிரமாவிஷ்ணுக்களுக்கரு அரிதாகிய, சிவபெருமானை வர்பொன்னினிடத்து நாகத்தினுற் றரப்பெற்ற ப்ரகாசமாகிய ரத்னங்களைப் பதித்துச் செய்த கேடகத்தினிடத்துவிற்றிருக்கச் செய்து—(எ-று) (டுச)

அருணமென்கமலக்கானமாமெனக்காளதிப . . *
பெருகொளிதழைபவீசன்பிறப் நருக்கணடுசிந்தை *
யுருவயபெரியோரன்பினுருவமாமடியாரபோற்றி *
வருமறைத்துதியினுற்றிவானவருடனேபோற்றி *

(இதன்பொழிப்பு)

சிவந்ததிறமாயும், மிருதுவாகவும், இராப்பிற அரவிந்தாரண்யமாமென்று சொல்லும்படியாககாளவிளங்கினுற்பெருகிய, ஒளியானது- யெரிகுதிறைந்திட சிவபெருமானது- சேதசோன்மயமாகிய, சொரூபத்தைத்தரிசித்து- மனமானது- உருகியபெரியோர்களும், அம்பேமூர்த்தமாகிய, அடியார்களுந்துதிசெய்து-நடசுகாதின்றவேதங்களைத் துதிபுரமாகச்செய்து- தேவகணங்களுடனே போற்றி செய்ய—(எ-று) (டுரு)

முரிருழல்மடவாரோதும்பரதநூல்முறையினும்ம் *
பரிபுரம்பயிற்றும்பாதம்பிதிநயம்பயிற்றும்பாணி *
யரிமகர்மழைக்கேணுகமதன்வழிநடப்பமின்னுக் . *
தெரிதரவசைந்தாங்கல்பற்செறிநடந்திருவிற்செய்ய *

(இதன்பொழிப்பு)

துவளப்பட்ட கூந்தலை யுடைய, தெய்வகணிகையர்கள் சிவபெருமானுல், திருவாய்மலர்ந்தருளிய, பரதசாத்திரவிதிப்படிக்கு

ஆடுகின்றனவாகிய, இலம்புகள் சத்திக்கின்றபாதங்களும், அபிநய ங்களைப்பழகத்தக்ககைகளும், உடையவர்களாய்த் தோகைகள்பொருந் தியுங்களிப்பாயும், குளிர்ச்சியாயும், இராநின்ற கண்களானவை அக் கையின்வழியாகநடக்கும்படியாய்- மின்னல்களானவைபுரு வங்கொண்டு அசைந்தனபோல இயம்பும்பொருந்தியநடனத்தை அல காரமாகச்செய்யவும்—(எ-று) (௰௬)

பல்லியமழையினார்ப்பப்பணிமலர்மாரிபோர்ப்ப *
நல்லியவிழவுளைய்பமளவுறநடந்தபின்ன... ....*
சொல்லியருணமாற்றியிறைவிழாமுடிந்ததன்றாள் *
பல்லியமேன்மைநோக்கவயாந்தனர்பரிந்தெல்லோரும்

(இதன்பொழிப்பு)

வாத்தியங்களானவை மேகத்தைப்போலசத்திக்கவும், குளிர்ச்சி பொருந்திய, புஷ்பவருஷிமங்களுமுடிகவிகொள்ளவும், நன்மையா கிய, உச்சவமானது-உலகமெல்லாம், அளவுசெய்யும்படியாகநடந்த பின்பு கருமையாகிய, அழகையுடைய கஸ்தூரிமுதலிய, பரிமளவ ஸ்துக்களால், அபிஷேகஞ்செய்து- சிவபெருமானுடைய, திருவி ழாவானது- பூர்த்தியாயினது- இத்திருவாலங்காட்டினில் நிருத்தஞ்செய்த பலவாத்தியங்களின் மேன்மைத்திறத்தினைப்பார்த்து- அத்திருந் தலத்தில், வசித்தனர்கள்—(எ-று) (௰௭)

அவையவையாகவங்கணமர்ந்தப விடமுமேவிச், . *
சுவைதரச்சுருதிமற்றைக்கலைகளின்றுணிவுங்கூறி *
கவையறுபொருளைநீக்கிக்கருத்தினையளந்துநோக் *
யிவையெனவுரைத்துநலகிப்புராணத்தினியல்புஞ்சொல்
[வார்

(இதன்பொழிப்பு)

பலபலசபைகளாக அவ்விடத்தில், அமர்த்திருக்கின்ற பலஸ்தா னங்களிலேயும், வசித்திருந்துக்கொண்டு மதுரமுண்டாகும்படியா கவேதமுதலிய வானமற்றைய கலைக்கியானங்களிலே நிச்சியித்திருக்

கின்ற பொருளைக்கூறி வஸ்துவை இரண்டாகப்பேசுகின்ற பொருளை நிக்கிரகஞ்செய்து- அக்கலைக்கியானங்களின் கருத்தினை யளவிட்டுப்பார்த்து- இத்தன்மையாயினவென்று சொல்லிபோதித்து- புராணத்தின் றன்மையுஞ் சொல்வாரகள்—(எ-று.) (௰அ)

அலர்தலைஞாலமீதிலளப்பருமேன்மைமேவி . . *
யிலகியவாலங்காட்டின்பெருமையுமிலங்குதீர்த்த *
நிலவியபண்புமீசனீர்மையுங்குழுமியெங்கும் . ...*
பலவியலாகவாகமலிமிகப்பரந்தவம்றே . .....*

(இதனபொழிப்பு)

விசாலமாகியா இடத்தையுடைய, உலகத்தில் கண் அளவிடுதற்கரிய, விசேடங்களானவை பொருந்திப் பிரகாசிக்கின்ற திருவாலங்காடென்னுந் தலத்தின் விசேடமும், விளங்கப்பட்ட தீர்த்தமானவை யொளிவிடுகின்ற குணமும், சிவலிங்கப்பெருமானது- தன்மையும், ஒன்றாகச்சேர்ந்து- பலபலதன்மையை யுடையனவாய் சத்தமானவை - மிகுதிப்பட்டுப் பரவின—(எ-று) (௰கூ)

புண்ணியப்புனிதமாகும்புராரிதன்னருளேபோலுந் *
தண்ணியலோசைகேட்டுத்தவத்திறன்மிக்கமேலோன்
பண்ணியன்மறையின்சென்னிப்பயிற்றிடும்பாத்தைநோ
கண்ணியனமலன்மேன்மைகருதியகடவுளானன்.(க்குங்

(இதன்பொழிப்பு)

புண்ணியத்தின் றன்மையாகிய, சுத்தபவித்திரமாகி, சிவபெருமானது- திருவருளைப்போல்குளிர்ச்சியும், இலட்சணமும், பொருந்திய, சத்தத்தைக்கேட்டு தபோபலத்திறல்,மிகுந்தபெரியோருமியும், கோஷிடிக்கின்ற தன்மையையுடைத்தாகிய, வேதமுடிவானது- சொல்லிநிச்சியஞ்செய்யப்பட்ட சுத்தசிவத்தை நோக்கத்தக்க கண்களின்சுபாவத்தையுடையவனுகியும்,விசேடக்குறிப்பையே எக்காலமும்,கருதியதேவனனையனும்—(எ-று) (உய)

மூதறிவுடைய பராயமுனிவன்சங்கிருதியென்பா *
னாதரவதனாற்போற்றியருமறைமுழுதுமோர்ந்து
மாதவவசிட்டனாதிமுனிவர்மகிழக்கூறி...(ர்ந்தே
யேதமில்குணத்தின்மிக்கீரென்னிடைக்கருணைகூ

(இதன்பொழிப்பு)

முதிர்ந்த அறிவினையுடையவனாகிய சங்கிருதிமுனிவனென்பவன் அன்பாகிய தன்மையினாற்றுதிசெய்து அரிதாகியவேத முழுமையுந் தெளிந்து மாதவத்தில் மேன்மையடைந்த வசிட்டர் முதலிய முனிவர்களெல்லாம் சந்தோஷிக்கும் படியாகச்சொல்லி குற்றமில்லாத நற்குணத்தினால் மிகுந்தமுனிவர்களே! அடியேனிடத்துகிருபைமிகுந்து.—(எ-று) (௨௧)

செங்கனியளிக்குமாலவனத்ததுசிறந்தமேன்மை... ... *
யங்கணன்காளியோடுநடஞ்செயற்காயவாய்மை . . *
பங்கயதீர்த்தமேன்மைபனைத்தையும்பகர்வீரென்னத்... *
தங்குருசங்கிருதிகூறினவிடத்தவத்தோர்சொல்வார் . *

(இதன்பொழிப்பு)

செவ்விய கனிகளைத்தராநின்ற திருவாலங்காட்டினது சிறப்பாகிய விசேடமும் சிவபெருமானானவர் காளியுடனே திருநடனஞ்செய்தருளிய காரணத்துக்குண்டாகிய நிச்சயமும் தாமரைமலர்களை நிறைத்திருக்கின்ற தீர்த்தத்தின்விசேடமும் இவைமுதலியபலவற்றையுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று அப்படி வசித்த குருவாகிய சங்கிருதிமுனிவர்சொல்லக்கேட்டகாலத்தில்முனிவர்கள் சொல்லுவார்கள் எ-று.

(வேறு)

முற்றுமோர்ந்தவனாமுனிக்குறையுடைமையின்மேம்பொறையாற் [illegible]
பற்றுநோக்கியுணர்த்தி[illegible]னவியபகர்வார் .. ...*
சுற்றுவார்சடைத்தேநாமறுமிருடிகளைப்பண்... ......*
கூற்றுவனைக்குறி[illegible]சுக[illegible]றைவற்கறைய.. .........*

(இதன்பொழிப்பு)

வேதாகமபுராணமுதலிய, சகலக்கியானங்களியாவையும், அறிந்தோர் பேரறிவினையும், உடையவரானீர் மிருதியாகிய, பொறுமையினுற் றேடக்காநின்ற தவத்தினுல், விசேடத்தையும் அடைந்திருக்கின்றநீர் கேட்ட கேள்விகளை சொல்லத்தக்கவர்யாரென்றால், சுற்றிக்கட்டியிருக்கின்ற நீண்டசடையையுடையவர்களாய்ச் சுற்றநின்ற திருக்கிறமுனிகணங்களின் மத்தியில், சகலகலைக்கியானங்களையும், வாசித்து வல்லமையுடையவனுனவன் கவுசிகமுனிவனென்று அந்தசங்கிருதிமுனிவனுக்குச்சொல்லினுர்கள்—(எ-று) (உரு)

வீறுமேவுசங்கிருதியுங்கவுசிகன்விதியாற் ......*
கூறுமாறுநற்குணத்தொடுவினவிடக்குறித்து *
வேறுபல்கலைவிரித்திடுவியாதனைவினவத்.... *
தேறுமாறெனக்குரைத்தனனவ்வகைதெளிநீ ...*

(இதன்பொழிப்பு)

பலகலையினுப், வலிமைபொருந்திய, சங்கிருதிமுனிவருப், கவுசிகமுனிவரானவர் விதிப்படிக்குச் சொல்லும்படியாகநல்லுணத்தோடே வினவிய காலத்திற், அவர் ஆலோசித்து வெவ்வேறுகிய பலகலைக்கியானங்களையுந் தெளிந்து விரித்துத் திருவாய்மலர்ந்தருளி, வியாசமுனிவனைக்கேழ்க்க, தெளியததக்க விதமாக அடியேனுக்குச்சொல்லினுர் அப்பொருளை நீ தெளிபககடவாய்—(எ-று)

ஐயநீங்கிடவியாதனைவடவனத்தணியா. .......... *
ணுய்யநல்கெனவியாதனீவுணர்கெனவுரைப்டான் ... *
பையராமுடிபபாரினிப்பதியெனப்பகர்சசி... . . *
செய்யவோர்பதியில்லையாலுயர்த்தியுஞ்சிறப்பால் *

(இதன்பொழிப்பு)

சந்தேகந் தீரும்படிசித்தம் வியாதமுனிவனைத்திருவாலங்காட்டின் அழகினை யடியேன்பிழைக்கும் பொருட்டாகத் திருவாய்மலர்ந்தருளுமென்று கேழ்க்க வியாதமுனியானவர் நீ யறியக்கடவாயெ

பிறரற்பலதோத்திரங்களைத்துதித்து அதவிலைகளை விலக்கிநற்பத த்தையடைவார்கள்— (எ-று) (உஎ)

குடவளைத்திரள்குலவியவடவனத்தீர்த்தம்... *
வடவையையனத்தீவினைத்திரளெலாமாய்க்கு *
மிடாகற்றிடமனத்திருளீர்த்தருளியும். . . *
நடனவிற்றிடுநாதனுமுவந்திடுநாளும் .. ... *

(இதன்பொழிப்பு)

குடம்போன்ற சங்குக்கூட்டங்கள் உலாவிக்கொண்டிருக்கின்ற வடாரண்யத்தில், விளங்கப்பட்ட முத்திதீர்த்தமானது- வடவாக்கினி யினாலே, பரிசிக்கப்பெற்றவைக்கோலைப்போலகொடியவினைத்திரளை யெல்லாம், பஸ்மீகரஞ்செய்யும். துன்பத்தைநீக்கிடும், மனதினிட மாகப்பொருந்திய, ஆணவமல இருளைப்பிளந்து- கிருபையைத் தந்தருளும், ஊர்த்ததாண்டவஞ் செய்தருளாநின்ற இரத்னசபாப தியும், சதமோஷிக்குப், நித்தியகாலமும்—(எ-று) (உஅ)

திருவிழாவணியும்பதிச்சீர்த்தியு. ...... *
மருவுமாறுவகுத்தனனிக்கதை.........., *
கருதுவார்கதிகாண்பரினிக்கரி . ...... *
சொருவுமானுபதேசமுணர்த்துவாய்... *

(இதன்பொழிப்பு)

திருவிழாவின் அலங்காரங்களும் வடாரண்யத்தின் கீர்த்தியும், உபகளுக்குப் பொருந்துகின்றவிதமாகச் சொல்லினேன் இந்த சரி த்திரத்தை நினைக்கத்தகவாகள் பரகதிநிலையை யறிவார்கள் இனி மேல், களங்கநீங்கிய விஷ்ணுவானவர். ஆதிசேடனுக்கு உபதேசஞ் செய்தருளியவிதத்தைக் கூறுவாம்—(எ-று) (உகூ)

---

## திருவிழாச்சருக்கம்

முற்றும்.

---

ஆகூ திருவிருத்தம் - ௬யக.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

# ஆதிசேடனுக்கு-

# மாலுபதேசச்சருக்கம்.



அளப்பரியவாலவனத்தாகிநடம் . *
புரிவதனுக்காதியேது... ... ... . . ...*
துளக்கமறவுரைத்திடுவன்றுணிதியென... ... ...*
வியாதமுனிசொல்வான்றாய . . ... , . *
வுளத்துவகைதருங்காதையீதரு ..*
முலகளந்தவும்பர்கோமால் . . *
வளத்துயானவருந்தமெனப்பாற்கடலிற் . *
றுயில்கூரும்வண்ணமெண்ணின். *

(இதன்பொழிப்பு)
௫

அளவிடுதற்கரிய, திருவாலங்காடென்னுந் திருத்தலத்திலே இரத்தினசபாபதியானவர் ஊர்த்ததாண்டவஞ் செய்தருளியதற்கு முதற்காரணத்தைக் குற்றநீங்கும்படியாகச் சொல்லுவோம் துணிந்து- நிச்சயஞ்செய்துக்கொள்வாயென்று வியாதமுனிவரானவர் சொல்லுவார். பரிசுத்தமாகிய, மனதினிடத்து- இன்பத்தைதருகின்ற சரித்திரமானது- இஃதாம், பூமியெல்லாம் அளந்த தேவர் பெருமானாகிய, விஷ்ணுவானவா வளமையினுல், உயர்ந்ததாகிய,பா

மயதத்துக்குநேராகவே க்ஷீராபதியில், நித்திரைசெய்கின்றவண்ணமதூமேலாசிக்குமளவில்—(எ-று) (க)

திவியப்பாற்கடலகலமுப்பதிரண்டிரண் . . . *
டிலக்கஞ்செறியுமங்கட் . . *
பூவியலுநற்புளினஞ்சுலைகத்திருள்போற் . . *
பொருந்துமதிற்புறமர்ந்தாரக . ... . ... *
காவியலுமலர்சூழ்ந்துகவினுறு ...... . . . ...*
பசுன்மீதுகனகத்தாற்றுந் . . *
தேவியலும்விமானமதுசதுரமுற...... . . ...*
மேழிலக்கஞ்செறிந்ததாகும் . . . .. *

(இதன்பொழிப்பு)

நீளக்களிறுல், அழகுதங்கிய, க்ஷீராபதியின் அகலமானது-முப்பத்திரண்டிலக்ஷம், யோசனைதூரம், நெருங்கியிருக்கும், பூமியினிடமாகவிலக்ஷணம், பொருந்தியிருக்கின்ற நல்லமணற்குன்றுகளானவை சுவர்ணப்பொடியாக இருளைப்போல் பொருந்தியிருக்கும், அம்மணற்பரப்புகளிடத்து-உத்யானத்தினிடத்து-அழகைச்செய்கின்றபுஷ்பங்களானவை சூழப்பெற்று அழகு,பொருந்தியிருக்கும், அப்பாற்கடல்மீது- பொன்னாற்செய்யப்பட்ட தெய்வத்தன்மையாரும்,விமானமானது- சதுரப்பாட்டில்,ஏழிலக்ஷம்யோசனையளவில்நெருங்கியதாகும்—(எ-று) (உ)

அத்தகையவிமானமீசையலங்கியபொற் . *
பரியங்கமலர்கா சூழ்ந்து...... ..... . .*
முத்தணியும்பலமணியுமொய்த்துறு . .. .... *
மங்கதன்மீதுமூரிப்பாந்த .... . ..... *
ளத்தியுறுசுருட்போதமூன்றிலக்க ....... ...*
நீளமதனகலம்பாதி .. . .. ....... ..*
பத்தியுறும்பணுமணிகளாயிரமுஞ் .. ... .. ...*
சுடர்தாவப்பரிக்குமன்றே... ... . *

(இதன்பொழிப்பு.)

விஷ்ணுவினது- தேகமானது- ஆதிசேடனுடைய, உடலாகி யசருள்பொருந்திய, பாயினிடத்து- நிறைந்தது பாகமுதலிய,மற் றஅங்கங்களெல்லாம் அத்தேகத்திற்கு, பொருத்தப்படும்படியாக, நீண்டகைகளும்,அழகிணைக்காட்டவும், ஒளிசெய்யப்பட்டகவுஸ்துவ ங்களும்,முடிகளும், சந்திராரங்களும், விடப்பெற்ற அழகுபொருந் திய, ஒளிநிறையவும்—(எ-று) (௫)

வையமாமகண்மலர்த்திருவிருபுறம்வயங்கப். . . *
பையராமணித்தகளிமேல்விளங்கொளிபயில... .*
வையரானவர்சனகனைமுதலியோரனேகர்.. ... ...*
செய்யசேவடிபரவிடத்துயின்றனன்றிருமால...... *

(இதன்பொழிப்பு)

பூமிதேவியும், தாமரைக்கமலத்தில், வசித்திருக்கின்றஇலக்ஷிமி தேவியும், இருபுறத்திலும் ப்ரகாசிக்கவும் படத்தை யுடைத்தாகிய ஆதிசேடனது மணிவிளக்கின்மீது பிரகாசிக்கின்ற ஒளியானது நி றையவும் முனிவராகிய சனகனைமுதலிய | அநந்தம்பேர்கள்சிவந்த பாதத்தைத் துதிசெய்யும்படியாகவும் நித்திரைசெய்தான் திரு மால்—(எ-று) (௬)

நாதமெல்லிசைநரம்புளர்நாரதன்முதலோர் . . . . *
கீதமல்கிடக்கடவுளர்கிளரொளிமலர்தூய்ப் . *
பாததாமரைபரவிடப்பல்லுயிர்தழைய ..... ..*
ஓதவாரிதியொலிசெயத்துயில்பவனொருநாள்.. .. ...*

(இதன்பொழிப்பு)

நாதமாகியமெல்லிய இசையைத்தரப்பட்டதந்தியைத்தடவி ப்பாடாநின்ற நாரதமுனிவர் முதலியபேர்களது கீதங்கள் யாவையு நிறைந்திடவும் தேவதைகளெல்லாம ஒளிவிடுகின்ற புஷ்பங்களைய ருச்சித்து திருவடித்தாமரையைத் துதிக்கவும் பலஜீவன் மாக்களுந்

செழிக்கும்படியாகவும் ஓதப்பொருந்திய சமுத்திரமானதுகோஷி டிக்கவும், நித்திரைசெய்கிறவனுகிய விஷ்ணுவானவன் ஒருதினத் தில்—(எ-று) (எ)

போகிமேற்புடைபெயர்ந்தன் னபுழுங்கினன்போல *
வாகமார்தருவேர்வையேய்ந்தாவுடனேயச் .... *
சோகமேவியசேடனுந்துணிவிலனுகி . .. ... *
மோகமிதரவினைவிடமுன்னினன்மொழிவான்.. ... *

(இதன்பொழிப்ப)

சர்ப்பத்தினிடத்துப் பகைத்திற்புரண்டவனுகப் புழுக்கத்தை யடைந்தவன்போல் சரீரத்திற் பொருந்திய வேர்வையானது- சே ர்ந்து அந்த ஆதிசேடனுடைய உடலமானது நனைந்தஅளவில்மயக் கத்தையடைந்துஆதிசேடனும் இத்தன்மையதென்றுநிச்சியஞ்செ ய்வதற்குந்தெரியாதவனுகி அதைக்கேட்கவேண்டிய ஆசையான துதன்னை வருத்தருசெய்தலினுல் ஆலோசித்தவனுக விஷ்ணுவை நோக்கிச்சொல்வான்—(எ-று) (அ)

பண்ணவர்க்கரசாகியபசுந்துழாயலங்க .... *
லண்ணலேயுலகடங்கலுமடிநிழற்செயுங்கார் .....*
வண்ணமேவியவரதனேமாயமேயமைத்து... . . *
ளெண்ணமேவிடவஞ்சினேனேதுவுமறியேன் ......*

(இதன்பொழிப்பு)

தேவர்களுக்கு அரசனுகியபசுமைபொருந்தியதிருத்துளவமா லையையணிந்தகடவுளே சகலஉலகங்களையும் பதநிழலிலேகொண்டி ருகின்றநீலமேக வணனைப் பொருந்தியவரதாரசப் பெருமானே மாயாவிநோதனே இதயமாமனா கமலத்தில் அடியேனுக்கு ஒன்னு ணமானதுஅதிகரித்த தன்மையால், பயமடைந்தனன் அந்தககார ணமுந்தெரியாதவனுனேனென்ற—(எ-று) (கூ

கருமுகிற்கிகாட்டுநின்மேனியிற்கதிந்து.. ....... *
பெருகும்வேர்வையாநனைந்ததென்னுடலமும்பெரியோய்

பருகுகாரணம்யாதெனப்பணிந்தேத்த......*
வெருவமலாட்புரிவிளம்புவங்கேளெனவிரிப்பான் *

(இதன்பொழிப்பு)

கரியமேகத்தின் ஒளியைக்காட்டாநின்ற உன்னுடைய திருமேனியினிடத்துக்கசிவை யடைந்து பெருகிவழிந்த வேர்வையிருமேலெயல் உடல்முழுதும்நனைந்தது எம்பெருமானே இப்படிவேயர்வையானது பெருகிவருதற்கு நிமித்தம் யாதென்று ஆதிசேடன் நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்தகாலத்தில் நீ பயங்கொண்டதைத்தணிக்கக்கடவாய் நாம்அக்காரணத்தைச் சொல்லுவாம் கேட்பாயென்றுவிரித்துச்சொல்வார்—(எ-று) (ம)

தெளிந்தமாத்திரையகவிருள்சிதைப்பதாம்ப்பசுவஞ் *
சரிந்துசாய்ந்திடத்தருவதாமிராகியந்தானும்.... *
புரிந்தசெஞ்சடைப்புண்ணியமூர்த்தியாய்ப்புகலாய்ப் *
பரிந்தபேர்கருள்பரம்பொருள்பசுபதிதானே......*

(இதன்பொழிப்பு)

தெளிந்தஓர்கணப்போதுக் குள்ளாகவே ஆணவபிருளைச்சேதிப்பதாகுமபசுபோதயாயவிருஷிசம்வேருடனேபறிந்துசாய்ந்திடும்படியான வரத்தைத் தருவதாகியஇரகசியமானதுதாமாகியும்கட்டியிருக்கின்ற சிவந்தசடாபாரத்தை யுடையபுண்ணியஸ்சொரூபியாயுடயாவர்களுக்கும் புகலிடமாயும் இருந்து அன்புசெய்தவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்யத்தக்கக் கடவுளானவர்சிவபெருமான்—(எ-று)

புடவிமேற்சிவபுரியெனப்புண்ணியப்பதியாம்... .. *
வடவனத்திடைமழமலியகந்தைகூர்காளி . ... . *
யடலவிததிடச்சண்டதாண்டவமெனவறையு .... . *
நடமவிற்றன்னசாலேகுழநானிலமோங்க .. ..... *

(இதன்பொழிப்பு)

உலகத்தினிடத்துள்ளத் திருக்கயிலாயமென்று சொல்லும்படியான புண்ணியக்ஷேத்திரமாகிய, வடாரண்யத்தில், கோபமும்

நிறைந்த ஆணவமும் மிகுந்திருக்கின்ற காளியினது வீரத்தன்மையைக்குறைப்பதற்காக சண்டதாண்டவமென்று சொல்லாநின்ற திருநடனத்தைச்செய்தனன் தருமச்சாலைகள் சூழ்ந்திருக்கின்றவுலகமெல்லாம்விர்த்தியடையும்பொருட்டு —(எ-று.) (௰௨)

முஞ்சிகேசியுமுன்னுகார்க்கோடனுமுதிர்ந்து . ..*
நெஞ்சிடங்கொளாவின்பொடுநெக்குநெக்குருகி.... *
வஞ்சிபங்கினன்செயுநடங்காணவானவருந் . . *
துஞ்சிலாஞானமாமுனிவருங்கின்னரர்தொகையும் .....*

( இதன்பொழிப்பு )

முஞ்சிகேசமுனிவராகிய, சுநந்தமுனிவரும் சிவபெருமானை யெக்காலத்தும், தியானிக்குஞ் சிந்தையையுடையவராகிய, கார்க்கோடனும், முதிர்ச்சியடைந்து மனதின் இடங்கொள்ளாத இன்பத்துடனே நெக்குநெக்குருகி வண்டார்குழலியம்மைக்கு நாயகனாகிய இரத்னசபாபதியானவர் செய்தருளப்பட்டத் திருநடனத்தைத் தரிசிக்கும்படியாக சகலதேவர்களும் சாக்கிராவஸ்தைநீங்கிய ஞானமுனிவர்களும்கின்னரர்களது கூட்டமும்—(எ-று) (௰௩)

முண்டகத்தினன்முதல்வனுமிந்திரன்முதலா . *
பெண்டகத்துறுபாலருமீண்டிடயாவும்... . . ...*
மண்டநாயகனணிநடங்காண்பதற்கடைந்து... .. . *
சண்டதாண்டவமிசைந்திடத்தாளமார்சதியால் ... . .*

(இதன்பொழிப்பு )

தாமரைக்கமலத்தில் வீற்றிருக்கும் பிரமதேவனும் இந்திரன் முதலாகிய அஷ்டதிக்குக்குந் தலைவராகப்பொருந்தியிருக்கின்றபாலகரும், நெருங்கியதன்மையினால் அடியேனும் தேவாசிங்கப்பெருமால் செய்தருளாநின்ற அழகுபொருந்திய திருநடனத்தைத் தரிசனைசெய்நவதற்காகத் திருவாலங்காடென்னுந் திருத்தலத்திற்குச்சென்று சண்டதாண்டவ மென்னும் நிருத்ததாண்டவத்திற்குப்பொருத்தமாகத் தாளப்பிரமாணங்க ணிறைந்த சதியின்வழியாக—(எ-று.) (௰௪)

மேகமாதிரப்படகத்தைவிசித்துடன்முழக்க... ... *
வாகயிவ்வணம்வெயர்த்ததுபெயர்த்தறியென்ன..... *
நாகவேந்தனுமகிழ்ந்துளநாரணனென.. .... *
ஏகநாதனைத்துதித்தனன்பணிந்திதுவிசைப்பான் ..*

(இதன்பொழிப்பு)

அதிவேகநிறையும்படியாக மத்தளத்தைக்கழுத்திற் கட்டிக்கொண்டு நடனத்துக்கு உடன்பாடாகவே அடித்தவிறல், தேகம் இவ்விதமாக வேர்வையடைந்தது- இதனைப் பகுத்தறிவாயென்று சொல்ல ஆதிசேடனும், மகிழ்ச்சியடைந்து- திருமாலாகிய கடவுளை துதிசெய்தவனாக நமஸ்காரஞ்செய்து- இவைதச்சொலவான் எ-று

அயனையீன்றுலகளித்திடுமையனேயடியேன் .. *
மயரவநீங்கிடவடவனப்பெருமையுமற்றுப் *
பயனளித்திடப்பரன்செயுந்தாண்டவப்பரிசு .. . *
நயனமோடெனநாரணனென்றெனநவில்வான்... .... *

(இதன்பொழிப்பு

பிரமதேவனைப்பெற்று உலகங்களை இரட்சிக்கின்ற ஐயனே அடியேன் மயக்கமானது நீங்குமாறு வடாரண்யத்தில் விசேடமுமற்றவைகளும் மோக்ஷலாபமுந்தந்தருளு நிமித்தஞ்சிவபெருமான்செய்தருளிய நிர்த்ததாண்டவத்தின் றன்மையம்எனதுசெவி யல்செவியினிடத்தில் உபதேசஞ் செய்தருளுவீரென்றுகூற-திருமாலானவர் நல்லதென்று சொல்லுவார்—(எ-று.) (௯௬)

(வேறு)

நாற்றிசையும்போற்றிசெயுமாலவனைப் ........ ... *
பெருமையினைநாதனல்லாற்......... .. ... . *
போற்றியெவர்புகழ்ந்துரைப்பார் ... ........ *
புனிதமதிற்புனிதமதாய்பொருவற்றோங்கி ....*

# சேடனுக்குமானுபதேசச்சருக்கம் ஏக

மேற்றிகழுப்புண்ணியத்திற்பண்ணியமாய் . *
வியனுகிவீறும்பாச *
மாற்றியருளளித்திசன்மலரடிக்கீழ்ப் *
பேரின்பவாழ்வுசேர்க்கும். *

(இதன்பொழிப்பு)

நான்குதிசையிலுள்ளோர்களும், போற்றிசெய்யப்பட்ட திருவாலங்காட்டின் மகத்வத்தை சிவபெருமான் அஃநு ...யிசெய்துயாவர்புகழ்ந்து சொல்லத்தக்கவர்கள சுத்தத்துக்குள்ள சுத்தமாகவும், மேன்மையாக விளங்கப்பட்ட புண்ணியத்துக்குள்ள புண்ணியமாகவும் மேன்மையைத்தாங்கி யெககாலமுந் தொந்தமாக வளாந்துவராநின்ற பாசவினைகளைக்கழித்து திருவருளைத்தந்து பரமசிவனாது சரணாரவிந்தத்தின்கீழ் அழிவிலாத பேரின்பமாகிய வாழ்விற்கூட்டும்.—(எ-று.) (யஎ)

சானுவியேமுதற்றீர்த்தத்தன்னினுமே *
தருமேன்மைத்தன்மைமேவி .. *
யீனமதாம்வினையனைத்துமிறுதறுமுத்தி *
யீய்ந்திடலான் முத்தித்தீர்த்தந் *
தானமருள்தாருந்தண்டகாரணிய *
நடுசார்ந்துவைகு .. . *
மூனமுறுங்குட்டாதியொழிக்குமுளந் *
திருக்கிரிமொளியுமாகும் .. . *

(இதன்பொழிப்பு)

கங்கைமுதலிய தீர்த்தங்களைப்பார்க்கினும் மிகுந்தவிசேடமுணம் பொருந்தியீனமாகிய தீவினைகள் யாவையும் போக்கி மோட்சத்தைத் தருவதினாலே முத்தித்தீர்த்தம் என்றுபெயரான அத்திருவாலங்காட்டிலுள்ளாகிய தண்டகாரண்யத்துக்குமத்தியிற்பொருந்தியிருக்கும் விக்கினமாகிய, குஷ்டரோகமுதலிய, வியாதிகளை நிக்கிரகஞ்செய்யும் மனதிற்பொருந்திய ஆணவமலவிருளைச்சேதிக்கும், ஒளியையுஞ்செய்யும்—(எ-று) (யஅ)

வேதியர்தங்கொலையாதிவெய்யவினைத் .. *
தொகையாவும்விளியநீக்கும் ....... .... . *
ஆதியருளுருவாகுந்தீர்த்தமென........ ........*
வறியாதேயடியாடினுஞ் . .......... .. ..*
சோதியுலகளிக்குமினிச்சொல்லுவதே .. .......*
தாலவனந்தொக்குமேன்மை ..... .. .... . *
பாதிமதியணிந்தவனிங்குறுவதற்குங் .... . . *
காரணமியாம்பகரகேணீ... .... ....... . *

(இதன்பொழிப்பு)

பிரமஹத்திமுதலிய கொடியவினைக்கூட்டமெல்லாம் கெடும்படியாகநீக்கிவிடும் சிவபெருமானது அருள்வடிவமாகியதீர்த்தமென்றுமனதுக்குத் தெரியாமல் ஸ்தானஞ்செய்யினும் சிவகயிலாயத்தைக்கட்டளைசெய்யும்இனிமேற்சொல்வதென்ன திருவாலங்காட்டினிடத்து நிறைந்திருக்கின்ற மேன்மையையும் அர்த்தசந்திரனையணிந்தவனாகிய சிவபெருமான் இத்தலத்திற்கு எழுந்தருளியதற்குக் காரணத்தையும்நாம்சொல்லுகிறோம்நீங்கள்—(எ-று) (௰௬)

(வேறு)

சூலங்காட்டியகரதலமுடையவந்ற்சோதி . *
யாலங்காட்டியர்பெருமையையரிவிரித்தளித்துப் *
பாலங்காட்டியதெனுமுடற்சேடற்குப்பரிவான் *
மூலங்காட்டிடச்சுனந்தனுக்கரன்பணிமொழியால் . *

(இதன்பொழிப்பு)

திரிசூலப்படையைத் தெரிவிக்கின்ற அஸ்தத்தையுடைய, நல்லசோதிமயமாகிய, தேவர்சிங்கப்பெருமான் வீற்றிருக்கின்ற வடாரண்யத்தின் உயர்ந்தபெருமையை விஷ்ணுவானவர் விசாலமாகச் சொல்லிபூமியினது- நீளத்தையும், அகலத்தையும், இவ்வளவென்று

தெரிவித்ததென்னுந் தேகத்தையுடைய ஆதிசேடனுக்கு மிருந்த அன்பினால் திருவாலங்காட்டின் ஆதிகாரணத்தைத்தெரிவிப்பதற் காககுணந்த முனிவருக்கு சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளி யவிதமே—(எ-று) • (உ0)



ஆதிசேடனுக்கு,

## மாலுபதேசச்சருக்கம்,

முற்றும்.



ஆக - திருவிருத்தம் - ஙஙஎக,







# சிவமயம்.

# திருச்சிற்றம்பலம்,

## சு நந் தர்

# உபதேசச்சருக்கம்.

பாசவேரறப்பயில்றிடுஞ்சுனந்தற்குப்பரிவா .... *
லீசனல்கியவடவனத்தியல்பினையினிநா .. *
யாசகன்றிடுவெநந்தனிற்கூறுகுவமென்றே . ...*
வாசமார்வனமாலைமால்கேளெனவுரைப்பான் . .. .*

(இதன்பொழிப்)

ஆணவமலவேரறும்படியாகத்தவஞ் செய்யப்பட்டசுநந்தமுனிவருக்கு அன்பினால், சிவபெருமானனுக்கிரகஞ்செய்தருளிய, வடாரண்யத்தின் தன்மையை இப்பமாசு குற்றந்தீர்ந்த ஆதிசேடனே உனக்கு நாம்சொல்லுவோமென்று பரிமளம்பொருந்திய, திருத்துளவமாலையையணிந்த விஷ்ணுவானவர்கேளென்றுவகைவகையாகச சொல்லுவார்—(எ-று) (க)

ஆருயிர்த்தொகையளித்திடுமெங்கணைனருளோ *
பேருருக்கொடுபிறங்கியபோற்றியதெனவுட *
சீருடைச்சிவபுண்ணியந்திரண்டெனச்சிறந்து ... *
நீருடைப்புவிநிகழ்த்தியதவத்துருநிகர்க்கும் ... *

(இதன்பொழிப்ப)

நிறைந்திருக்கின்ற ஆன்மகோடிகளையெல்லாங்காத்தருளிய சிவபெருமானது திருவருளானது ஒப்பற்றபெரிதாகியவுருவங்கொண்டுப்ரகாசித்துப் போற்றியதென்று சொல்லவும் சகலசிறப்பையுமுடைய சிவபுண்ணியந்திரண்டுநின்றது போலவும் மேன்மையடைந்தசமுத்ரஞ்சூழ்ந்த பூமிதேவியார் செய்தருளிய தபோபலத்தின்வடிவத்தை யொத்திருக்கும்—(எ-று) (உ)

துரியமுங்கடந்தகண்டபூரணமதாய்ச்சுருதி ... ...... *
யரியயன்றொழற்கரிவருமானந்தவமலற் .... ..*
குரியதாய்ப்பிரிவரியதுகயிலையென்றோதும். .*
பெரியமால்வரைபெருந்தவருளமெனப்பிறங்கும் . *

(இதன்பொழிப்பு.)

துரியாவஸ்த்தையுங்கடந்து கண்டமின்றியகண்டபரிபூரணமாகி நான்குவேதங்களும், விஷ்ணுபிர்மாக்களும் தொழுவதற்கு, அரிதாகிய, ஆநந்தவடிவப்பொருந்திய, சிவபெருமானுக்கு, சுதந்தரமாக நீக்கமில்லாதிருக்கின்றது- ஸ்ரீகயிலாயமென்றுசொல்லத்தக்க பெரியமலையானது- மேன்மைபொருந்திய, முனிவர்களது- உள்ளத்தைப்போல், ப்ரகாசிக்கும்—(எ-று) (ங)

நறியசந்தநிரேககலாரதநிபுன்னைகங்.....................*
குறிய நங்குமங்குருக்கத்திவகுளமேகோங்கு .. .. •••*
மெறியிலைப்பலயாசினிபாதிரிம்தமா.. . . . . .*
வெறிசெய்கூவிளஞ்சமிமுதன்மிடைந்துறுமெங்கும் *

(இதன்பொழிப்பு)

பரிமளம்பொருந்திய, சந்தனவிருட்சங்களும், தேக்குவிருட்சங்களும், புட்பங்களமைந்த ஆம்பிரமரங்களும், புன்னைமரங்களும், சிறிதாகிய, குங்குமமரங்களும், குருக்கத்திமரங்களும், மகிழமரங்களும், கோங்குமரங்களும், நெருங்கிய யிலைகளையுடைய, பலாமரங்களும், ஈரப்பலாமரங்களும், பாதிரிவிருட்சங்களும், மாவிருட்சங்களும், பரிமளத்தைச்செய்யாநின்ற வில்வவிருட்சங்களும், சமித்துக்களும், ஆகிய இவைமுதலிய, விருட்சங்களெல்லாம், நெருங்கியிருக்கும், எந்தஇடங்களிலும்—(எ-று) (ச)

கடிகமழ்ந்திடுகற்பகஞ்சண்பகங்கலந்த .. ..... .. .*
கொடிமலர்ந்திடுமுல்லைமல்லிகைமுதற்குழுமி . •*
முடிவறுங்களிமுதியமலரொடுமொய்த்துப் . *
பொடியுறுந்துகள்புதியதேன்பொழிந்துபோதணியும் .

(இதன்பொழிப்பு)

பரிமளத்தை வீசாநின்ற கற்பகவிருட்சமும், சண்பகவிருட்சமும், பூக்களைக்கொண்டிருக்கின்ற கொடிகளினிடத்துப் பு

ஷிபிக்கப்பட்ட முல்லைச்செடிகளும், மல்லிகைச் செடிகளுமாகிய இவைமுதலிய புஷ்பவருக்கங்கள்யாவையும், நிறைந்து- முடிவில்லாத வண்டுகளானவை மொய்த்திருக்கின்ற புஷ்பங்களுடனே நெருங்கிப்பொடியாகப்பொருந்தியமகரந்தங்களும், புதியதேன்களையுஞ்சொரிந்து- புஷ்பங்களைப் பொருந்தியிருக்கும்,—(எ-று.) (௫)

செங்கண்வேழமுஞ்சிங்கமுஞாளியுஞ்சினத்தாற்...........*
பொங்குவேங்கையுங்கரடியும்பொறியுடற்கலையுந் . *
தங்குகோலமும்வருடையுமான்களுந்தழைத்துந் . . . ...*
துங்கமார்தருமரையொடுகவரியுந்துன்னும் . . *

(இதன் பொழிப்பு)

சிவந்த கண்களையுடைய யானைகளும், சிங்கங்களும், யாளங்களும், கோபத்தினால் மிகுந்தபுலிகளும், கரடிகளும், புள்ளிகள் பொருந்தியதேகத்தையுடைய கலைமானகளும், தங்கியபன்றிகளும், ஆடுகளும், மான்களும், உயர்வு பொருந்தியிருக்கின்ற மரையென்னுமிருகத்துடனே கவரிமான்களும் பொருந்த—(எ-று) (௬)

ஆடுமஞ்ஞையுங்குயில்களுங்கிள்ளையுமனமும். *
பாடும்பூவையும்புறவுமெலிந்திரைனையயின்று. *
மாடுவீழ்தருமருவிகண்மணிதிரைபரப்ப .. ....... *
நீடுபேரொளியிந்திரவில்லெனநிகழும் *

(இதன்பொழிப்பு)

கலாபத்தைை விரித்துக்கொண்டு நிர்த்தஞ்செய்யாநின்ற மயில்களும், கோகிலங்களும், கிளிகளும், அன்னங்களும், பாடுகின்ற மைனாவாய் புட்களும், புறாக்களும், என்று சொல்லப்பட்ட இவைகளெல்லாம் பழகியும், பக்கத்தில் வீழாநின்ற அருவிகளெல்லாமுத்துக்கூட்டங்களையெங்கணும், பரப்பி நின்று நீண்ட பெரிய ஒளியானது இந்திர தனுவைப்போலப்பிரகாசிக்கும்—(எ-று.) (எ)

வாவியெங்கணுமடுமலர்த்தாமரைக்குமுதங் . ... *
காவியானவென்றிவையனவெறிமணங்கமழுந் ...... .. .. *
காவிவண்டினமுரன்றுதேனருந்தியேதார. ...... . ..*
மேவுபண்செயவிளங்கிடும்வெள்ளியங்கிரியே .. ........*

# சுநந்தனுக்குஉபதேசச்சருக்கம். எஎ

மான்முதற்பெருந்தேவர்கள்வயங்கரன்மேனி .. ...*
கான்மலர்த்தியபெருகொளிப்பெருக்கினிற்கலந்தே. *
நான்மறைச்சினந்தந்தவாநந்தமாய்ஞான... .........*
மேன்மையுய்த்திடும்பரமெனும்விழைவுடன்விதியால்*

(இதன்பொழிப்பு.)

விஷ்ணுமுதலிய பெருந்தேவதைகள்யாவரும் ப்ரகாசிக்கின்ற சிவபெருமானது திருமேனியானது வாசனையுடனே மலர்த்திய பெரிதாகியஒளிப்பிரவாகத்திலேசேர்ந்துநான்குவேதங்களினது அடையாளங்களைகாட்டியஆநந்தமாகிஞானவிசேடத்திற் செலுத்திவிடப்பட்டபரம்பொருளெனும் இன்பத்தோடேவிதிப்படிக்கு (என்றவாறு) (யரு)

சனகனேமுதலாகியதவத்தினர்போற்றி .. .......... *
யனகவற்புதவங்கணசங்கரவமல ... . .. . . ... ..*
பனகபூடணபராபரபங்கயனுய ..............  ... ...*
கனகசாயகநாயக்கதியருளென்றெ........ .. .... ...*

(இதன்பொழிப்பு)

சனகர்- சனற்குமாரர்- சநந்தரர்- சனாதரர்- இவர்கள்முதலிய முனிவர்களெல்லாம்துதிசெய்துஅனகனே அற்புதனே அங்கணனே சங்கரனே அமலனே நாகாபரணனே பிரமதேவனுகிய பொன்வில்லையுடையவனே கடவுளே பரகதிதந்தருளுமென்று சொல்லி (எ-று)

ஊறுதீஞ்சுவைதயொளியுருக்காண்டலுமுருகிப் ...*
பேறதாமருளுருவுறப்பெருக்குமின்புருவாய்ச் .... *
கூறுநாமொழிகுழறிமெய்சிலிர்த்தகக்குமுறுமே ,*
யாறுபோல்விழியளித்திடுமபுனலொடுமயமா ..*

(இதனபொழிப்பு)

ஊறுகின்ற மதுரம்பொருந்திய அமிர்தம்போன்ற ஒளியையுடைய சிவபெருமானது வடிவத்தைக்கண்டவளவில்மனமுருகி பெரியவாழ்வாகிய அருள்வடிவமாகப் பெருகத்தக்க இன்பஸ்சொரூபமாகி வசனிக்கின்ற நாவின் சொற்களெல்லாங்குழறியும்தே

(இதன்பொழிப்பு)

தடாகங்களெங்கும், தேன்களையுடைத்தாய் மலர்ந்திருக்கின்ற தாமரைகளும், அல்லிமலர்களும், காவியாகிய நீலோற்பலங்களும் என்று சொல்லப்பட்ட இத்தன்மையவான பக்ஷிபங்கள்மிகுதியாகி யமணத்தைவீசவும், பாய்ந்து வண்டின் கூட்டங்களானவை சத்தித் தமதுக்களைப் பானஞ்செய்து நாவென்றுத் தானத்திற்பொருந்திய இசைகளைப்பாடவும், ப்ரகாசித்துக் கொண்டிருக்கும், ஸ்ரீகயிலாயகிரி—(எ-று) (௮)

ஆயமால்வரையுச்சியிலாடராவேன்ற . . . . . . . . *
பாயசெங்கதிர்ப்பசுமணிபசியபொன்னமைத்தே. ....*
யேயவாக்கியகோயிலகமேகோயிலுறுனிலங்குந் .... .*
தூயபேரணிச்சுடர்விரித்திருளெலாந்துணிக்கும் *

(இதன்பொழிப்பு.)

இத்தன்மையான- பெருமைபொருந்திய, வெள்ளியங்கிரியின் உச்சியில் படம்விரித்தாடப்பட்ட சர்ப்பமானது- தரப்பெற்றபாவிய, சிவந்தகதிர்களையுடைய, பெரிதாகிய, இரத்னங்களைப்பசிய பொன்னிறைலிழைத்துப்பொருந்தமாகச்செய்தருளியதிருக்கோயில், ஒன்றிருக்கின்றது- அக்கோயிலினிடத்துப்ப்ரகாசிக்கின்றபரிசுத்தமாகிய, பெருமைபொருந்திய ஆபரணமானது- கிரணத்தைவிரித்து இருளையெல்லாந்துலக்கும்---(எ-று) (௯)

மேருவுச்சியின்விரிகதிர்நிறைமதிபரந்த .......... *
மாருருக்கொடுவயர்ந்தலவரியணைமீது . ... .*
பாருமாகமும்படரொளிவிரித்திடவமர்ந்தான் .*
சாருமாகதர்சாரணர்துதித்திடத்தலைவன் .. .. *

(இதன்பொழிப்பு)

மஹா மேருவின் சிகரத்தில் விரியத்தக்ககிரணங்கணிறைந்தசந்திரனானது அநந்தமென்னும், கணக்கினால் நிறைந்த வுருவத்தைக்கொண்டு வீற்றிருந்தது போல பூலோகமும், தேவலோகமும், பரவிய ஒளியைச்செய்யும், படியாகவீற்றிருந்தான் அருகிலேசார்ந்தமாகதர்களும், சாரணரும், ஸ்துதிசெய்யும்படியாக சிவபெருமான்.

(எ-று)மாகதர்என்பவர்சுவாமியினது- வீரத்தைப்பாடுவர்கள் என்றறிக (ய)

தேவர்சாதியிற்சிறந்தவர்முனிவரர்திசையின் ... ... *
காவலர்மேயவாசித்தர்கந்தருவர்களியக்கர் ........ *
பூவின்மேவினன்முகுந்தனேமுதலினோர்புகுந்தே... *
யாவலாற்பணிந்தடியிணைபரவியேநெருங்க ...... *

(இதன்பொழிப்பு.)

தேவர்வமிசத்திற் சிறந்தவராகிய இந்திரன் முதலியபேர்களும், முனிவர்களும், அஷ்டதிக்குப்பாலகரும், சித்தர்களுங்,காந்தர்வர்களும்கின்னராளும்,தாமரைக்கமலத்திற் பொருந்தியிருக்கின்றவனாகியபிரமதேவனும்,விஷ்ணுவும், ஆகியஇவர்கள்முதலியபேர்களியாவர்களும், சன்னிதானத்துக்குவந்து பேரன்பினாற்பணிந்துஉபயபாதகமலங்களைத் துதித்துநெருங்கியிருக்கவும்—(எ-று) (யக)

நந்தியெம்பிரானயந்தபொற்பிரம்பினுனகர்.... ...*
பந்திசேர்முடிப்பன்மணிவெடிதிடப்புடைப்பச்...*
சிந்திநீங்கிடத்திருத்தியேயவைசெயச்சேர்ந்தார் .*
இந்திபாதிகளவிதநிடுமிருடிகளானோர்.. *

(இதன்பொழிப்பு)

நந்திதேவராகிய நமது- பெருமானுனவர் விருதுவாகிய மருபொருந்திய வெள்ளிப்பிரம்பினுல நாகராசர்களது- வரிசைபொருந்திய முடியினிடமாகவிளங்கப்பட்ட பலரத்னங்களுஞ், தெறித்துவிழும்படியாக அடிக்குங்காலத்திற் சிந்தினால் அக்குப்பைகளை நீங்கும்படியாகத் திருவலகு கொண்டுபணிமாறியலங்காரஞ்செய்வதற்கு பருசேந்திரிய முதலியவைகளைத்தணித்தவர்களாகிய முனிவர்கள் வந்தார்கள—(எ-று) திருவலகுகொண்டுபெருக்குந்தொழில், சரியைத்தொழில்களில், ஒன்றும், இதற்கு, (உதாரண,)

திருவாதவூர்ப்புராணத்தில்,

"ஆலவாலெமக்காமலர்மரங்களாக்கலம்மலர்பறித்தலம்மலராற்- றொடையாவகைச் சார்பலசமைத்தறணப்பிலெம்புகழ் சாற்றலன்பொடு நாம்- மேவுமாலயமலகிடன்மெழுகல் விளங்கநல்விளக்கிடுதலெம்மடியார்கமேவலாணவைசெயதலிச்சரிதையியற்ற-வல்லவர்க்கெம்முலகளிப்போம்- என்றனர். (யஉ)

உயர்வாகிய திருநாமத்தையுடையவன் முனிவர்களுக்கெல்லாம்அரசு னவன்கூட்டமாகியபலகடவுளாகள்வந்தாலுமசிவபெருமானையன் றிமனத்தில்,இதரதேவர்க்களை மதியாதஅறிவையுடையவன் (எ-று)

வேதமோதியவிருக்கெலாமனைமுனம்விளம்பிச் *
சீதமாகியசாமமேயாழெனக்கிளர்ந்து...... . . . . *
பாததாமரைபல்லநாட்பணிந்திடவொருநாட *
காதலாற்பரன்முனிமுகநோக்கியேகலாவான் *

(இதன்பொழிப்பு)

தான்அத்தியானஞ்செய்தருளிய இருக்குவேதமெல்லாம், பொருந்தும்படியாக சந்நிதானத்தின்முன்பு கோஷிடித்து சீதளமாகியசாமவேதமே யாழாகப்பாடி சிவபெருமானது- திருவடிதாமரைகளை பலநாட்காலம் பணிந்து- வருகையில் ஒருதினத்தில், இன்பநிறைந்த சிவபெருமானுனவர் சுநந்தமஹாமுனிவர் முகதலைப்பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுவாா—(எ-று,) (யகூ)

ஆயும்பன்மறையனைத்தையுமளக்கினும்யாக்கை . *
காயுநோன்பினிற்கன்றினுங்கருத்திறுணமது ...*
வாயுமேன்மைபுமுதன்மையுமதிப்பரிதாகுந் *
தோயுமன்புறத்துணிந்தனைநம்பருட்டுணையால் .. *

(இதன்பொழிப்பு)

யாவர்களாலும் ஆராய்ச்சிச்செய்யாநின்றபலவாகிய வேதமுற்றினும் கணக்காக்கிமதிக்கினும் சரீரமானது உஷ்ணகரமாகிய தபாக்கினியினுலே வெதுப்பத்தையடைந்தாலும் நமதுபொருந்தியமகத்வத்தையும், கர்த்ததுவத்தையும், நிச்சயித்துப்பேசுவதற்கு, அருமையாகும், அப்படிப்பட்ட நித்தியத்துவத்தில் அன்புபொருந்தும்படியாக வயிராக்கியத்தைப்பெற்றனை நமது- திருவருளின்துணையினுல்—(எ-று) (உய)

குழையுடமன்பினுற்றவத்தினுற்குறியகல்சமாதி ... . *
தழையுஞ்செய்கையாற்சாமகானத்தினுன்மகிழ்ந்தேம் *
விழையநல்வரம்வேண்டிடநல்குதுமுனையிம் *
றழைதருங்கானுனாத்திடச்சுநந்தனீதுரைப்பான்.. .. ... *
(யக)

(இதன்பொழிப்பு)

குழைவுபொருந்திய அன்பினாலும், தவத்தினாலும், ஆதார யோகத்தின்முடிவாகிய நிராதாரயோகச்செய்கையாலும், சாமகானமாகிய இராகத்தினாலும், இன்பமாயினோம் நீயின்பங்கொண்டிருக்கின்ற உத்தமமாகியவரங்கள் வேண்டியவைகளைத்தருகிறோம், சொல்வாயென்று மானைக்காட்டாநின்ற கைத்தலத்தையுடைய, சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியகாலத்தில், சுநந்தமுனிவனிதனைச்சொல்லுவான்—(எ-று) குறியகல்சமாதிஎன்றதற்கு

(உதாரணம்,) திருக்களிற்றுப்படியாரில், (வெண்பா)

ஒன்றுங்குறியேகுறியானதாலதற்கு ....... *
வொன்றுங்குறியொன்றிலாமையினா-லொன்றோ *
டுவமிக்கலாவதுந்தானில்லையோவாத்........ *
தவமிக்காரேயிதற்குச்சான்று .. . . *

என்றனர்

பிரபுலிங்கலீலையில், விமலகதி.

தறிபோலுடலநேரிருந்துதயங்குமருங்கினிருநாடி ........*
நெறிபோய்மீளும்வளியதனைநிறுவிநடுநாடியிற்செலுத்தி .. . *
யறிவோர்சிறிதுஞ்சலியாமலனைப்பெயர்மந்திரமாதி. ... ....*
குறிபோயிருந்தவொருகுறியைக்குறித்துக்கொண்டங்கிருந்தனரா

என்றனர் (ல்

தோற்றமிக்குயர்மான்முதற்றுணிவரிதென்னு.......*
மாற்றமேயநீவறியனேனிடத்தருள்கூர்ந்து ... ... *
தேற்றநல்கினையாமெனிற்றிருநடமடியேன். . . .*
போற்றலீகெனப்பணிந்திடப்புராதனனுரைப்பான் *

(இதன்பொழிப்பு.)

பெருமையினால், மிகுந்து உயர்வாகிய, விஷ்ணுமுதலிய,தேவர்களெல்லாந் துணிந்து சொல்வதற்கரிய, வாக்கியத்திற்பொருந்தியநீ, ஒன்றுமிலாதவனாகிய, அடியேனிடத்தில், அன்புமிகுந்து தெளிவாகிய, தன்மையை அனுக்கிரகஞ்செய்தாயாகில், ஒருவரமி

ருக்கின்றது- அப்பெதென்னெனில், திருநடனம், அடியேன் தரிசனஞ்செய்யும்படியாக வரந்தந்தருளுவாயென்று நமஸ்காரஞ்செய்தகாலத்தில், பரமசிவம்திருவாய்மலர்ந்தருளுகிறார் -(எ-று).(உஉ)

சண்டதாண்டவநாஞ்செயத்தாங்கிடுந்தான... ... .. *
மண்டமார்புவியகத்திலையாயினுமறிநீ. .. . .... *
கொண்டல்கணபடுகுளிர்வடவனமெனக்குலவி . .. *
மண்டலத்தனில்வயங்கிடுஞ்சிவபுரிமான . . . ...*

(இதன்பொழிப்பு)

சண்டதாண்டவமென்னும், ஊர்த்ததாண்டவத்தைநாஞ்செய்வோமாகில், அத்தாண்டவத்தைத் தாங்காநின்றதிருத்தலமானது-இத்தேவலோகத்திலும், உலகத்தினிடத்திலும் இல்லையாகிலும், நீயறிந்துகொள்ளு மேகமானது- நித்திலா செய்யப்பட்ட குளிர்ச்சியாகிய, வடாரணியமென்று பொருந்தி பூலோகத்திற் ப்ரகாசிக்கும் ஸ்ரீகயிலாயத்துக்கு ஒப்பாக—(எ-று) (உங)

(வேறு)

மணிவிளாதவழுமுத்திதீர்த்தமவ்வனத்தின்மேவி ..*
பணிசெயுமாடிஞோர்தம்மருவினையனைத்துந்தீர்க்கும் *
பணியுயங்கத பாலவங்கிப்பனியநாநடனஞ்செய்தாங்க
யெணிபுறமளவுமங்கணிருத்தியென்றுரைதருப்பின்னா..

(இதன்பொழிப்பு)

முத்துக்களைச் சொரியப்பட்ட சங்கங்களானவை தவழ்ந்துக்கொண்டிருக்கின்ற முத்தித்தீர்த்தமானது- அந்ததிருவாலங்காட்டினிடத்து- பொருந்தி அழகைச்செய்துக் கொண்டிருக்கும் ஸ்நானஞ்செய்த பேர்களது- அரியவினைதனைரயெல்லாம், தீர்க்கும் அதன்றியும், கார்க்கோடகனும், அந்தமுத்தீர்த்தத்தின்பக்கத்தில், தவஞ்செய்துக்கொண்டிருப்பன் நாமங்கேநடனஞ்செய்கிறவிதமாக நினைத்துவருமளவுமந்தத திருவாலங்காட்டில், நீ இருப்பாயென்றுசொல்லியபின்புமுனிவன்சொல்வான் (எ-று)(உச)

மேயவத்தீர்த்தநாமமேவெனவிளம்புமாற்றூந் *
றாபசங்கசதீர்த்தமப்பெயர்நலம்புமப்பின ..... *

மையாகநடக்கத்தக்க அறிவானந்தத்துக்கு முதன்மையாகிய, புனி தத்தன்மையிற் சிறந்ததென்னும்,வடாரண்யம்—(எ-று) (உஎ)

மறையதின்மறையதாகும்வகுத்துநாமின்றுகூறு . *
முறையவர்க்குரைத்ததன்றுனின்னிடைக்கருணையாலே .
அறைகுவமனத்திற்கொண்ணீயன்பிலார்நன்றியோரார்
கறையினாமகுறையாமெய்ப்பாற்கசிந்தவர்கருளாததிகாண

(இதன்பொழிப்பு)

இரகசியத்துக்குள்ளே இரகசியமாகும்,இதனை இதுவரைக்கும் வாழ்நாளை விரும்பியவர்களுக்கு சொல்லியதல்ல உன்னிடத்திற்கிரு பையிருந்து சொல்லுவோம் மனதினிடத்து நீயிதனை கொள்ளக்கட வாய் அன்பிலாதவர்களும் செய்நன்றியையெண்ணியறியாதவர்களு மாகிய குற்றமுடையோருக்கு உபதேசிககாமல் நமது திருவடியி னிடத்தில், அன்புருகிக் கொண்டிருக்கின்றவர்களுக்குத் தெரியும் படியாகச்சொல்லும்—(எ-று) (உஅ)

வெள்ளியங்கிரியுமாலவனமெனவிருப்பியுள்ளத் *
துள்ளியதெல்லாற்பல்காலுரைத்தெனையொளியாஞானந்
தெள்ளியமுனிவராமேனாவழிபடச்சிறந்ததாகி ...*
வள்ளியோராபுகழேபோலவுலகெலாமதிப்பதாகும் ..*

(இதன்பொழிப்பு)

ஸ்ரீகயிலாயகிரியையும்,திருவாலங்காடென்று விரும்பற்றமன னிடத்து நினைத்ததென்றால், அதன்மகத்வத்தைப் பலதரஞ்சொல வியென்னை ஒளியாகியஞானந்தெளிந்தமுனிவரானவர்கள்பூசிக்கச்சி றந்தன்மையையுடையதாய் தடைபடாதுகொடுக்குங்கொடையி ற்சிறந்தவள்ளல்களாதுகீர்த்தியைப்போல், உலகமெல்லாமதிக்கத்தந் (சு அருங்(எ-று)

(வேறு)

ஓங்குலகந்துயர்திரநடம்பரியுமுயர்தானமுரைப்பர்கேணீ *
பாங்குதருங்கயிலாயஞ்சிவலோகம்பனிவரைநால் பரவுஞ்சோ
தீங்கல்பதிசிரபிடநேபாளங்கங்கைநதிசிறநதகாசி . (ற்கந்
கோங்கலருந்தடங்காமரூபமொடுவனபிசமீரருவில் குணம

(இதன்பொழிப்பு.)

விர்த்தியாகிய உலகமெல்லாந் துன்பநீங்குந் தன்மைக்காக திருநடனஞ் செய்தருளத்தக்க தலங்களைச்சொல்லுகிறோம்நீர்கேளும்நற்குணத்தை யளிக்கப்பட்ட திருக்கைலாயம், சிவலோகம், இமோற்பருப்பதம், தேவலோகம், குற்றமகன்றதாகிய பத்திரபீடம், நேபாளங் கங்கைநதியினால் சிறந்ததாகிய காசி- பரிமளமான துவிசாநின்ற தடாகங்கள்சூழ்ந்ததாகியகாமரூபம், நைமிசாரண்யம் குருக்ஷேத்திரம்—(எ-று) (௫௰)

மந்தரமால்வரைகமலாநந்தவரைபுயங்ககுலவரையேமாகு .. *
சிந்துசுராட்டரங்கதலித்தானமலிகேதாரந்திருவான்மிக்கு. *
மூந்துபரியாத்திரஞ்சந்திரத்தானஞ்சுமிந்திரஞ்சுந்தரமாமூசு
சந்துமலிதருபராபுரந்தரமேவிசாலாக்ஷந்தடம்பொன்மேரு

(இதபொழிப்பு.)

மந்தரகிரி- கமலாநந்தகிரி-புயங்ககுலபருவதம்-குற்றங்களைக்கண்டிக்கின்ற சுராட்டரம்- கதலிதானம்- செல்வத்தால்- நிறைந்த திருகேதாரம்- செல்வத்தினால்நிறைந்து-பழமையாகிய பாரியாத்திரம்- சந்திரத்தானம்- சுமிந்திரம-சுந்தரம்வண்டுகள்மொய்க்கப்பட்டசந்தனவிருட்சங்கள்நிறைந்த- பராபுரந்தரம்- விசாலாட்சம்-விசாலமாகியமேரு— எ-று ) (௫௧)

சண்பகமாவனம்போடமாடவியோடாமிரதருசார்தைப்பீடம் *
[illegible]பயுந்துளசிவனமயவந்திருர்வரைசிகண்டமுற்றும் , *
விசையரிலுமாசோதமஞ்சரிகாப்பீரியமாவிரதம்பலா . *
[illegible]பதபாம்பிரமாண்டப்பிராவதிமாயூரஞ்சித்திரசேனுகம் . *

(இதனைபொழிப்பு )

சண்பகவனம்- போடமாடவி- ஆமிரதம், உலகமெல்லாந் து[illegible]ப்பட்ட துளசிவனம், திருஅயவந்தி- சூலயவரா-சிகண்டம், பி[illegible]லும், தேவலோகத்தைய யளாவிய ஆசோதம், மஞ்சரி- காப்பிரியம், மாவிரதம், பெரியபாகமெல்லாம நினைக்கத்தகைப[illegible]மா இடப்பிரமாண்டம், அய்ராவதி-மாயூரம், சித்திரசேனுகம (எ-று) (௫௨)

பு[illegible]சாலபாதாளமந்தச்ராசிரமமணிபொழிபொற்கூடம *
[illegible] ஏமழுங்கமலைமணிசிவாச்சிரமஞ்சித்ராச்சிரமரு . ..*

நட்புறுசித்திரகூடமல்லிகார்ச்சுனருவங்கங்காநதித்துவாரம் *
புட்பயிலும்புடியாதமுதயவனாபுன்னாகவனமுமற்றும் .. *

(இதன்பொழிப்பு)

புட்கரணி- பாதாளம், மந்திராச்சிரமம், முத்துக்களைச்சொரியாநின்ற ஏமகூடம், தேன்களானது- வாசனைவீசாநின்ற கமலமணி-சிவாசிரமம், சித்தராசிரமம், அழகுபொருந்திய சித்திரகூடம், மல்லியார்ச்சுனம் கங்காநதித்துவாரம், பட்சிகள் வாசஞ்செய்யப்பட்ட புஷ்யாதட-உதயவனா-புன்னாகவனம் இவைமுதலானவையும், (என்றவாறு) (௯௫)

நந்திபுரமாமாங்கஞ்சாளரத்தஞ்சிரபுரஞ்சோமபீடமுறுஞ் . ...*
சந்தனிகேத்திரஞ்சாளக்கிராமமிடபாசலமேதமைத்தநீமை ...*
சிந்துசரச்சுவதிமறைத்தெளிவாகுஞ்சிதம்பரமாந்திகழுந்தானமீனு
மிந்தியமைந்தடக்கினர்தம்மிதையத்துநடம்புரிவமியலாமென்றும்

(இதன்பொழிப்பு)

நந்திபுரம், கும்பகோணம், சாளரத்தம், சீர்காழி சோமபீடம், பரிமளம்வீசப்பட்ட சந்தனவிருட்சங்கள் பொருந்திய க்ஷேத்திரம், சாளக்கிராமம், இரிடபாசலம், விரத்திப்பட்ட தீமையையும், நீக்கப்பட்டசரஸ்வதி- வேதத்தின் தெளிவாகிய சிதம்பரம், இத்தன்மையனவான அரூபத்தலங்களோடு, பஞ்சேந்திரியங்களை வசீகரஞ்செய்தவர்களாகிய முனிவர்கள் இதயதாமரையினிடத்தும் திருநடனஞ்செய்வோம் எப்போதும் அழகாக (எ-று) (௯௬)

ஈங்கிவற்றுட்சிதம்பரத்தினியற்றுநடமுத்தமமாம்பேரின்பமேன்மை *
தாங்கியிடுமாநந்தத்தாண்டவமாருயிர்க்கிருளைத்தடுத்தாநந்த .. *
மோங்கியிடவளிப்பதுவாமற்றையவுமுயிர்களுறுமுபகாரம்*
பாங்கியலுநடத்தானம்பகர்ந்தனமாலினிமுனிவபகரக்கேண்.. *

(இதன்பொழிப்பு)

இங்குசொல்லிய நடனத்தானங்களுக்குள்ளே சிதம்பரத்தில் செய்யப்பட்ட நடனமானது பேரின்பமாகிய மேன்மையைத்தாங்கியிருக்கின்ற ஆநந்தத்தாண்டவமாகும் அத்தாண்டவமானது நிறைந்த ஆன்மாக்களுக்கு ஆணவமலஇருளைத்தடுத்து ஆநந்தமோங்கும்படியாக அனுக்கிரகஞ் செய்யப்பட்டதாம் மற்றைய நடனத்

தானங்களும் ஆன்மாக்களுக்கு நிச்சியக்கியானம் வருவதற்கு
உத்தமமாவனமாம், பாங்குபொருந்திய நடனத்தானங்களையி
துபரியந்தம் சொன்னேனும் இனிமேல் சனந்தமுனிவரேயான் சொல்
லுகின்றேன், நீர்கேளும் — (எ-று) (௬௫)

ஆலவனமனைத்தினுக்குமுதலான நடத்தானமருளார்நட்ட...... *
மூலமதாமதனகத்துச்சண்டதாண்டவங்ககனமுகடுநோக்கி . . .*
மேலணுகவிடத்தாளையெடுத்துவலத்தாளூன்றிவிளைகுருநட்டஞ் *
சாலுமிதுசங்காரதாண்டவமாமபிறப்பிறப்புத்தவிர்த்தலாலே . *

(இதன்பொழிப்பு)

திருவாலங்காடானது முன்சொல்லிய, தீர்த்தஸ்தானத்து
கெல்லாம் முதன்மையாகிய நடனத்தானம் இருளை நிறைந்த திரு
நடனங்களுக்கு மூலாதாரமாகும் அத் திருவாலங்காட்டினிடத்துச
ண்டதாண்டவம் ஆகாய உச்சியைநோக்கிமேலே செல்லும்படியா
கஇடதுபாதத்தைத்தூக்கி வலதுபாதத்தை யூன்றிச்செய்தருளாநி
ன்றநிறைந்தருளிய இந்தநடனமானது சங்காரதாண்டவமாகும்,
எனெனில்சனனமரணங்களை நீக்கியாளுந்தன்மையினால் — (எ-று)

மூண்டகத்தாணகநிலவுமுடிப்பிறைவெண் ... .. *
ணிலவிநெடுமுற்றிவீற்று ...... .......... . *
மண்டிருட்குழுவகலவடியவர்கண் .. ....... *
மலமாயைமடிந்துநீங்கத். ....... . ... . *
தொண்டர்கணங்கதிமேவச்சோதிநம.. ... .. *
துருவெழுந்தகூடாகனமூசி... .. ... *
யண்டமெலாமிருணீங்கவாடல்செய்வோ .. ..... *
யாலவனத்துறதியென்றும் .. .. *

(இதன்பொழிப்பு)

தாமரைக் கமலம்போன்ற திருவடியிலிருக்கின்ற நகமாகியச
ந்திரத்திரளானவை சடாபாரத்தி லிருக்கின்ற தாவள்யம்பொருந்
திய இளஞ்சந்திர னுடனே பூர்த்திப்பட்டு குறைபடாமல் நெருங்கி
யஇருட்கூட்டம் அகலவும் அடியார்களுடைய மலமாயாகன்மங்கள்
சேதனத்தையடைந்து நீங்கவும் பத்தர்கூட்டமெல்லாம் கதியடை
யவும் சோதியாகிய நமதுருவத்தி லிருந்தெழுந்த ஒளியானவைக

ன்நெருங்கி ஆகாயமெல்லாம் இருளகலும்படியாக நிர்த்தஞ்செ
ய்வோம் வடாரண்யத்தில் இதுஎன்றும் திண்ணம்—(எ-று) (௯௭)

வீறுசுரநதிகாசிகாஞ்சியவந்திகைமதுராமிக்கமாயை . , *
பூறுமலர்த்தேன்பரவுதுவரைதிருவயோத்தியேயுரைத்தவேழுங் *
கூறுசிதம்பரஞ்சேதுவாதபுரியம்பைகோகரண்முத்திப்... . *
பேறுதவுகாளத்திசழுக்குன்றந்திருவோத்தூர்பெருமைசாலும் *

(இதன் பொழிப்பு)

விர்த்தியடைந்திருக்கின்ற சுரநதியென்னுங்கங்கைசூழ்ந்தகாசியென்னும்க்ஷேத்திரம்காஞ்சீபுரி- யவந்திகாபுரி- திருமதுராபுரி மாயாபுரிசுரக்கப்பட்டபுஷ்பத்தேன்பரவிய துவாரகாபுரிஅயோத்தியாபுரியென்றுசொல்லியஏழுதலங்களும் யாவருஞ்சொல்லப்பட்டசிதம்பரம் - சேது- வாதபுரி-யம்பை- கோகரணம்,முத்தியாகிய வாழ்வை யளிக்கத்தக்க காளத்தி திருக்கழுக்குன்றம்-திருவோத்தூர்இவைகளும்—(எ-று) (௯௮)

பருப்பதஞ்சீர்வெண்காடுகேதாரமுதலாகிப்பாரின்மீது .. .. *
விருப்புறுதானம்பலவாமவற்றிருமுப்பதுநான்குமேவுதான *
முருப்புறுதீவினையகற்றுமாயினுமீங்கிவற்றோங்கியுயருந்தானந் *
திருப்பயிலுமாலவனமாதலினால்விருப்பமக்குச்செய்யுமென்றே

(இதன் பொழிப்பு.)

பெருமைநிறைந்த ஸ்ரீபர்ப்பதம்- திருவெண்காடு- திருக்கேதாரம்- இவை முதலியவா யுலகத்திலிடத்து- இன்பம் பொருந்தியதலங்கள் பலவாகும் அவற்றில் அறுபத்துநான்காகப் பொருயிருக்கின்ற ஸ்தலங்கள் ஆக்ஞைகரமாகிய தீயவினைகளை ச்சேதிக்குமெனினும் இந்தத்தலங்களுக்குள் ஓங்கியுயர்ந்ததானம்,வடாரண்யமானதால்எனக்குஇன்பத்தையதிகமாகச்செய்யும்—(எ-று) (௯௯)

மூசளியண்முருகருந்திமுரன்றுகுயிலினமுழங்கமுழங்குசோதிப்.
பாசடைசூழாலவனம்பரசின்னுங்கேத்திரங்கள்பலவற்றுள்ளும் *
நேசமெமக்களிப்பதற்குநிகழ்த்திடுவங்காரணநீநினைத்துக்கேட்டி
மாசகலுந்தவமேவிதக்கணுலகினைப்படைத்துவயங்குநானில். *.

( ௱ )

# ௬ய சுநந்தர்உபதேசச்சருக்கம்.

(இதன்பொழிப்பு,)

வண்டினங்களானவை மொய்க்கப்பட்டதேனீக்களை யுண்டு மோவென்று குயிலினங்கள் தொனிக்கும்படியாகப்பாடாநின்றபசியஇலைகள் சூழ்ந்திருக்கப்பட்ட திருவாலங்காடானது- யாவருந்தொழப்பட்ட க்ஷேத்திரங்களுக்குள்ளே அதிகமாகிய, இன்பத்தை யெனக்குத்தருவதற்கு காரணத்தைச்சொல்லுவோம நீ நினைத்துக்கேள் குற்றந்தீர்ந்த தவத்தையடைந்து தக்கனெனவன் உலகத்தைச்சிருட்டித்து விளங்காநின்றகாலத்தில், — (எ-று) (௬ய)

பனாதனக்குமகவாகவேற்றவளைப்புதல்வியெனப்... *
படைத்துப்பண்பால்.. ..... . . . ............ *
வனாயுமுனாயெமக்களிக்குமணத்தினிடை . *
யாங்கரப்பமதத்தாற்சீற்றம் . .. ... .. ......*
புனாயுமகந்தையுமேவியெமைப்பழித்துப்... .. .. *
பலநாளும்புழுங்குமன்னோ,........ . . *
னுனாபரவும்பெருவேழ்வியெமைநீக்கித் . . ......*
தவிர்த்தாற்றவுள்ளங்கொண்டான். ... ........ *

(இதன்பொழிப்பு,)

பராசத்தியாகிய பார்வதியானவள் தனக்குப் புத்திரியாகும்படித்தவஞ்செய்து அவளைப்பெற்றருணத்தினால் யாவரும்புகழத்தக்கநமக்குக் கொடுக்கப்பட்டதிருக்கல்யாணசமையத்தில்யாம்மறைந்துவிட அதனாலே வந்தமதத்தினால் குற்றமும் அகந்தையும்பொருந்தி யெமைநாடோறும் நிந்தித்துக்கொண்டுகொதிப்படையடைந்தமனத்தையுடையவனாகிய அத்தக்கனெனபவன் சொல்வதற்குவிரிவாகியபெரியயாகத்தை நம்மைநீக்கஞ்செய்துமற்றையதேவர்களுக்குசெய்வதற்கெண்ணங்கொண்டான் —(எ-று.) (௬௧)

கடியெமக்குச்செயவிரும்புங்காலைதனில்யாங்கரப்பகலக்கமேவி *
கொடியருக்குற்சதியாயகோற்றொடிநொறற்றிடயாமேகுறங்கியங்கண்
ணெடியவிடைமேற்கயிலைநிலையளிப்பக்கவிமேவிநிகழ்ந்தாளீதுங்
குடிபுகுதமனங்கோடபங்கூர்ந்துமுள நினைந்துமகக்குறித்துச்செய்

வானு

(இதன்பொழிப்பு)

திருக்கல்யாணம் எமக்குச்செய்வதற்கு விரும்பியகாலத்தில், யாம்மறைந்திட வியாகுலம்பொருந்தி கொடிபோன்ற இடையினை யுடைய, நமது பத்தினியாகிய பெண்ணானவள் தபஞ்செய்ய நாமே சமீபமாகவந்து அவ்விடத்து நீண்ட இரிடபவாகனத்தின் மீது திருக்க யிலாயகிரியில் வீற்றிருக்கின்ற உருவத்தைக்காட்ட சந்தோஷித்தை யடைந்து திருக்கயிலாயம்வந்து சேர்ந்தாள் இக்காரியமும் அவன துமனத்திற் குடியாகத்தங்கிய தன்மையால் கோபங்கொண்டும்திரு வுளத்திற்கருதியாகத்தைக்குறித்து செய்வான்—(எ-று) (௬௨)

மணங்கமழுமகமேவவானவரைக்கூவவவர்......... ...*
மகிழ்ந்துத்தம்.. .. ..... ... ...... .. ... .....*
அணங்கினொடுசாலையுறவவர்தமக்கு......... .. . ...*
வேளாண்மையளிக்கவைய .. ......... ..... . .*
நுணங்கிடையப்பரிசோர்ந்துநமைக்கூவ .. . ......*
வுநதைமகிழ்வுக்கேமென்ன. ....... .... .... ...*
யுணங்கியழிந்துளமெமக்குமூரைத்துமகச்.... .. . *
சாலையினையுற்றக்காலை............ .., .. . . . .*

(இதன்பொழிப்பு)

பரிமளம்பொருந்திய, யாகத்துக்குவரும்படியாய் தேவதை களை அழைக்க அத்தேவர்களெல்லா மகிழ்ச்சியடைந்து தங்கள் தங்கள் பத்தினிகளுடனே யாகசாலைக்குவந்துசேர அத்தேவர்களுக்கு அவி ர்ப்பாகம் கொடுக்கின்றகாலத்தில் உளதோஇல்லையோவென்னுஞ்ச- ந்தேகத்திற்கு இடமாகியஇடையையுடைய பார்வதிதேவியார் அத தன்மையையறிந்துநம்மையழைக்கஉமதுபிதாவினது - யாகத்தைப் பார்க்கமாட்டோமென்றுசொல்ல மனமானது வாட்டமடைந்துவரு த்தமுற்று நமதுஞ்சமாதானஞ் சொல்லிக்கொண்டு யாகசாலைக்கு ப்போயினகாலத்தில்—(எ-று) (௬௩)

கொடுங்குரலாலடர்ந்திசைவீக்குறுகிதென்னைக் ....*
கடுஞ்சொற்கொடியின் பாட்கி ...... ... ...*
நடுங்குமவள்மூன்றுகட்பலரோடுமெய்........ ... *
பழிம்பு நகைத்துக்கூற .. ......... .... *

வடுங்குறியுண்டிவனிடும்பையழித்திடு……………*
வனிக்கண்மேயச்சமேவி…… ……………*
யொடுங்குமுனைந்தந்தையெனவுன்னியவடிக்………*
கண்முகமுருந்துநோக்கி…………… ……………*

(இதன் பொழிப்பு)

கொடிதாகிய வெடிகுரலினால், யெதிர்வந்து இவ்விடத்துக்கு நீவந்ததென்னென்று கடுஞ்சொற்சொல்ல வல்லிக்கொடியைப்போலமயங்கி நடுங்கத்தக்க அப்பார்வதிமுன்பாக யாகத்துக்குவந்த பலபேர்களுடனே நமது பழிச்சொல்லையெடுத்து நகைசெய்து சொல்லியவளவில் போர்செய்யப்பட்ட குறிப்புக்களெல்லாம் யிருக்கின்றது இவனது அகங்காரத்தைச் சேதிப்பேன் இந்தக்ஷணமேஅச்சத்தையடைந்து ஒடுங்கிப்போவான் எனக்குமுன்பாகப் பிதாவென்று நினைத்துவடித்தெடுத்த கண்களையும்,முகத்தையுமுடைய, பார்வதியானவள்பார்த்து—(எ-று) (௬௬)

வடுவாயதீவினைக்கோர்வடிவாயநீமதிபோய்…… …*
வகுத்தவாக்காற் . ….. …… . . .*
கெடுவாய்நீமீக்கணத்துக்கிருமியினைப்புனாதருநீ . *
இளக்குமாற்ற . . . …… … …. *
நெடுமாலைமுதற்றேவர்நினைவரியபரமாகி …. … . *
நிமலமாகும்… …………… *
கடுவாயுமிடற்றூர்க்குக்குறையாகாகுறையுனக்குக் …*
காட்டுமென்றே……… …… . … …*

(இதன் பொழிப்பு)

குற்றமாகிய தீவினைக்கு ஓர்வடிவத்தையுடையவனாகிய நீ யறிவில்லாது சொல்லியவசனத்தினால் நீகெடுவாய்யிருந்த ஆஷிணத்திற்பட்ட புழுவுகளுக்குச்சமதையாகிய நீசொல்லியவசனம் விஷ்ணுமுதலியதேவர்களெல்லாம் நினைத்தற்கரிய பரம்பொருளாகி நிமலமாயிருக்கின்ற விடந்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமானுக்கு குறையாகாது குறைவுஉனக்கேஉண்டாக்குமென்றுசொல்லி(எ-று)

பரம்பரனையகழ்ந்தாரைப்பகர்ச்சிசெயுநாவரிந்து… *
பகைத்துமாய ……… …… ……*

வரம்பயிலுமூபிர்பருகமுடியாதென்ற..... .. ......*
னதுயிரையொழித்தல்வேத.............. ... ..*
வரம்பிதுவாமெனயோகமண்டுமழ . ............. *
லெழுப்பியெழில்வாயந்துமாமை.. ..............*
நிரம்புருவயொழித்திமையநிருபனொருமகளாகி......*
நிகழுங்காலை.. ........ ... . .. ............... *

(இதன்பொழிப்பு)

பரமசிவத்தை இகழ்ந்தபேர்களை சொல்லப்பட்ட நாவரிந்து பகைத்து மாயும்படிவலுமைதங்கிய உயிரைப்பட்சிக்க முடியாதெனது-உயிரையொழிப்பதுவேதமுடிவாம்இஃதென்றுயோகத்தினால் நிறைந்த அக்கினியையெழுப்பி அழகானது-பொருந்தியொளிநிறைந்த தேகத்தையொழித்து இமையபருவதராசனுக்கு ஒப்பற்றபுத்திரியாகஅவதாரஞ்செய்து இருக்கின்றகாலையில்---(எ-று) (சுகூ)

ஆவியெனப்பிரிவரியவணங்கினதுசெயல்கேளா . .*
வழன்றுவீரற். ..... .. ........ . . .... ...... ..*
கூவியடர்சினவீரபத்திரநீகடிதேகிக் . .......... ...*
குறுகிமக்கட்... .............. .. .............*
காவியெனக்கறிசெயத்தக்கனையுமகத்தினையுந்......*
தகர்ப்பாயென்ன................ ... .... . ... . *
மேவியவன்வேழ்வியொடுவிண்ணவரையழித்தவர்கள்*
விளியவீழ்த்தா ....... .... ..... ... .. . ...*

(இதன்பொழிப்பு)

உயிரைப்போல் நீங்குதற்கரிய பார்வதியினது- செய்கையைக் கேட்டுமனமானது-கொதித்துவீரபத்திரனையழைத்து போர்செய்யப்பட்ட கோபத்தையுடைய வீரபத்திரனே நீஅதிவிரைவாகயெங்கு ஆன்மாக்களுக்கெல்லாம் உயிராகிய,எனக்குமுடிவுசெய்த அந்தத்தக்கனையும், யாகத்தையுஞ் சேதிப்பாயென்று சொல்லவீரபத்திரராானவர்சென்று அந்தத்தக்கனது யாகத்துடனே தேவர்களையுமழித்து அவர்களையெல்லா மடியும்படியாப்போகி---(எ-று) (சஎ)

உருத்தமார்சிரங்கரங்கண்ணுறுநாசி. .. ...... .......*
தகர்த்துலறியுலம்புந்தக்கன்....... ... .... ......*
பெருத்ததலைமைத்தலையாய்ப்பெறவிளைத்துக. . ...*
கையிலையினிற்பெயரும்வீரன் ... .. .. . ... ...*
கருத்தமரவளித்தகற்றிக்கயிலையினை ....... .. *
யொருவிமலர்கமழ்ந்துகாலுந் . ... . ... ..... ..*
தருப்பயிலுந்தாணுவனந்தனிற்கடிய ..... .........*
தவநிலையாய்ச்சாருநாளில் . ...,, ... ...... ..... *

(இதன்பொழிப்பு )

கோபங்கொண்டு தேவர்களுடைய தலைகளும், கைகளும், கண்களும், பொருந்திய நாசிகளும் உதிரும்படியாகச் சேதனஞ்செய்து சத்தித்துகெடுதிசெய்த தக்கனது பெருக்கத்தலைஆட்டுக்கடாத் தலையாகப்பெறும்படி கட்டளைசெய்து, திருக்கயிலாயகிரிக்குவந்தவீரபத்திரனது- கருத்துக்கு அமைதியாக அனுக்கிரகஞ்செய்து அவனையனுப்பிவிட்டு நாம் திருக்கயிலாயகிரியைநீங்கிபுஷ்பங்களானவை பரிமளித்தவீசப்பட்ட விருட்சங்களானவை நிறைந்திருக்கின்ற மூங்கில்வனத்தில் கடிதாகிய தவநிலையாகச்சார்ந்திருக்கின்ற காலத்தில்---(எ-று) (சஅ)

தக்கனியல்வேழ்வியினிற்சார்ந்தவணம்பழிபலவுஞ்சாற்றக்கேளா..*
வொககயுறைந்திடுதீமையுறுபயனேக்தேவருறவொழுகிநீண்ட ...*
மைகருங்கணெழின்மாயையாலுறத்தக்காசிபனுமயங்கிமேவத்..*
தொக்கவிரவிற்சூரன்சிங்கமுகன் ருருகனுந்தோற்றினரால்... ...*

(இதன்பொழிப்பு.)

தக்கனது- யாகத்தில் சேர்ந்து அவ்விடத்தே நமது பழிமுழுதும் அவன்சொல்லக்கேட்டு கூடவசித்திருக்கின்ற தின்மையாகிய, பிரயோசனத்தைதேவர்களெல்லாம்அடையும்படியாகதாம்நீங்கிமையெழுதியகண்ணினது- அழகுபொருந்திய மாயையென்னும்பெயருடையஅசுரமடைந்தையானவள் மோகத்தைச்செய்தலினால்காசிபமுனிவரும்மயக்கத்தையடைந்துபொருந்தும்படியாகக்கூடியஇராத்திரத்தில்சூரபத்மனும்சிங்கமுகனும்-தாருகனென்பவனும்ஒவ்வொருசாமத்துக்கு ஒவ்வொருவராகத்தோன்றினார்கள்—(எ-று.) (சகூ,

தோற்றுமவர் பெருந்தவத்தா நமைவேண்டா......*
சொலுமுலகமனைத்துமீந்தோ..................*
மாற்றுமமரிடைச்சுரனையழிந்திட..... ...... ......*
விமையோர்களச்சமேவிப் .... .. .. .. ........ *
போற்றிவழிபடச்சுவர்க்கம்புரந்தனரெண் .. ... ..*
டிசைக்காவல்புரிந்துளோரும்..................*
கூற்றனையதாருகனுக்குடைந்தொளித்தா ..... ......*
ரரிமேருக்குகையிற்சார்ந்தான்....... ...........*

(இதன்பொழிப்.)

அப்படிக்குத் தோன்றினவர்களாகிய, அசுரர்கள் நம்மைவே ண்டிசொல்லப்பட்ட உலகமுழுதும் அவர்களுக்குத்தந்தோம் செ ய்யப்பட்ட யுத்தகளத்திலே தேவர்களை அவர்கள்வதைசெய்ய தே வர்களெல்லாம் அச்சத்தையுடைந்து அசுராதிகளைத்துதித்து வழி பட்டவர்களாய்தேவலோகத்தை அரசுசெய்துக்கொண்டுவந்தார்கள் அஷ்டதிக்குக்கும் அரசராகயிருந்தவர்களும் எமனுக்குச்சமத்துவ மாகியதாருகாசுரனுக்குத் தோற்றுப்போய் ஒளித்துக்கொண்டார்க ள்விஷ்ணுவானவன் மகமேருக்குகையினிடத்தில் ஒளித்துக்கொண் டான்(எ-று) (ருய)

இடியனையதானவருக்குடைந்துசிறையிடத்து ......*
யரமேய்ந்துவாரேனர் .... ... . ....................*
படியின்மிசைப்பலவூழியுழன்றுதுயருற்ற.......... *
வர்தாம்பலருங்கூடிக் .......... .. .... .. ... ...*
கடிகமழ்தாமரையோனுககுறைப்பவவன்சூழ்ச்சியொடு
கருதிநம்பால . .... ...... ... .. ...... .......*
வடிமலர்க்கணுமையீன்றமைந்தனையல்லாலசுரர்..... *
மாயாவென்ன. ... . ... ......................... *

(இதன்பொழிப்பு.)

இடிபோன்ற அசுராதிகளுக்கு வருந்திசிறையிடுதலால் துன் பத்தையடைந்து தேவதைகளெல்லாரும் பூமியினிடத்துபலகற்ப ங்கள்தோறும் சஞ்சரித்துக்கலக்கத்தையடைந்தவர்கள் பலபேருங்கூ டிக்கொண்டு பரிமளம்வீசப்பட்ட கமலாதனனாகிய பிரமனுக்கு

## கூஅ சுநந்தர்உபதேசச்சருக்கம்.

சொல்லஅவன் உபாயத்தோடுநினைத்து நம்மிடத் திருக்கின்ற வடிவ த்தெடுத்த மலர்கண்ணையுடைய பார்வதிபெற்ற சுப்பிரமணியனை யன்றி அசுரர்கள்மாயார் — (எ-று) (கூக)

கந்தனெனுந்திறல்வீரன்கண்ணுதலங்குமையோடு.. *
கலந்துமேவ ........ ........ ................--*
வந்தனனேலவன்வடிவேல்வலனேந்தித்.......... .. *
தாருகனைவதைத்துமுன்னீர்ச் .... ........ *
செந்திலிடையணிவீரவாகுவைத்தூதாய்விடுப்பச்...*
சென்றுதேவர் .... ........... ....... ....... ... *
பந்தமுறவீரமகேந்திரம்பொடியவழலூட்டிப் .... *
படர்ந்தபின்னர்.... ...... .. .... ........... ..*

(இதபொழிப்பு.)

குமாரசுவாமியென்னும் பெயரையுடைய வலிமைதங்கியவீர னைவன்சிவபெருமான் அங்குபார்வதியுடனேகலந்து இன்பங்கொ ண்டகாலத்தில் திருவவதாரஞ்செய்வானேயாகில் அக்கந்தசுவாமியா னவர்சத்திவேலை வலதுகையில் ஏந்திக்கொண்டு எதிர்த்து தாருகாசு ரனைவதைத்துசமுத்திரஞ்சூழ்ந்த திருச்செந்திற் பதியினிடத்துஅ ழகுபொருந்திய வீரவாகுவை தூதாகஅனுப்ப அவன்சென்றுதே வாகள்சிறைப்பட்டிருக்கின்றவீரமகேந்திரமெனனும் பதியானது பொடிபடும்படியாகஅக்கினியிட்டுவேந்தபின்பு(எ-று.) (கூஉ)

அரிமுகனுயிரந்தலையும்பொடியாக்கிச்சூரனட..... *
லினைத்துமாய்த்துப்............ ....... .. .... . .*
பரியொடுகேதனமாகப்பணிந்தசுரர்..... ..... ... .*
கிளையனைத்தும்படந்துநூறிக் .......... ........... *
கரிமகளைப்பரங்குன்றிற்கலந்துகந்த............... *
வளைமேவிக்கடவுளீர்நீர் .. . ....... .. ... ....... . *
புரியுமலர்த்தருநீழல்புரக்கவருள்......... ...... ......*
செயுமதன்பாற்போதுமென்றே.......... . ......:

(இதன்பொழிப்பு.)

சிங்கமுகாசூரனது- ஆயிரஞ்சென்னியையும், பொடியாகச் செய்துசூரபத்மன் வலிமைமுற்றும்அழித்து பயிலுங்கொடியுமாக

## ௬அ சுநந்தர் உபதேசச்சருக்கம்

விள்மணிமேகலையார்ந்தமேனியினா .. .   ......... .*
வெயில்பரப்பமேவிநப்பாற் .   ...   ...... *
பன்மலரம்பதமேவப்பரப்பிவிருப்பொடு .   .   .   ;
மிறைஞ்சிப்பணிந்துநிற்ப.. .... .. ......   *

(இதன்பொழிப்பு.)

காஞ்சனமாலையின் மகளென்றுசொல்லும்படியாய் பொன்கொடியைப்போல துவண்டுதன்னுடைய மலர்போன்றசிற்றடியினிடத்தில், தரித்திருக்கின்ற சதங்கையுஞ்சிலம்பும், மணிமாலையானவைசூழ்ந்திருக்கின்ற ஒளிபொருந்திய அழகியமேகலாபரணமுஞ் சத்திககவும் திருமேனியினது- காந்தியானது நம்மிடத்தில்வீசவும்பலமலர்களைநமதுதிருவடியிற்பொருந்தும்படியாக அருச்சித்து விருப்பத்தோடு துதித்துநமஸ்கரித்துநின்றவுடன் -(எ-று.) (௫௫)

காமனிதுவேளையெனக்கருப்புருவச்.   . .   *
சிலைவளைத்துக்காமமேவத்   ... ......*
தேமலர்ப்பூங்கணைசொரியசசிறிதுநம.. ...   ... *
துளந்திரிந்துசெவ்விமென்பூந் . . . . .. .   ...*
தாமமெனும்வகையொளிருந்தளிரியலோர் .... ..   *
மெய்யிடக்கண்சார்ந்துசெய்யப்,, .. . .......*
பூமணியாரல்குலெழிற்புரத்திலெழு........ ... ...*
மவாவோடும்புக்ககாலை ... . . . . ..... ...... ..*

(இதன் பொழிப்பு.)

மன்மதனனவன் இதுசமையமென்று கரும்புருவமாகிய,வில்லைவளைத்து காமவிகாரம் பொருந்தும்படியாகப்பரிமளம்பொருந்திய புஷ்பபாணத்தைச் சொரிந்தளவில், சற்றேநமது-மனமானது-வேறுபட்டு அழகுபொருந்தி மிருதுவாயிருக்கும் புஷ்பமாலையென்றுசொல்லும்விதமாக ப்ரகாசிக்கின்றபார்வதியினது- ஒப்பற்றதிருமேனியில்நமது இடதுகண்ணனது- நாட்டம்பொருந்திசிவப்பாகியும்அழகுபொருந்தியும் இராநின்றமேகலாபரணங்கணிறைந்திருக்கின்ற அல்குலாகிய, அழகியஸ்தானத்தின் மீது உண்டாகின்ற ஆசையுடனே செல்றகாலத்தில்—(எ-று) (௫௬)

கற்பகப்பூவல்லியனைக்கவின்முழுது . .. . .... *
மொருவடிவாய்க்கரியவண்டின ... ...... . *
அற்பரவுஞ்சுருட்குழலுமணிநுதலு... .... . *
நீலமணியனங்கனங்கை . .. ... . ...*
விற்பயிலுங்கரும்புருவமெயிலுமதர்த்.. . *
தரிபரந்துமிளிர்ந்துநீல .. .... . *
வுற்பலமாரொளிகவர்ந்துநீண்டுகுழை .. ....*
மதித்துலவியொளிருங்கண்ணும்.. .. .... . *

(இதன்பொழிப்பு)

கற்பகக் கொடியைப்போல அழகெல்லாம் ஒருவடிவமாகி, கரியநிறமாகிய வண்டைப்போலே இருள்பரவியிருக்கின்ற சுருண்ட குழலும் அழகியநெற்றியும் நீலோற்பலமலர்த்த மன்மதனது-அழகிய வளைவிற்றாங்கிய, கரும்புவில்லைப்போல் வளைந்திருக்கின்ற கரிய புருவத்தின் காந்தியும், செருக்கையடைந்தும செவ்வரிபரவியு மிளக்கம்பொருந்தியும் நீலோற்பலத்தினிடத்துநிறைந்தஒளியினை க்கிரகித்து நீளப்பொருந்தியும் உலாவி ப்ரகாசித்திருக்கின்ற கண்களும்—(எ-று) (௫௭)

ஆழிமணங்கமழ்பிறையொளியிலங்குமிரு . . ...*
கம்பாலமுங்காலந்தகர்த்தர்.. .... . ....*
கூழ் சண்பகமுக்குங்கொழும்பவளக் .. .........*
கொடிக்கிடையேகுளிர்வெண்முத்தநீ ...... .....*
சூழ்பபேரொளிபோலகுறுமுறுவ.. .... ...*
லிலவரும்புந்தூயவாயுங் . .. ... .. ...*
கோடியநுமணிக்களமும்பசுங்கமுகி .. *
னெழில்கவர்ந்துதுலவுந்தோளுய .... ... . *

(இதன்பொழிப்பு)

கண்ணாடியென்று சொல்லும்படி காதணிகளது-ஒளியானது பிரகாசிக்கின்ற இரண்டுதாடையும்வீசப்பட்டபரிமளமும் அழகும் பொருந்தியசண்பகம்போன்றநாசியும்கொழுமையாகஇருக்கின்றபவளகொடிக்குஇடையில்குளிர்ச்சிபொருந்திய, வெண்மையாகியமுத்துக்களைச்சூடியிருக்கின்றபேரொளியைப்போலசிறியபுன்னகை

ரும் - அக்கொடுமைபொருந்திய காளியானவள் அடைந்தவித த்தையும் அவள் அவதரித்தவிதத்தையும் அடியேனுக்குத் தெரியு ம்பொருட்டாகச் சொல்லுமென்றுகேழ்க்க சுபகரம்பொருந்திய விஷ்ணுவானவன் ஆதிசேடன்மனந் தெளியும்படியாக இக்காளியி னது திருஅவதாரம், அவளது செயல் ஆகிய முழுதுஞ்சொல் லுகின்றான் - (எ-று) (௰௫)

போயகாலத்தனைத்துலகும்பூழியாக்கிப்பொலிவழிந்து ... .. *
மாயவழிக்குமாற்றலினார்வடவைத்தீயும்வாய்மடுப்பா... ... *
ரேயுந்தவத்தாலரன்முதலாம்யாவராலும்வெலற்கரியா ... .. *
ராயநாமநிம்பனொடுசும்பனெனப்பாரடன்மிக்கார் ... ... *

(இதன்பொழிப்பு)

முற்காலத்திலே சகல உலகங்களையும்பொடிசெய்து விளக்க மில்லாமல் மாயும்படியாக அழிக்கத்தக்க வல்லபத்தையுடையவர் களும், வடவாக்கினியையும் வாயிலேயள்ளி நிறைககத்தககவர்களு ம், பொருந்திய தவத்தினாலே பரமசிவன்முதலிய எத்தன்மைப்ப ட்ட தேவர்களாலும் வெல்லுதற் கரிதாகியவர்களும் ஆகிய அவர்க ளது நன்மையாகியபெயரோ நிம்பனென்றும் - சும்பனென்றுஞ் சொல்லத்தக்கவர்கள் வல்லபத்திலே மிகுதியானவர்கள் - (எ-று)

மொய்த்தமூவுலகுங்கைக்கொண்டவ்வயின்மூரணுங்காலை... .. *
வைத்தணித்தருவினீழன்மன்னராய்வயங்குப்விண்ணோ. ... *
ரெய்த்தழிந்திரியப்போர்செய்தென்டிசைக்காவலோம்பும் ...*
பைத்தலைசுமக்கும்பாரிற்பண்ணவர்திரிந்துபன்னாள் ... ... *

(இதன்பொழிப்பு)

நெருக்கமாகயிருக்கின்ற திரிலோகங்களையும் கைவசப்படுத் திக்கொண்டு அந்த அந்த இடங்களில் யுத்தஞ்செய்யாநின்ற காலத் தில் அழகாகவைத்திருக்கின்ற கற்பகத்தருநீழலில் அரசுசெய்யத்த குந்த இராசர்களாய்விளங்கிய தேவர்களெல்லாம் இளைத்துவருந்தி ஓடிப்போகும்படியாகப் போர்செய்து அஷ்டதிக்குப் பாலகர் காத்துக்கொண்டிருக்கப்பட்டதாயும் ஆதிசேடனது படமபோ

ருந்திய தலையினுல்சுமங்காநின்றதாயும் இருக்கின்ற இவ்வுலகத்தில் தேவர்கள் பலகாலஞ்சஞ்சரித்து - (எ-று) (௰எ)

ஆவியாய்முற்றுமாகியகண்டவாநந்தமாய ... .. ... ...*
தேவியைத்தேவிசூக்கமுதலியதெய்வவேதம் ... ... ... *
பாவியமனுக்களோதிப்பற்பலகாலம்போற்ற... ... ... ...*
மேவிமுன்னின்றுநீவிர்வேண்டியதென்னையென்ன ... ... *

(இதன்பொழிப்பு.)

ஆத்மகோடிகளுக்கெல்லாம் உயிராகி, சர்வாண்டங்களுந்தானேயாகி, கண்டமின்றி அகண்டாநந்தமாகிய சிற்சத்தியை பஞ்சாக்ஷரமுதலியவாய் தெய்வத்தன்மைமபொருந்திய வேதங்களின்மேல நிறைந்தனவாகிய மந்திரங்களையுச்சரித்து அநேககாலந் தியானஞ்செய்ய உமையவள் பிரத்தியக்ஷமாகநின்று நீங்கள்வேண்டிய வரம் என்னவென்றுகேழ்க்க - (எ-று) (௰அ)

தானவர்போருக்கஞ்சித்தருநிழனீங்கிப்பூமேற் ... ... ... *
கானவர்போலமல்கிக்கலங்கினங்கடவுண்மூவ... ... ... .. *
ரானவர்மாற்றலாற்றாராருளிநீயளித்நியென்ன ... ... .... *
வானவர்போற்றத்தேவிமாற்றுதிர்வருத்தமென்றே ... .. *

(இதன்பொழிப்பு)

அசுரரள்செய்யாநின்ற யுத்தத்துக்குப்பயந்து தேவலோகந் தினின்றுவிலகி வேடர்களைப்போல எல்லோரும் ஒன்றாகச்சேர்த்துக்கொண்டு கலகத்தையடைந்தனம் - பிரமன் - விஷ்ணு - உருத்திரன் என்றுசொல்லப்பட்ட மூத்தேவர்களும அப்பகையைநீககமாட்டார்கள் அனுக்கிரகஞ்செய்து நீ இரட்சிக்கவேண்டுமென்று தேவர்களெல்லாந் துதித்தமாத்திரத்தில் உமையாளானவள் உங்களுடையவருத்தத்தை நீங்கக்கடவீர்களென்றுசொல்லுகிறாள் எ-று.

பெருவலியவுணராவிபிரிந்திடப்பொருதுநூறித் ... .. *
தருநிழலளிப்பன்போமினெனவவர்சார்ந்தபின்னர் . . . *
முருகுமிழ்மலர்சூழ்கூந்தல்கயிலுமறுடித்துமுத்தத் .. . *
திருமிகுமுலையின்மேவத்தேவிநகத்திற்சேர்ந்தாள் .. ... *

(இதன்பொழிப்பு.)

மிகவுஞ் சாமர்த்தியத்தையுடைய அசுரர்களது உயிர்நீங்கும் படியாக யுத்தஞ்செய்து அனைவரையுஞ்சேதித்து உங்களது தருநிழலாகிய தேவபதத்தைத் தருவோம் நீங்கள் உங்களிடத்துக்குச் செல்லுங்கோளென்று உமையவள்சொல்ல, அந்தத்தேவர்களெல்லாந் தங்கள்தங்கள் ஸ்தானத்துக்குப் போயினபின்பு வாசனைவீசப்பட்ட மலர்களைமுடித்த மிருதுவாகிய கூந்தலைப் பிடரியின்மீது தொங்கும்படியாக முடித்துவிட்டு முத்துச்சரங்களின் அழகிய ஒளியானது ஸ்தனபாரமெல்லாம் உலாவும்படியாக பார்வதியார் கிரிச்சாரலுக்கு எழுந்தருளினார் - (எ-று) (உம)

மணிசெறிபூசல்மேவிவளரொளிமல்கவாடி ... ... ... .. *
பணியொடுமமரசண்டமுண்டனுமாங்குமேவித் ... .. *
துணிவுறவொருநீயாரைச்சும்பனிவ்வுலகமுற்றும் .. ... .. *
பணிசெயவுமர்வானன்றேன்பயிலிடப் படர்தியென்ன ... *

(இதன்பொழிப்பு)

நவரத்தினங்களெல்லா மிகுதியாக ஒலிசெய்து வளருகின்ற காந்தியானது எங்கணுநிறையும்படியாக நிர்த்தஞ்செய்து அழகுடனே அந்த கிரிச்சாரலிலே வசித்திருக்க, சண்டன் - முண்டன் என்றுசொல்லத்தக்க இரண்டு அசுரர்களும் அங்குவந்து மிகுந்த துணிவுடனே ஒருவருந்துணையில்லாமல் தனித்திருக்கின்றாயே நீ யார் சும்பனென்னும்பெயரையுடைய அசுரன் இவ்வுலகமெல்லாம் தனக்கு ஏவல்செய்யும்படியாக வசித்திருக்கின்றான் அவனது இடத்துக்கு வாவென்றுசொல்லியமாத்திரத்தில் - (எ-று) (உக)

நோற்றுயர்தவமேற்கொண்டிடினுடியுமாடவர்தம்மோடு ...*
மாற்றமும்வழங்கலாற்றேனெனவவர்வயினேகி ... ... *
யேற்றரியுணைமேற்சும்பற்கேந்திழையொருத்திமேனி ... ...*
தோற்றிடும்வனப்பின்சோதிதாங்கிருடைக்கவைகி ... .. *

(இதன்பொழிப்பு)

மிகுத்துப் பொறுமையுடனேசெய்து உயர்வாகின்ற தவத்தைச்செய்யும்படியாகத் தாங்கியிருக்கின்றேன் ஒருகணப்போதா

யினும் புருஷர்களுடனே வார்த்தையும்பேசுவதற்குச் சகிக்கேன் என்றுசொல்ல சண்டன்முண்டனாகிய இருவர்களும் அதிதுரிதமா கப்போய் கோளரியாகிய சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கின்ற சும்பாசுரனுக்கு அனேகஆபரணங்களைத்தாங்கிய ஒருபெண் தன துசரீரமானது வீசுகின்ற அழகாகிய சோதியானது நிறைந்த இரு ட்கூட்டத்தையெல்லாம் பரிகரிக்கும்படியாகவந்து (எ-று) (உஉ)

வளையகத்தமரநின்பால்வருதியென்றினியகூற ... ... ... ✻
வுளையவித்தரியநோன்பென்றுரைத்தனின்பாலுற்றேம்... .. ✻
விளைமலர்க்குழலிநின்பான்மேவுமேல்வேந்தனீயே ... .. ✻
குளைகடலுலகுக்கென்னக்குறித்துளங்குளிர்ந்துசொல்வான் ...✻

(இதன்பொழிப்பு.)

அப்பெண்ணானவள் கிரியினிடத்து வந்துவசித்தலால் நாங் கள் அவளைப்பார்த்து உன்னிடத்துக்கு வாவென்று இனியவசனங் களைச்சொல்ல மனம் - வாக்கு - காயமுதலிய கரணங்களை அடக் கஞ்செய்து தவத்திலே யிருக்கின்றனனென்று சொல்லியதால் நின்னிடத்துக்குவந்தோம் பரிமளம்பொருந்தியமலர்களைமுடித்த அளகபாரத்தையுடைய அந்தப்பெண்ணானவள் உன்னிடத்துக்கு வருவாளாகில் நீயேகடல்சூழ்ந்த உலகத்துக்கெல்லாம் அரசனென் றுசொல்ல சும்பனென்பவன் தனக்குள்ளேநிதானித்து மனங்குளி ர்ச்சியடைந்து சொல்வான் - (எ-று) (உ௩)

இருவருங்கடிதினேகியினியனபலவுங்கூறி .. ... ... ...✻
மருவருங்குழலைத்தம்மின்மறுத்திடில்வலிந்துபற்றி ... ... ✻
வெருவரவிளித்துக்கொண்டுமீளுமினென்னவேகும் ... ...✻
பருவரையனையாரின்சொற்பலபகர்ந்துரைப்பத்தேவி ... ✻

(இதன்பொழிப்பு.)

சண்டன் - முண்டனைப்பார்த்து நீங்கள்இருவர்களும் அதி வேகமாகப்போய் இனியவசனங்களைச்சொல்லி வாசனைவீசுகின்ற கூந்தலையுடைய மாதினை யெனக்குக்கொண்டுவந்துதாருங்கள் அச் சமாதானத்திற்குஇணங்காளாகில் இழுத்துப்பிடித்தும் பயத்தைக்

காட்டி அழைத்துக்கொண்டுவாருங்களென்றுசொல்ல அங்கிருந்து வந்து மலைபோன்ற உருவமுடையவர்களாகிய அசுரர்கள் பரமேஸ்வரியினிடத்தில் பலபல இனியவசனங்களைச்சொல்ல தேவியார் சொல்லுகிறார் - (எ-று) (௨௪)

மீண்டுமோயேதுமுன்னம்விளம்பினனென்னவெய்யோன் ... *
தீண்டுதும்பற்றிச்சென்றுமெனவவர்சேரச்சீறி ... ... .. *
மீண்டுவெம்படைகண்மேனியெங்கணுமீனத்தீயின் ... ... *
மூண்டுயர்சண்டன்முண்டன்படையெலாமுருக்கினாரால் .. *

(இதன்பொழிப்பு)

மறுபடியும் வசனமேது முன்னமேசொன்னேனென்று உமையவள்சொல்ல, அவ்விருவர்களும் உன்னைத்தீண்டுவோம் பிடித்துஇழுத்துக்கொண்டுபோவோமென்று நெருங்கியகாலத்தில் அம்மன் கோபமிகுந்து அனேகமாகிய சேனைகளைத் தனதுசரீரமெங்கணுந்தோன்றச்செய்ய அப்படைவீரர்கள் சண்டன் - முண்டன் என்னும்பெயரையுடைய அசுரர்களது சேனைகளையெல்லாம் வதைத்தார்கள் - (எ-று) (௨௫)

தீயுருத்தனையசெங்கணொருத்தியத்தேவிச்செவ்வி ... ... .. *
வேயுருத்தோன்றிச்சண்டமுண்டனைவெருண்டுபற்றி .. ... *
வாயுறக்குருதிசோரமயிர்முடியரிந்துதேவி .. ... ... .. *
யேயுயிர்ப்பலியீதென்னவிணையடியிடுதலோடும் ... ... *

(இதன்பொழிப்பு.)

அக்கினியானது கோபங்கொண்டதற்குச் சமத்துவமாயிருக்கின்ற சிவந்தகண்ணையுடைய ஒருபெண்ணானவள் அந்தப்பார்வதியாருடைய அழகுதங்கிய மூங்கிலின்வடிவமாகிய தோளினிடத்துத்தோன்றி சண்டனையும் - முண்டனையுங் கோபித்துப் பிடித்து வாயிற்பொருந்தி உதிரங்களானது ஒழுகும்படியாக மயிர்களோடுங்கூடிய முடிகளையரிந்து பார்வதியே உயிராகியபலி யிதுவென்று திருவடியிலே இட்டவளவில் - (எ-று) (௨௬)

வலிந்தெழுஞ் சண்டனேடுமுண்டனை வதைத்தவாற்ருற் ... ... *
பொலிந்தசாமுண்டியென்றேபுடவியிற்பூசைமேவ ... ... *
மலிந்துளமகிழ்வாயென்றுமெல்லவையின்மடிந்தார்போக ...*
மெலிந்தவரோடிச்சும்பற்கிசைத்தனர்வெருவினேடும் ... *

(இதன்பொழிப்பு.)

என்னைப் பற்றிக்கொண்டுபோகவந்த சண்டனுடனே முண்டனென்பவனையுஞ் சேதித்தவிதத்தினுல் விளக்கம்பொருந்திய சாமுண்டியென்று பெயர்பெற்று உலகத்திலே யாவர்களாலும் பூசைசெய்ய நிறைந்து உனதுமனதில்மகிழ்ச்சி யடைவாயென்று சொல்லுங்காலத்தில் யுத்தகளத்திலே மடிந்தவர்கள்போகத் தப்பி இளைத்தவர்களெல்லாம் ஓடிப்போய் சும்பனுக்குச் சொல்லினுர்கள் அதிபயங்கரத்துடனே - (எ-று.) (உஎ)

அஞ்சினர்மாற்றங்கேளாவகிலமும்விழுங்குமாற்ற ... ... ... *
நஞ்சினிற்கனன்றுசீறிநாகரைமடிக்குமாற்றல் ... ... ... *
வெஞ்சினத்தூமக்கண்ணன்முதலியவீரர்தம்மை ... ... ...*
வஞ்சினத்தோடுமேவமாநிலநெளியவந்து ... ... ... *

(இதன்பொழிப்பு)

பயந்தவர்களாய் வந்துசொல்லிய வீரர்களது வசனத்தைக் கேட்டுஉலகங்களையும்விழுங்கிப்போடத்தக்க வல்லபத்தையுடைய ஆலகாலவிடத்தைப்போற் கொதித்துச்சீறி நாகலோகத்தார்களையெல்லாம் வதைக்கப்பட்ட வல்லபம்பொருந்திய கொடியகோபத்தையுடைய தூமக்கண்ணன்முதலிய அனேகவீரர்களைஅனுப்ப அவர்கள்யாவரும் பூமிநெளியவந்து - (எ-று.) (உஅ)

பொருப்பிடையினிதுமேவும்புண்ணியப்பொருளைச்சூழ்ந்து...*
நெருப்புறுசூலமொள்வாள்கப்பணநெடியகுந்த ... ... *
மூருப்புறுபகழிமாரியுலப்பிலச்சிதறியார்ப்ப .. ... .. .. *
வருப்புறுமூலையாளேக்கிநன்றெனவாற்றல்மேவி ... ... *

(இதன்பொழிப்பு)

பருவதத்தினிடத்து இன்பமாகவீற்றிருந்த புண்ணியத்தின்பயனுகிய பார்வதியாளைச் சூழ்ந்துகொண்டு ஊனீனைதாம்

(இதன்பொழிப்பு.)

தூமக்கண்ணர் முதலியவராய் போர்செய்த படைத்தலைவர்
கள் யாவர்களும் எதிரிகளாக யுத்தஞ்செய்த பகைஞர்கள்வதைத்
தலினால் மடிந்தார்களென்று தப்பியோடினவர்கள்சொல்ல அந்த
வசனத்தைக்கேட்டு நகைப்பானதுதோன்றகரோமாகியகோபத்தை
யுடைய மஹாநாகத்தைப்போலவேசீறி ஆதிசேடனது ஆயிர
மணிப்படங்களுஞ் சாயும்படியாகக் குவிந்தசேனைசமுத்திரஞ்
சூழும்படியாக - (எ-று) (௫௪)

தெறுசினந்திருகிக்கண்கடீப்பொறிசிதறத்தேர்மேற் ... . *
குறுகினன்குறுகலோடுங்கோற்றொடிபிராமியாதி ... ... ...*
யுறுபடைக்குறைப்பானின்றிங்குற்றவனிசுப்பனுக்கும் .. .. *
சிறுகுமேலுலகமூன்றுங்கடலொடுங்குடிக்கவல்லான் .. .. *

(இதன்பொழிப்பு)

கொல்லவேண்டுமென்று கோபமிருந்து கண்களினின்று அக்
கினிப்பொறிகள் சிதறும்படியாக இரதத்தின்மீதுவந்துசேர்ந்தான்
வந்துசேர்ந்தவுடன் வளையல்களைஅணிந்த அபிராமிமுதலியவர்க
ளாக இருக்கின்ற சேனைகளைச் சேதிப்பான் இங்குவந்தவன் நிசும்
பாசுரனுக்கும் கொஞ்சம்அடங்குமாகில் திரிலோகங்களையும் சத்த
சமுத்திரத்தையும் பானப்பண்ணுதற்கு வல்லவன்-(எ-று) (௫௫)

நெடியவனுட்குமாற்றநிறைந்தவநெருப்பிற்சாலக் ... ... *
கொடியவனிவனையானேகுறைக்குவனீவிர்கொணமூ ... ...*
வடிவொடுவந்தசேனைமாற்றிடுமென்னவல்லே ... ... ... *
றொடியினிற்படையின்மேவிக்குறைத்தனர்நாழிலாடி ... ...*

(இதன்பொழிப்பு)

மகாவிஷ்ணுவுங் குன்றும்படியான வலிமைநிறைந்தவன் அ
க்கினியைப்பார்க்குங் கொடிதானவன் இவனையானேசம்மாரஞ்
செய்கிறேன் மேகத்திரளைப்போலே வந்தசேனைகளையெல்லாம் நீ
ங்கள் செயம்பண்ணுங்கோளென்று பார்வதியானவள் சொல்லிய

காலத்தில் அதிதுருதமாக ஒருகணத்துக்குள்ளே அசுரனதுசேனை களிற்போய்ச் சேதித்தார்கள் கொலைசெய்து-(எ-று) (ருசு)

கரிபரிதிகிரிகாலாட்கடற்படைநெளியப்புக்கு . ... ... ...*
முரிதரச்சூலமொள்வாள்முசலமேமுதலவீசி .. ... ... *
யெரியெனவரியசிந்தியிடைந்தனகுருதிவெள்ளம்.. .. ...*
விரிவுறட்பரந்தகூளிவிதம்பலநடிப்பவூறி.. ... ... ... *

(இதன்பொழிப்பு.)

இரதகஜ துரகபதாதிகளாகிய கடல்போன்றசேனைகள்யாவும் நெளியும்படியாகப்போய் அச்சேனைகள்குலையும்படி சூலங்கள் வாளாயுதங்கள் இருப்புலக்கைகள் இவைமுதலிய ஆயுதங்களைவீசி அக்கினியைப்போலச்சேதிக்அதனால்சின்னப்பட்டு தோற்றனவாய் உதிரவெள்ளம் பெருக்கமாகப்பரவியவாய் கூளிக்கூட்டங்களெல் லாம்பலபலவிதமாகவிரமிகுந்துகூத்தாடும்வண்ணம்-(எ-று)(ருஎ)

மறிதிரைக்கடலின்வந்தவலியவெம்படைகண்முற்று ... ... *
மெறிவளிப்பஞ்சுபோலவிரிந்திடநிசும்பனேகிப்.. .. .. *
பொறிவிழிககனடகள்சிந்தப்பூவையர்மீதுபோதா ... ... *
நெறியிடச்தேவிநேர்ந்துநில்லெனத்தடுட்பநீசன்... ... .. *

(இதன்பொழிப்பு.)

மறிப்படிருக்கின்ற அலைகடலைப்போல்வந்த வலிமைபொருந்திய சேனைகள்முழுதும் பிரசண்டமாருதத்தின்முன் பஞ்சைப் போல ஓடிப்போகுமளவில் நிசும்பாசுரன்பார்த்து அக்கினிப்பொறிகள் கடைநேத்திரத்திற்சிதறும்படிக்கு அப்பெண்கள்மீது யுத்தத்திற்குப்போகவழிக்கொள்ளுமிடத்தில் பார்வதியானவர்வந்தெதிர்த்துநில்லென்று தடைசெய்தபோது நிசும்பாசுரன்-(எ-று)(ருஅ)

கோலவெஞ்சிலைகால்கோலிக்கொடுங்கணைகோடிகோடி... ...*
யாலமுமனனுமெலினப்பொழிந்திடவகைகள்சிந்தச்.. ... *
சூலமேகொண்டுகைவிற்றொடுங்கடுங்கணைகள்வெய்யோன் ...*
கோலமார்பதனில் மூழ்கிக்குளித்திடக்கோல்செய்தான் ... *

(இதன்பொழிப்பு.)

அழகுபொருந்தியவில்லைக் காலினால்வளைத்துக் கொடியபாணங்களைக் கோடிகோடியாக விடவும் அக்கினியுங்கலந்ததுபோல நிசும்பாசுரன் பலவிதமாகப்பிரயோகஞ்செய்தகாலத்தில் சூலாயுதத்தைக்கொண்டே அவைகளையெல்லாம்பொடிசெய்து கையில்வில்லினாலே பிரயோகிக்கின்ற கடூரமாகியபாணங்களை அப்பார்வதியினது அழகுபொருந்திய மார்பினிடத்துஉருவி உதிரத்திவலைகளிக்கும்படியாகவளைத்து எய்தாள் பார்வதி-(எ-று) ஒருகோடியனல்-ஒருகோடிவிசிமெனினும் அமையும் (௩௧)

வடிக்கணைமழுக்கமாழ்கிவலியுறவெழுந்துச்சீறிக் ... ... ...*
குடிகொடுமரத்துவெய்யோர்கூடிடாதிவளோடென்ன ... *
விடிக்குரலார்ப்பினோடுமிலங்குவாள்பலகையேந்தி .. . .. *
மடிகுவலிவளையென்னவெதிர்ந்தனன்வலியின்மிக்கான் ...*

(இதன்பொழிப்பு)

வடித்தெடுத்தப் பாணமானது தைத்துருவியகாலத்தில் மயக்கி வலிமையாகஎழுந்து கோபித்து குடியாகிய வில்லினாற்செய்யப்பட்ட கொடிதாகிய யுத்தமானது இவளுடனேதகாதென்று இடிக்குரல்போன்ற சத்தத்துடனே பிரகாசிக்கின்ற வாளும் கேடகமும் ஏந்திக்கொண்டு மடித்துப்போடுகிறேன் இவளையென்று எதிர்த்தனன் வலிமையிலுயர்ந்த நிசும்பாசுரன் - (எ-று) (௩௨)

அணங்கினையெதிர்ந்துவாளாவடர்தரவீசமாற்றிப்... ... ...*
பணங்கிளரல்குற்பாவைபாந்தளிற்பரியவொள்வாள் .. ... *
வணங்கிறைக்கரத்திற்பற்றிவலியபோர்பலவும்வஞ்சித் .. . *
துணங்குறவாளுந்தோளுமொருங்குவீழ்ந்துவப்பன்வஞ்சன் *

(இதன்பொழிப்பு.)

பார்வதியையெதிர்ந்து வாளாயுதத்தினாலே கொலைபடும்படியாக வீசியகாலத்தில் அவ்வாளாயுதத்தைத்தடுத்து படத்தைப்போலேவிளங்குகின்ற அல்குலையுடைய உமையானவள் சர்ப்பத்தைப்போலே [illegible] கின்ற வாளாயு

த்தைத் துவளும்படியான இறைகளையுடைய கையிற்பிடித்துக் கொண்டு வலிமைதங்கிய பலவகைப்பட்ட யுத்தங்களையும் வஞ்சித்து வாட்டமாக வாளாயுதமும் அவ்வாளாயுதத்தையேந்திய வலது கையும் ஒன்றாக அற்றுவிழச்செய்தும் சந்தோஷித்தையுடையவனாக நிசும்பாசுரன்- (எ-று) (சக)

இடக்கையாற்றண்டமேற்றெறிந்திடமாற்றிப்பின்போர் ... *
தொடக்குமுன்சிரத்தையீர்ந்துணித்திடநிசும்பன்சோர்ந்தா *
னடற்கருமவுணன்றன்னையழித்தனையென்றுபோற்றித் ... ...*
தடக்கமலத்தாள்சார்ந்தசத்திகட்குணர்த்துகின்றாள் ... ... *

(இதன்பொழிப்பு.)

இடதுகையினாலே தண்டத்தைத்தாங்கி யெறிந்தகாலத்தில் அந்தன்னாயுதத்தைத்தடுத்துப் பின்பு அந்தநிசும்பாசூரன் யுத்தத்துக்குத்தொடங்குமுன்பு அவனதுதலையையரிந்து துண்டுசெய்திட சோர்ந்துவிழுந்தனன் அந்தகாலத்தில் யாவராலும்வெல்லுதற்கரிய அசுரனைநாசஞ்செய்தாயென்று ஸ்துதிசெய்து பெருமைபொருந்திய திருவடித்தாமரையில் நமஸ்கரித்த சத்தியர்களுக்குஅறிவிக்கின்றார் - (எ-று) (சஉ)

மாய்ந்தவன்றனக்குமுன்னோன்மான்முதற்றேவர்சுற்றுங் ... *
காய்ந்தவன்கரத்தினண்டகடாகநீறுக்குமாற்ற... ... ... *
லேய்ந்தவன்சும்பனென்பானெதிர்ந்துபோர்க்களத்துநீறாய் ...*
வீய்ந்திடிற்றேவர்க்காகும்விண்ணுலகென்னும்வேலை .. ... *

(இதன்பொழிப்பு.)

இப்போதுமாய்ந்த நிசும்பாசுரனுக்குத்தமையனென்பவன் விஷ்ணுமுதலிய தேவர்களெல்லாரையுங்கோபித்தவன் உள்ளங்கையினாலே அண்டகடாகங்களையெல்லாம்பர்பமாகச்செய்யப்பட்ட வலிமையுள்ளவன் சும்பன்என்னும் பெயரையுடையவன் அவன் எதிர்ந்து போர்க்களத்தில் சாம்பலாக மடிந்துபோவானாகில் தேவர்களுக்கு தேவலோகங் கிடைக்குமென்று சொல்லியகாலத்தில் - (எ-று) (சங)

சுற்றகநிசும்பன்மாய்வென்றுரைத்தலுமுலகமுற்றும் ... ... *
பற்றறப்பருகுவால்போற்கொதித்தணிப்பாழித்தேர்மேற்... *
சுற்றுவெம்படையின்வெள்ளஞ்சூழ்தரவேகிச்சேனை ... ...*
கொற்றவைதன்னைச்சூழ்ந்துகொதித்தபிராமிமுன்னோர் ... *

(இதன்பொழிப்பு)

யுத்தகளத்திலே யாவர்களையும் பொடிபடுத்தத்தக்க அகங்கா ரத்தையுடைய நிசும்பாசுரன் மாய்ந்துப்போனானென்று சொல்லி யவளவில் உலகமெல்லாம்பற்றில்லாமல் எடுத்து உண்ணத்தக்கவ னைப்போலக் கொதித்து அழகும் பெருமையும்பொருந்திய இரத த்தின்மீது ஆரோகணித்துக்கொண்டு சுற்றிலும் கொடிதாகிய சே னாசமுத்திரங்கள் சூழ்ந்துவரும்படியாகவந்து அவன்சேனைகள் பார்வதிதேவியைச் சூழ்ந்துகொண்டவேளையில் கோபங்கொண்டு அபிராமிமுதலிய பேர்களெல்லாம் - (எ-று) (சச)

மயக்குறுமதுவைமாந்திவரிவிழிச்சுழலப்புக்கு.. ... ... *
வியக்குறுஞ்சேனைமுற்றும்வித்துவித்தாகநூறிக் ... ... ..*
கயக்குறுங்கூட்டம்யானைக்கணமெனக்கலக்கிமாய ... .. *
முயக்குறுமோகமாற்றமுடிந்தனர்மடிந்துமண்மேல் ... ...*

(இதன்பொழிப்பு)

மயக்கஞ்செய்யப்பட்ட மதுக்களைப்பானம்பண்ணி நீண்ட கண்களெல்லாஞ் சுழலும்படியாகப்புகுந்து அதிசயமடையத்த க்க சேனைமுழுதையும் சிற்றுசிற்றாகச்சேதித்து தடாகத்தில் இருக் கின்ற அழுமாகியசலத்தை யானைக்கூட்டங்கள் எவ்விதமாகக்கலக் குமோ அவைகளைப்போல மாயும்படியாகக்கலக்கி அசுராள்முய ற்சிசெய்யப்பட்ட மாயையெல்லாம்நிக்கிரகித்திட பூமியினிடத்து மடிந்து முடிந்தார்கள் -(எ-று) (சரு)

வேறு.

படிமிசைநிறைந்துசூழ்ந்துபரந்தவெம்படைகண்முற்று ... *
நொடியிடைப்பூழியாயநொவைமையுமாதராற்புங் ... ... ...*
கொடியவன்கண்டுகண்மடகொழித்திடசிலைகாலகோலி ... *
வடிநெடுங்கணைகள்கோடிமாதர்மேல்வழங்கினானே ... ...*

(இதன்பொழிப்பு.)

பூமியினிடத்து நிறைவுபெற்றுச் சூழ்ந்து விசாலமாகவந்த கொடிய சேனாசமுத்திரங்களெல்லாம் ஒருகணநேரத்துக்குள்ளாகத் தூளியாகிய இலேசத்துவத்தையும், சத்தமாதாக்களது கெற்சிதத்தையும் சும்பாசூரனானவன்பார்த்துகண்களெல்லாம்அக்கினித்திரளைச்சிதறும்படியாக வில்லைவளைத்து வடித்தெடுத்த நீண்டபாணவருஷங்களைக் கோடிகோடியாக சத்தமாதாக்கள்மீது பிரயோகஞ்செய்தான் - (எ-று) (சுசு)

தூரந்தவெங்கணையான்மாதர்சுளிந்திடத்துரிசுநீக்கி ... ... .. *
வரந்தருகுமரிநேர்ந்ு வஞ்சனைவருதியென்றே... ... ... *
யுரந்தருமிடியினார்ப்பவுருமுவெம்பகழிதேவி ... ... ...*
கரந்திடப்பொழியத்தாலாறகடிந்தறச்சிதறக்கன்னி ... ... *

(இதன்பொழிப்பு)

சும்பாசூரன் பிரயோகஞ்செய்த கொடியபாணவருஷங்களினால் மாதர்களெல்லாம் வருத்தங்கொள்ள அவர்கள் வருத்தத்தை நீக்கி வரப்பிரசாதத்தைத்தருகின்ற உமையானவள் எதிர்ந்து சும்பாசூரனைவாவென்று வலிமைபொருந்தியஇடியைப்போல் சத்திக்கும்படியாக இடியேற்றமாகிய கொடியபாணத்தை உமையானவள் ஒளித்துக்கொள்ளும்படி சொரிய அப்பாணங்களையெல்லாம் கேடகத்தினாற்கடிந்து அசுரன் முழுதுஞ் சிதறியகாலத்தில் உமையானவள் - (எ-று) (சஎ)

கொடுமரங்குழைத்துக்காலக்கொடுங்கனற்பகழிமேனி ... ...*
வடுவுறவடுத்தச்சும்பன்வருந்தியுப் வலியனாகிக் ... .. ... *
கடுவுமிழ்கணைகளேவிக்கன்னியையடர்க்கவில்வா ... ... .. *
ரடுசிலைவயப்போர்பல்காலாற்றினராற்றன்மிக்கார் ... ... *

(இதன்பொழிப்பு.)

உமையானவள்வில்லைவளைத்துப் பிரயோகஞ்செய்த அந்தக் கொடுமையாகிய அக்கினிபோன்ற பாணமானவைத் தனதுதேகத்தில் புண்படும்படியாக உருவிடப்பெற்ற சும்பனென்பவன் வருத்

தமடைந்தும் வலிமையுள்ளவனாகி விடத்தைக்கக்கப்பட்ட பாணங்களைப் பிரயோகஞ்செய்து பார்வதிதேவியைத்தடுக்க இவ்விதமாகக்கொலைசெய்யப்பட்டவில்லினால்வெற்றிபொருந்தியயுத்தங்களைப்பலபலதரஞ்செய்தார்கள் வலிமையுள்ள இருவர்களும்-(எ-று)()

பிறைமுகக்கணையாற்சும்பன்பிடித்தவில்லற்றுவீழக் ... ... *
கறையனற்பணியிற்சீறிக்கடுவுமிழ்நெடியவொள்வா ... ... *
ணறைகழல்வுமையேந்தியடர்ந்துடனருகுமேவ. ... ... *
விறலியுட்பலகையொள்வாளேந்திவந்தெதிர்த்துக்காய்வாள் ..*

(இதன்பொழிப்பு)

சந்திராஸ்திரத்தினாலே சும்பாசூரன் பிடித்திருந்தவில்லானது அற்றுவீழ்ந்தகாலத்தில் விஷநாகத்தின்பொருந்திய நாகத்தைப்போலச்சீறி நஞ்சையுமிழ்க்காநின்றதாயும் நீளமாகவும் ஒளிபொருந்தியும் இராநின்ற வாளாயுதத்தைஒலிக்கின்ற வீரகண்டையையணிந்த சும்பனென்பவன் எந்திக்கொண்டு நெருங்கி யுடனேஅருகில்வந்து சேர்ந்தவுடன் உமையவளும் கேடகம் ஒளிபொருந்தியவாளாயுதம் இவைகளையேந்திவந்து யெதிர்ந்து கோபித்தவளாக -(எ-று)(௪௬)

ஒருவரையொருவர்சாலவொறுத்துடன்கவ்வியொட்டி .. .. *
வெருவரவிதிர்த்துச்சாரிவிதமுறைசுழன்றவேலைப் . ... *
பொருவலிச்சும்பன்வஞ்சப்பூட்கையிற்பொருமாறெண்ணக் . *
கருவரியனையதோளைவாளொடுகவின்வீழ்ப்ப ... ... ... *

(இதன்பொழிப்பு)

ஒருவரையொருவர் மிகவுங்கண்டித்துப் பற்றினவர்களாய்த் தொடர்ந்து பயங்கொள்ளும்படியாக அசைந்து வலசாரி இடசாரியாகச் சுழன்றகாலத்தில் போர்செய்கின்ற வலபத்தையுடைய சும்பனென்பவன் வஞ்சமாகிய யானையுருக்கொண்டு போர்செய்யவேண்டுமென்று கருதியவளவில் அவ்வசுரனது இருளுக்குச்சமமாகிய தோளை வாளுடனே பார்வதிதேவியாலவர் அறுத்துத்தள்ளிடலாயினள் (எ-று) (௪௭)

விழிபழலொழுகச்சீறிமெல்லியல்விமலமேனி ... ... ... *
யழிவுறப்படுப்பனென்னவடர்ந்துவெங்கையில்வாளாற் ... . *
பழியமசிரத்தைதச்சிந்தப்பாழிவாய்க்குருதிசால ... .. . *
விழிதருசும்பன்மாய்ந்தானிமையவர்துக்கந்தீர்ந்தார் ... *

(இதன்பொழிப்பு)

கண்ணினின்று அக்கினியானது சிந்தும்படியாகக்கோபித்து இப்பெண்ணினது சுத்தமாகிய சரீரமானது அழியும்படிக்குச்சேதிப்பனென்றுநெருங்கி டார்செறிபானவள் அழகிய கையிற்பிடித்த வாளினால் பழிபொருந்திய அவனது தலையைச் சேதித்தவளவில் பருத்தவாயானது உதிரத்தைச்சொரியுமாறு தாழ்வாகியசும்பாசுரன் மாய்ந்துப்போனான் தேவர்களெல்லாம் இடுக்கட்டீர்ந்தார்கள்

பணித்திடுநிசும்பசும்பற்கிளையவள்பறவைவெந்தீ ... .. ... *
துணித்தெழுங்குரோதியென்பாடற்றிடமைந்தனுவான் .. .. *
பணித்தலையரவந்தாங்குமவையமோர்விரலிற்றாங்குங் .. . *
குணித்திடுவலிமைபூண்டுகொண்டான்கொடியவன்கடியசொல்லான் *

(இதன்பொழிப்பு)

முற்சொல்லிய நிசும்பன் சும்பனென்னும் இருவர்களுக்கும் இளையாளானவள் சமுத்திரத்தில் கொடியவடவாக்கினியையுந் தணிக்கப்பட்ட குரோதியென்னும்பெயரையுடையவள் பெற்றனைத்தனவன் இரத்னச்சிரசுகளாலே ஆதிசேடன் தாங்கிக்கொண்டிருக்கப்பட்ட உலகத்தை ஒருவிரலினாலேதாங்கும்படி யெண்ணப்பட்ட வலிமையைப்பெற்றவன் மிகவுங்கொடிதானவன் கடுஞ்சொல்லையுடையவன் - (எ-று) (௫௨)

பற்பலநோற்றுப்பங்கயத்தவன்பாற்றன்மேய ... ... ... *
யற்பமோர்துளியேயேனுமவனிமேல்வீழ்திறம்போல் .. . *
மற்பயில்வீரனுகவரங்கொண்டானிரத்தவீசன்... ... ... *
கற்பகநீழல்கொண்டான்கடவுளரவனிமேவி ... ... ... .. *

(இதன்பொழிப்பு)

பலவாகிய தவங்கள்செய்து பிரமதேவனிடத்தில் தனதுதேகத்திற்பொருந்திய அற்பமாகிய ஒருதுளியேயாயினும் உதிரம் பூமி

பிற்சிந்துமாகில் தன்னைப்போல மல்லுயுத்தஞ்செய்கின்ற வீரனாகவேண்டுமென்று வரத்தைப்பெற்றவனாகி இரத்தவீசனென்பவன் தேவர்களுக்குரிய தேவலோகத்திற்குப்போய் கற்பகவிருக்ஷ நீழலைக்கொண்டான் - (எ-று) (௫௩)

மதமலிகளிற்றின்மத்தமருவினன்வலியின்மிக்கான் ... ... ...*
கதமுறக்களிப்பான்மாமனிறந்தமைகருதிநால்கு .. . *
விதமுறுசேனையோடும்பிகைவிளங்குப்பாங்கிற் .. ... .. *
சதமகன்முதலோரஞ்சச்சார்ந்தனன்சார்தலோடும் .. ... *

(இதன்பொழிப்பு)

மதநிறைந்த யானையைப்போல உன்மத்தமடைந்தவனும் வலிமையிலே மிகுந்தவனும் கோபத்துடனே களிக்கத்தக்கவனுமாகிய இரத்தவீசனென்பவன் தனதுமாமன்மார் இறந்துப்போயதைக்கருதி இரதகசதுரகபதாதிகளாகிய சேனைகளுடனே பார்வதிதேவியார் விளங்காநின்ற இடத்திற்கு பிரமாமுதலிய தேவர்களெல்லாம் பயங்கொள்ளுந் தன்மையாகவந்தனன் அப்படிக்கு வந்தகாலத்தில் - (எ-று) (௫௪)

கன்னிதன்சேனைவந்தசேனையைக்கரிந்தகாட்டுப் .. ... ... *
பன்னிபோற்சூழ்ந்துபற்றிமடிதரக்கடிந்துமாய்ப்பச் ... ...*
சென்னிமேற்கரங்கள்வைத்துசிற்றினர்சிதையக்கண்டு..... *
தன்னிகரரத்தவீசன்முனிவுடன்சாரமாதர் ... . ... ...*

(இதன்பொழிப்பு)

உமாதேவியின்சேனைகள் வந்தசேனைகளை இருண்ட ஆரண்ணியவாசிகளாகிய தெய்வப்பெண்களைப்போல் சூழ்ந்துகொண்டுபிடித்து வதையும்படியாக மாய்த்தகாலத்தில் தங்கள் தங்கள் தலைகளின்மீது கைகளைவைத்துக்கொண்டு கோபத்தையுடையவராகச்சின்னபின்னப்படுவதைக்கண்டு தனக்குத்தானே நிகராகிய இரத்தவீசன் கோபத்துடனேவந்தகாலத்தில் சத்தமாதர்கள்-(எ-று) (௫௫)

நேர்ந்தனனிரத்தவீசன்றனையடநிருதன்முனுங் ... ... ... *
பூட்டிந்தவெம்பகணைகள்மாதர்குலைந்திடவிடலும்புண்ணீர் ....*

வார்த்தனவொழுகவேழெனமருவமாதாக்கள்கோபஞ் *
சார்ந்தனர்கருவிச்சூலமுதலியதடக்கையேந்தி ... ... ...*

(இதன்பொழிப்பு)

எதிர்த்தவர்களாகி இரத்தவீசனைத் தடுக்க அவ்வசுரன் கூர்மைபொருந்திய கொடூரமாகிய பாணங்களை சத்த மாதாக்களது தேகங்குழையும்படியாக விட்டவளவில உதிரமானது தாரையாக ஒழுக எழுவர் என்றுங் கணக்கைப்பொருந்திய மாதாக்கள் கோபம அடைந்தவர்களாய்க் கருவிக்கொண்டு சூலாயுதமுதலிய ஆயுதங்களை விசாலமாகிய கையிற்றாங்கி-(எ-று) (௫௬)

வலிகெழுமிரத்தவீசன்வடிவினையீரச்சோரி .. ... .. ...*
பொலிதருபுவனமீதுபொறியெனச்சிதறிப்போர்ப்ப ... .. *
குலிகெழுதிண்டோள்கொட்டிக்கனன்றுபோர்க்கெழுந்தார்காய *
மலிதுளிக்கொருவராகவையகநிறைந்துமல்க .. ... ... *

(இதன்பொழிப்பு)

வலிமையினால் விளங்கப்பட்ட இரத்தவீசன் தேகத்தைப் பிளந்தகாலத்திலே உதிரத்துளியானவை விளககமாகிய பூமியின் மீது அக்கினிப் பொறிகளைப்போல சிதறி யெங்குநிறைந்தபோது அவனதுகாயத்திலிருந்து நிறைந்த துளியொன்றுக்கு ஒவ்வொருவராகக் கைகளினால்விளங்காநின்ற வலிமைபொருந்தியபுயங்களைத்தட்டிக்கொண்டு கோபித்தெழுந்தார்கள் பூமியெல்லாம் நிறைந்து மிகுதியாக - (எ-று) (௫௭)

எழுவருமிதும்பூதெய்திியென்கொலாய்விளையுமென்னத்... ...*
தொழுதுமைதன்னைச்சோரித்துளியினுக்கொருவர்தோன்றி *
முழுவலியேய்ந்துசாலமூர்க்கராயுலகமூடிக் . . . .. *
குழுமினர்செய்வதேதெனநினைக்கவகருமாரிசிறி.. .. ... *

(இதன்பொழிப்பு)

சத்தமாதாக்களும் ஆச்சரியத்தையடைந்து என்னவிபரீதமாக விளையுமோவென்று உமையவளைத்தொழுது உதிரத்துளியொன்றுக்கு ஒவ்வொருவராகத்தோன்றி பூரணமாகியவலிமையை...

ர்ந்து மிகவுங்கோபத்தையுடையவர்களாக உலகத்தையெல்லாமழு டிககொண்டுத் திரளானார்கள் இனியாதுசெய்வதென்று சொல்லு பார்வதியார்கோபித்து-(எ-று) (ருஅ)

மூறுகியசினமிக்கூர்ந்துமுதிர்ந்திடப்பருவநெற்றிக் ... ... *
குறுகினதுடித்தவாயுங்குருதிகப்பொழிந்துகால . ... .. *
மறுகியவதனமுற்றுமையிருடபடிவமாய .. .. .. .. *
திறுகியகொங்கையிவ்வாரிருஞ்சினவடிவமாக... ... ... ...*

(இதன்பொழிப்பு)

மறுகியகோபமிகுந்து முதிர்ச்சியடைந்திடப் புருவங்கள் நெற்றியிற்போய் குறுகினதுகளாம் துடித்ததாகியவாயும் உதிரங் களைச்சொரிந்து மிகவுங்கொதிப்பையடைந்த முகமும்-எல்லாங் கரிய இருள்வடிவத்தைச் சார்ந்தவாய் ஸ்தனபாரங்கள் இறுக்கத் தையடைந்தனவாய் இவ்வாறு பரமேஸ்வரியார் மிகுந்தகோபவ டிவமானகாலத்தில் - (எ-று) (ருகூ)

அறிவருமாயைமேவவகிலமுமச்சமேவுங் .. ... ... .. *
குறியுறுமுருவினின்றுந்தோன்றினள்கோபமுற்றுந் .. ...*
செறிதருமுருவமென்னத்திறமுமகங்காளமாக . ... *
வெறியுறுகாளிதோற்றம்விளம்பினங்கருமந்சொல்வாம்... . *

(இதன்பொழிப்பு)

யாவர்களாலும் அறிதற்கரிய மாயையான பொருந்த உலக மெல்லாம் அச்சமடையத்தக்க விலட்சணையபொருந்திய பார்வதி யின்வடிவத்தினின்று கோபமுமுதற் திரண்டுநின்ற ஸ்வரூபமெ ன்றுசொல்லும்படியும் - பார்வதியினால் யாவரையுமடிக்கத்தக்கக் கறுப்பாகிய முகத்தையுடையவளாயுந் தோன்றினாள் அப்படிப்ப ட்ட உன்மத்தம்பொருந்திய காளியினது அவதாரத்தைச் சொல்லி னேம் அவளதுசெய்கையுஞ் சொல்லுவாம் - (எ-று) (கூ௰)

தோற்றியகாளிதேவிதுணையடியேத்திநிற்பச் ... ... .. *
சாற்றினளிரத்தவிசய்முரணியுடட்பெருகு . ... *

வேற்றிய லுருவமாகியிடைந்தனனிவளையிலன்னே ... ... .. *
கூற்றணைக்குமைப்பனியாள்குறித்ததாபுரிதியென்ன ... .. *

(இதன்பொழிப்பு)

இவ்விதமாகப் பார்வதியாரது கொடூரகோபாந்தகாரமாகிய வடிவத்தினின்று அவதரித்த காளியானவள் பார்வதியினது இருசரணாரவிந்தங்களையும் வணங்கிநிற்க அவளைப்பார்த்து உமையவள் இரத்தபீசனென்னும் அசுரன் உலகத்திலிடங்களெல்லாம் போதாமல் வெவ்வேறாகிய விலட்சணப்பொருந்திய வடிவமாகிவந்து நெருங்கினான் இவனை இத்தினமே எமன்படைக்கிரைப்படியாக யான் வதைசெய்கின்றேன் நீ யானெண்ணினபடி செய்வாய்-(எ-று)(௬௧)

சோரியங்கவர்கண்மேனிசொரிதருதுளியொவ்றேனும் .. .. *
பாரிடையுறாதின்னெட்பற்றியகபாலத்தேற்றி . . . *
வாரியினினைறசகியோர்வாய்மடுத்திடுதியென்ன ... .. .. *
வாரியையுவாத்தூக்காலவனற்பொழிசூலமேந்தி . ... ... *

(இதன் பொழிப்பு.)

அந்த அசுரர்கள் சரீரத்தினின்று சொரியத்தக்க உதிரத்துளிகளில் ஒன்றேனும் பூமியில்விடாதபடி உனது கையிற்பிடித்திருக்கின்ற கபாலத்திலேயேற்றி வாரிவாரி இனிப்பாகிய மாமிசங்களுடனே உண்ணக்கடவாயென்று பார்வதியார்சொல்லக் காலனைப்போல அக்கினியைக் கக்காநின்ற சூலப்படையை யேந்திக்கொண்டு - (எ-று) (௬௨)

நகையொடுமாடல்மேவிநானிலமுந்திநாளும் ... .. .. *
பகைசெயுமிரத்தவீசன்பரிந்துடற்சரிந்திழிவிழு . . . .. *
வகைபடக்குறைத்துச்சிந்தியுறத்திடக்காளிசோரி .. *
வகைபதிதைசெயிறோநோாந்தினள்கபாலத்தேந்தி . . . *

(இதன்பொழிப்பு.)

புன்னகையுடனே யுத்தத்தைத்தொடங்கி உலகங்களையெல்லாம் இருட்பிடங்களைவிட்டு ஒட்டித் திரிகியகாலமும் விரோதஞ்செய்யாநின்ற இரத்தவீசன் சருக்குமுற்று உடல்சரிந்துவிழும்படி நறு

ங்குப்வண்ணமாகச் சேதித்தும்- சிந்தியும்-அறுத்துக்கொண்டுப்வர அவ்வுதிரத்தை குற்றம்பொருந்திய மாமிசத்தோடு கபாலத்தில் ஏந்திப் பானஞ்செய்தாள் காளியானவள் - (எ-று) (௬௩)

சிறு நுனிநிலத்திற்சிந்தாதவுணர்தஞ்செனியுஞ்சோரி ... ... *
யறுதசையிறைச்சியோடூண்டிடவுலந்தாரொன்றார் ... ...*
தெறுகளத்திமையோர்சேர்ந்துதேவியைப்பரவிப்போற்றி... *
யறிவரும்பொருளேயன்பர்க்களித்திடுங்கருணைவாழ்வே... ...*

(இதன்பொழிப்பு.)

சிறிய துளியேனும் பூமியிற்சிந்தாமல் அசுரரிடத்திலிருந்து உண்டாகிய உதிரத்தை நிணமாமிசங்களுடனே பட்சித்தகாலத்தில் பகைஞர்களெல்லாம் அற்றுப்போனார்கள் அந்தப் படுகளத்திலே தேவர்கள்வந்து பரமேஸ்வரியைவணங்கித் தியானித்து அறிதற்கரிய பொருளே அன்பருக்குத்தந்தருளாநின்ற கருணைநிதியே-(எ-று)

மூன்ணமற்றமலமாயமூர்த்தமேமூலமேய ... . ... . *
வன்னமேயகிலமீன்றவருட்பெருங்கடலேயாரு. . ... *
மின்னமென்றறியவாராவேகமேயிருக்கின்மேலாஞ் .. .. . *
சின்மயப்பொருளதாயதேவியேபோற்றியென்ன ... ... *

(இதன்பொழிப்பு )

ஆதிமத்தியாந்தரகிதமாய் நின்மலமாகியவடிவமே மூலாதாரமாகப்பொருந்திய அன்னமே உலகங்களையெல்லாம்ஈன்ற பெருமைதங்கிய அருட்கடலே எத்தன்மையுடையவர்களும் இத்தன்மையென்று அறியக்கூடாதயேகத்துவமே இருக்குவேதத்தின் மேலாகிய சின்மயப்பொருளாகிய தேவியேபோற்றி-(எ-று) (௬௫)

நாண்மலர்ப்பழித்தச்செவ்விநகையடிபணிந்ததேவர்க் ... *
கேண்மலிதருவிரீழவிருந்தரசாள்கவென்னப் ... ...*
பாண்மொழிகுமரியவிப்பசையுறுபிசிதச்சோரி . .. *
பூண்மகிழ்காளிதன்னைபுவனையிற்கூவிச்சொல்வாள்.. ... ...*

(இதன்பொழிப்பு.)

அன்றலர்ந்த தாமரைமலரைப்பழித்த அழகுதங்கிய ஒளிபொருந்திய திருவடியைப்பணிந்த தேவர்களுயர்ந்தும்

நிறைந்தும் இருக்கின்ற கற்பகத்தருநீழலில் வசித்திருந்துக்கொண்டு இராச்சியபாரஞ் செய்யக்கடவீர்களென்று இசைபோன்ற வசனத்தையுடைய பார்வதியார் அவர்களிடத்துக்குஅவர்களைபோகச்செய்தபின்பு பஞ்சபொருந்திய ஆல்கலந்த உதிர உணவினால் மகிழ்ச்சியடைந்திருக்கின்ற காளியை மிகுந்தவிருப்பத்துடனே தேவியார் அழைத்துச்சொல்வார்-(எ-று) (௬௬)

மண்டியகுருதிநீத்தமண்மிசைச்சிறிதுமேவா... ... ... .. *
துண்டியாலருந்தியண்டர்க்குயருலகளித்தவாற்றாற் ... ... *
சண்டி மூவுலகிலமேயதையலார்புருடர்தம்மின் ... ... ...*
மிண்டியவலிநின்பாலேவிளைந்தனமிடலினோடும் ... ... *

(இதன்பொழிப்பு)

நிறைந்த வுதிரவெள்ளமுற்றினும் பூமியினிடத்துக் கொஞ்சமேனுஞ்சிந்தாமல் உணவாகஅருந்தித் தேவர்களுக்கு தேவபதத்தைக்கொடுத்தவிதத்தினாலே சண்டியென்னும் பெயரையுடையவளே திரிலோகத்தினும் பொருந்தியிருக்கின்ற ஸ்ரீபுருஷர்களிடத்தில்தங்கிய வலிமைகளெல்லாம் உன்னிடத்தில் உண்டாகிய சாமர்த்தியத்துடனே-(எ-று) (௬௭)

மஙறலந்தருவின்மேயமக்களின்மிக்கார்யார்க்கு ... ... .. *
நன்றுசெய்வரங்களீயநல்கினளுலமீது ... ... ... .. *
துன்றுவேதாளபூதகணங்களுஞ்சூழ்ன்றுசூழ . ... .. .. *
வென்றுலகெக்குமேவிவிருப்பியவலியுங்கொள்வாய் ... ... *

(இதன்பொழிப்பு.)

பரிமளம்பொருந்திய கற்பகநீழலில் வசித்திருக்கின்ற தேவர்களில் உயர்வாகயிருக்கின்ற பேர்களுக்கும் நன்மையாகியவரங்களைத்தரும்படியான வரத்தையுந் தந்தோம், இவ்வுலகத்தினிடத்து நெருங்கிய வேதாளபூதகணங்களெல்லாஞ் சுழன்று சூழ்ந்துவரும்படியாக உலகமெங்கும்பிரவேசித்து செயம்பண்ணி சந்தோஷிக்கும்படியான வல்லபத்தையுங்கொள்வாய் - (எ-று) (௬௮)

இன்னணமனைங்கின்மேவியியந்துநாட் பலசெல்காலை .. .. *
பொன்னவிரசெய்யமேவிட்டுஞ்ஞியடைந்புவனநாதன் .. *

றன்னையமொருவர்க்கெய்தாச்சங்கரன்சாமவேதன் .. ... .. *
பன்னரும்பரமச்சோதிபசுபதிபகவன்சாந்தன்.. ... ... *

(இதன்பொழிப்பு)

இனையதன்மையாகிய தெய்வத்தன்மையோடுபொருந்தி வா சஞ்செய்யாநின்ற நாள்கள் பலசென்றகாலத்தில் பொன்னைப்போ ல்பிரகாசிக்கின்ற சிவந்தமேனியையுடைய புண்ணியனும்-புவன நாதனுந்-தனதுநன்மையொருவருக்கும்பொருந்தாத சங்கரனும்-சாமவேதனும்- சொல்வதற்கரிய பரமச்சோதியும்-பசுபதியும-பக வனுஞ்-சாந்தனும் - (எ-று) (௬௯)

தனிமுதலாயபெம்மான்றாண்டவநிருத்தமேவற் ... ... ...*
குனிவனமடைந்துநின்பாலுற்றிடினுவகைமேவி .. ... *
முனிவனோமலனேடுமுதிர்நடமதிரச்செய்து ... ... ... *
கனிவொடுமவன்பால்வைகிக்காசினிபோற்றவாழ்தி ... ... *

(இதன்பொழிப்பு.)

ஒப்பில்லாத முதல்வனாகிய பரமசிவன் தாண்டவமென்னும் நடனஞ்செய்தற்குக்கருதி வடாரண்ணியத்தைச்சார்ந்து நின்னிட த்துக்குவருவாராகில் இன்பத்தைப்பொருந்தி சுநந்தமுனிவனுக்கு நேராக அப்பரமசிவனுடனே முதிர்ந்தநடனத்தை உலகமெல லாம் அதிரும்படிசெய்து அன்புடனே சிவபெருமான்பக்கத்தில் வசித்து உலகமெல்லாம்போற்ற வாழ்வாய் - (எ-று) (எ0)

இனையனகாளிக்கோதியெழிலெலாந்திரண்டசோதி... .. ...*
யனையவள்கருணைவேலையகிலமுமீன்றவன்னை ..., ... ... *
நினைவரிதாயதூயநிருமலைநிழல்கடுவும்... ... ... ... .. *
புனையிழைமழைசேர்மின்னிற்கரந்தனள்புவனம்போற்ற .. *

(இதன்பொழிப்பு.)

இனையதன்மையாவுங் காளிக்குச்சொல்லிவிட்டு அழகெல்லா ந்திரண்ட சோதிக்குச் சமத்துவமாகியவரும் கிருபாசமுத்திரமா னவரும் அகிலாண்டங்களையெல்லாம்பெற்றதாயானவரும் நினை த்தற்கரிதாகிய பரிசுத்தம்பொருந்திய நிமலையும் ஒளியைத்தானே

வீசும்படி அலங்கரித்திருக்கின்ற ஆபரணங்களையுடையவருமாகிய பார்வதிதேவியார் மேகத்தில் மறையப்பட்ட மின்னலைப்போல மறைந்தனள் உலகமெல்லாந் துதிக்கும்படி - (எ-று) (எக)

எந்நிறைபுகரந்தபின்னிருடிரண்டனையமேனிக் ... ... ...*
காந்திசேர்காளிமத்தோன்மத்தையாய்க்காலுஞ்சோரி... ... *
மாந்தியகளியாற்றேவிவரத்தினுன்மத்தையாகிச் ... .. ..*
சாந்திசெய்பருவமின்றித்தசைநிணங்குருதியுண்டு ... ... *

(இதன்பொழிப்பு.)

பார்வதியார் அந்தர்த்தமானபின்பு இருள்திரண்டு நின்றதற்குச் சமமாகிய சரீரத்தின் ஒளிபொருந்திய காளியானவள் மதோன்மத்தையாக அவுணர்தேகத்தினின்று சொரிந்த உதிரபக்ஷணஞ் செய்த களிப்பினாலும் பார்வதியாரிடத்திற்பெற்ற வரத்தினாலும் உன்மத்தத்தையுடையவளாகி அதனைச் சாந்திசெய்வதற்குரிய பக்குவமில்லாது மாமிசங்கள் நிணங்கள் இவைகளையருந்தி - (எ-று)

வேதாளமுதலமன்னைபூதனைகொள்ளிவாய்ப்பே ... ... ..*
யாதியாய்பலவுஞ்சூழவடவிதோற்றடவிமேவிப் . ... ... *
பாதகலீலையேய்ந்துபலவிடம்பயில்வாள்போத ... ... ...*
வேதரன்விழையுமாலவனத்திடைமேவிநோக்கி... ... ... *

(இதன்பொழிப்பு.)

வேதாளமுதலிய பசாசுகள் - சடைச்சிகள் - கொள்ளிவாய்ப் பேய்கள் - இவையாதியாகிய பலவுஞ்சூழ்ந்து வரும்படியாக ஓர் வனத்தைவிட்டு மற்றொருவனத்திற்குச்சென்று பாதகமாகிய விளையாட்டைப்பொருந்தி பலபல இடங்களினுஞ் சஞ்சரியாநின்றவளாகிய காளியென்பவள் கமலாதனனாகிய பிரமதேவன் இன்பம் அடையத்தக்க திருவாலங்காட்டைச்சார்ந்து அதன்வளங்களையெல்லாம்பார்த்து - (எ-று) (எஉ)

வெண்பிறையணிந்தவேணிவிண்ணவன்கோயிலாக... ... ...*
நன்புறுமிடங்குரோசநடுவேடவனமதாகு... ... ... ... *

மெண்படுமெல்லையெய்தற்கரியதென்றெண்ணிமற்றை ... .. *
விண்பயிலடவிமுற்றுந்தனதெனமேவிவெய்யாள் ... ... *

(இதன்பொழிப்பு.)

வெண்மையாகிய அர்த்தசந்திரனை யணிந்திருக்கின்ற சடாபாரத்தையுடைய பரமசிவன் திருக்கோயிலாக விரும்பியிருக்கின்ற இடம் மத்தியில் கூப்பிடுதூரம் எண்ணப்பட்ட வடாரண்யமாகிய எல்லை அங்குபோவதற்கு அரியது என்றுநினைத்து மற்ற ஆகாயத்தையளாவிய ஆரண்யமுழுதுந் தன்னுடைதென்று கொடிய காளியானவள் வியாபித்து - (எ-று) (எச)

பல்நெடுங்காலமாங்குபயின்றுமைபகர்ந்தமாற்ற .. ... .. *
முன்னியங்கணனுமங்கேயுற்றிடுமென்றுதேறித்... .. .. *
தன்னிகரொருவரின்றித்தடையறச்சரித்தாளாற்பின்.. .. .. *
மன்னியவண்டகோடிமடிதரவயத்தின்மிக்காள் . ... ... *

(இதன்பொழிப்பு )

பலவாகிய நெடுங்காலம் அத்திருவாலங்காட்டினிடத்து வசித்துக்கொண்டு உமையாள்சொல்லிய வசனத்தைக்கருதி பரமசிவனும் அந்த வடாரண்யத்துக்குவருமென்று தேறினவளாய் தனக்குநிகர் ஒருவருமில்லாமல் யாதொருதடையுமற்று சஞ்சரித்தாள் ஆரவாரத்தினால் அண்டத்திரள்களெல்லாம் வதையும்படியானவல்லபத்தில் மிகுந்தவள் - (எ-று) (எரு)

பருமணிச்சுடிகைச்சேடன்பரிவொடுகாளிமேன்மை . ... *
மருவியவண்ணமுற்றுமகிழ்ந்தியினுணர்ந்துமேவி ... ... ..*
கருமுகில்வண்ணன்செய்யகழலிணைபோற்றியிப்பால்.. ... *
வருமுறைதெரித்தியென்னவணங்கிடவழங்குகின்றான் ... ...*

(இதன்பொழிப்பு )

பரிதாகிய இரத்னச்சூட்டையுடைய ஆதிசேடனானவன் அன்புடனே காளியானவள் மேன்மையடைந்தவிதமுற்றினும் இன்பத்துடனேயறிந்து தெளிந்தவனாகிக் கரியமேகவண்ணனாகிய விஷ்

ணுவினது சிவந்த உபய சரணாரவிந்தங்களையுந் துதித்து இதற்கு மேல்வரப்பட்ட முறைமைகளைப் போதிப்பாயென்று நமஸ்கரித்திட அந்தமகாவிஷ்ணுவானவன் சொல்லத்தொடங்கினான்.(எ-று)

வேறு.

கரியகாளிகலந்தபெரும்புகழ் ... ... ... ... *
விரியவோதிவிளம்பியமேன்மையர் ... ... .. *
பெரியராயரல்பெய்கழற்றாளிணைக்... ... ... *
குரியராவருவப்பொடுமுண்மையே ... ... ...*

(இதன்பொழிப்பு.)

கருமைநிறம்பொருந்திய காளியானவள் அடைந்த பெரிதாகியகீர்த்தியை விரிவாகவாசித்துப் பிரசங்கித்த மேன்மையுடைய புலவர்கள் பெரியோர்களாய் பரமசிவனது வீரக்கழல்அணிந்த உபயபாதகமலங்களுக்குச் சுதந்தரம் உடையவர்களாவர் சந்தோஷித்துடனே உண்மையே-(எ-று) (௭)

காளிச்சருக்கம் - முற்றும்.



ஆ. சருக்கம் - ௰௫ - திருவிருத்தம்-௬௱௰௭.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நாரதர் சருக்கம்.



கருமாமுகில்போலுயர்காளிகலந்துகான ... ... ... ... *
மொருவாதுறுநாளிடைநாரதனுற்றவண்ணங்.. .. ... ...*
குருமாமணிசூடியசேடற்குறித்தியென்னத் ... ... .. *
திருமாலுரையாடிவழாமுறைசெப்புகின்றான் ... ... .. *

(இதன்பொழிப்பு)

கரிய நிறமும் பெருமையும்பொருந்திய மேகத்தைப்போல உயர்ந்த திருமேனியையுடையவளாகிய காளியானவள் திருவாலங் காட்டைச்சார்ந்து அவ்வனத்தைவிட்டுப்பிரியாமல் வசித்திருக்கி ன்றநாளையில் நாரதமஹாமுனிவர் அங்குவந்தவிதத்தை ஒளிபொ ருந்திய சிரேட்டத்தையுடைய இரத்னங்களைத்தாங்கிய சிரசினையு டைய ஆதிசேடனையறிந்துகொள்ளென்றுமஹாவிஷ்ணுவானவர் சொல்லிவழுவில்லாமல் முறைமையாக உபதேசிக்கின்றார்-(எ-று)

மஞ்சார்வரைபோலுயர்காளிவனத்தின்மேவி... ... ... .. *
யஞ்சாதுறுநாளிடையாலவனத்தின்மேவி .. ... ... ... *
பஞ்சாரடிபங்கனைப்போற்றிடப்பண்புபான்மை ... ... .. *
யெஞ்சாதுயர்நாரதனாலவனத்தினெய்தி .. ... ... ... *

(இதன்பொழிப்பு)

கரியமேகமானது படிந்திருக்கின்ற பருவநாகாரமாகி உயர்ந்திருக்கின்ற காளியானவள் திருவாலங்காட்டில்வந்து பயமில்லாமல வசித்திராநின்றகாலத்தின் இடையிலே அத்திருவாலங்காட்டிற் சேர்ந்து செம்பஞ்சுக் குழம்புபொருந்திய சிவந்தபாதத்தையு டைய வல்லபார்குழுவியாகனைய மேவை சிங்கப்பெருமானை வணங்

ரும்படியாக நற்குணமும் - நல்லமுறைமையுங் குறையாமல் உய ர்ந்திருக்கின்ற நாரதமுனிவன் சுவாமிவசித்திருக்கும் இடமாகிய ஆலவணத்தில்வந்து - (எ-று) (உ)

சங்கச்சதீர்த்தம்படிந்தாரணஞ்சாற்றுமாற்றி ... ... ... .. *
னங்கச்செவிமேவியபூதியணிந்துமாழைத் .. .. ... ... *
துங்கச்சடைமேவிடசோதியைச்சூழ்ந்துபோற்றி ... ... .. *
வெங்கச்சரவார்த்தவன்முன்னர்விழைந்துமேவி... ... ... *

(இதன்பொழிப்பு.)

சங்கச்சோன்மச்சதீர்த்தத்தில் ஸ்தானஞ்செய்து வேதஞ்சொ ல்லியவழியாக அழகுபொருந்திய செவியிடமெல்லாம் வழியப்ப ட்டவிபூதியைஅணிந்து பொன்மயமாகி யுயர்ந்தசடையிலிடத் து விற்றிராநின்றகடவுளை வலம்வந்துத்துதித்து கொடூரம்பொரு ந்திய சர்ப்பத்தைக்கச்சையாகத் திருவரையில்வரிந்திருக்கின்றவன் சந்நிதியில் இன்பத்துடனேநின்று- (எ-று) (௩)

தேமாரிபொழிந்தெனச்செவ்வழிசேர்ந்தவீணை... .. ... *
யாமாதுரியம்படமெல்லிசையார்ந்தவின்பங் ... .. ...*
காமாரிபெரும்புகழோடுகலந்துபாடப் .. .. ... ... *
பூமாரிபொழிந்தனர்வானவர்போற்றிசெய்தே .. ... ...*

(இதன்பொழிப்பு.)

தேன்மாரியானது வருஷித்ததுபோல செவ்வழிப்பண்சேர் ந்த வீணையினின்று உண்டாகின்ற மாதுரியம்பொருந்த மிருது வாகிய இசைநிறைந்த இன்பத்தை சிவபெருமானது சிறந்தபுகழு டனேகலந்து பாடுங்காலத்தில் புஷ்பவருஷம்பொழிந்தனர் தே வர்களெல்லாந்துதிசெய்து - (எ-று) (௪)

ஊறுஞ்சுவையின்னமுதத்துருவுற்றதேபோல் .. ... ... *
வீறுங்குரலின்னிசைமாலைவிழைந்துமென்பூ .. ... ... ...*
நாறுஞ்சடைநம்பனுவப்பநயந்துசாற்றி . .. .. ... *
யேறுந்தனியேறுடையீசனையேத்தியேகி ... .. ... ...*

(இதன்பொழிப்பு.)

ஊறுகின்ற சுவைதங்கிய இனியஅமுதத்தினைச்செய்தவடிவே வந்ததுபோல் விர்த்தியடையப்பட்ட குரல்முதலிய சத்தசுரங்க ளால்உண்டாகிய இனிப்பைத்தருகின்ற இசைவரிகைளைவிரும்பி மி ருதுபொருந்திய புஷ்பங்கள்பரிமளிக்கின்ற சடிலத்தையுடைய ப ரமசிவன்களிக்கும்படியாய் விருப்பமுற்றுப்பாடி ஆரோகணிக்கப் பட்ட ஒப்பில்லாத இடபவாகனத்தையுடைய பரமசிவனைத் தியா னித்து அங்குநின்று எழுந்தருளி -(எ-று).

சத்தசுரங்களாவன - குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் - இவைகளாம். இவ்வேழினுள் கண்டத்தால் - குரல், நாவினால் - துத்தம், அண்ணத்தால் - கைக்கிளை, தலையினால் - உழை, நெற்றியால் - விளி, நெஞ்சத்தால் - விளரி, மூக்கினால் - தாரம், இவ் விதமாகத் தனித்தனியாகப்பிறக்கும். இவைதாம் வீணையிலே சர்ச் சமம் - ரிஷபம் - காந்தாரம் - மத்திமம் - பஞ்சமம் - தெய்வதம் - நிஷாதம் - என்னும் ஏழுதந்திகளாய். இவற்றிற்கு ஓசையுவமை மயி ல் - இடபம் - ஆடு - கொக்கு - குயில் - குதிரை - யானை - இவற்றின்சுவை க்கு ஒப்புக்கள் பால் - தேன் - கிழான் - நெய் - ஏலம் - வாழை - மாதுளங்கனி. இவைகளின் வாசனையுவமை மல்லிகை - முல்லை - கடம்பு - வஞ்சி - நெய்தல் - பொன்னுவிரா - புன்னை. இவற்றிற்கு எழுத்துக்கள் அஆ - இஈ - உஊ - எஏ - ஐஇ - ஒஓ - ஔஉ - இவற்றிற்கு மாத்திரை, குரலுக்கு - ௪, துத்தம் - ௪, கைக்கிளை - ௨, உழை - ௪, இளி - ௪, விளரி - ௩, தாரம் - ௨, இது பரதசாஸ்திரத்தின் விதியாய். இந்தவிதங் களை விரிக்கிற் பெருகுமாம். (௫)

வேறு.

பதியாயபரன்வாமபாகத்துப்பரிவோடுங் ... ... ... ... *
சதியாயதவமாற்றுங்காற்கோடனிடைக்கலையி... ... ... ...*
விதிபாயநாரதனுநினைந்தேகவவன்கண்டு .. ... ... ... *
துதியாதியொடுபூசைதொடக்கவமர்ந்திடுந்தூயோன் ... ...*

(இதன்பொழிப்பு.)

பசுக்களாகிய ஆன்மாக்களுக்குப் பாசமாகிய ஆணவமலத் தைநீக்கி தன்னைத்தெரிவிக்கும்படியாகிய பரமசிவன் வீற்றிருக்குந்

நானத்திற்கு இடதுபுறத்தில் அன்புடனே கதியாகிய தவத்தைச்செய்துக்கொண்டிருக்கின்ற கார்க்கோடமுனிவனிடத்திற்கு கலைக்கியானத்தின்பொருளாகிய நாரதமுனிவரும் எண்ணங்கொண்டுபோக அக்கார்க்கோடன்கண்டு ஸ்தோத்திரமுதலியவான பூசைகளைத்தொடங்கிய தன்மையால் அங்குவசித்தனர் நாரதர் - (எ-று) (௬)

அறவோனைக்குசலங்களன்பினோடும்வினவியபின் ... ... .. *
விரவினியமொழிபேசிவியந்திருவரமர்காலை ... ... ... *
புரகவுருவுடைமுனிவனுரவோனைமுகநோக்கி .. .. ... ...*
யிரவினுருவுறுங்காளியியற்றுமிடரிசைக்கின்றான்... ... ... *

(இதன்பொழிப்பு.)

நாரதமஹாமுனிவரைக் கீதாங்கமாகிய கல்விகளை அன்புடனே கேட்டதன்பின்பு கலந்தனவாகிய இனியவசனங்களைப்பேசி அதிசயித்து இருவர்களும்வசித்திருக்கின்றகாலத்தில் சர்ப்பவடிவத்தையுடைய முனிவனாகிய கார்க்கோடனென்பவன் நாரதமுனிவரது முகத்தைப்பார்த்து பிரளயாந்தகாரவுருவமாகிய காளியானவள் செய்கின்றதுன்பங்களைச் சொல்லுகின்றான் - (எ-று) (௭)

இருளடவிதருக்கணிறைந்திரவியொளியறியாது ... ... ...*
பொருவறுகம்பலமிடைந்துபூந்துணரிற்பொலிந்தவனங் ... *
கருமுகிலினிருங்காளிகடிகளொடுங்கலந்ததற்பி ... ... .. *
னொருமிருகமறவனமுமுறுதுகளாயழிந்தவால்... ... ... *

(இதன்பொழிப்பு)

இருள்தங்கிய ஆரண்யமெங்கும் விருட்சங்கள் நிறைந்து சூரியகிரணம் அறியாமல் ஒப்பற்ற மேற்கட்டுப் பந்தலைப்போல் நெருங்கி புஷ்பக்கொத்துக்களால்நிறைந்த வடாரண்யமானது கரியமேகத்தைப்போல் பெருமைதங்கிய காளியானவள் பசாசுகளுடனே இங்குவந்தபின்பு ஒருமிருகங்களும் உயிருடனேயில்லாமல்அற்றுப்போக ஆரண்யமெல்லாம்பொருந்திய தூளிதூளியாக அழிந்துப்போயினவாம்-(எ-று) (அ)

வஞ்சமுறுங்கடுங்காளிவலியாலுமறத்தாலும்... ... ... ...*
நஞ்சமெனப்பகுவாயினரர்மிருகமுதலாய ... .. ... *
வெஞ்சவயிற்றிடையடக்கியெரியினுருத்தெழுகுரலாற் ... ...*
றஞ்சவடவேதாளபூதகணத்தொகையோடும் .. ... ... *

(இதன்பொழிப்பு)

வஞ்சம்பொருந்திய கடூரியாகிய காளியானவள் வலிமையி னாலும் கொலைத்தொழிலாலும் விடத்தைப்போலப் பிளப்பாகிய வாயினிடத்து மனிதர்கள் மிருகங்கள்முதலியவைகளெல்லாம் இ ளைக்கச்செய்து வயிற்றிடை அடிகக்கியப்பண்ணி அக்கினியைப் போல கோபித்து தொனிமகின்ற குரலினால் யாவரு மடிபடாது போர்செய்வதற்கு வேதாளம் பூதகணம் என்று சொல்லத்தக்க கூட்டத்துடனே - (எ-று) (௧௰)

நடித்திடுமிக்கொடுங்காளிநலிந்திடுமேல்வலிந்திடுவோர் . . *
படித்தலையினொருவரிலைப்பாவவுருவாருமிவ . ... ... .. *
ளிடித்தகுரலொடுமிங்குமெதிர்ந்திடுமோவெனமனமுந் ... *
துடித்தபருமுருகுநெறிதுணிந்தனையேலருளென்ன ... .. *

(இதன்பொழிப்பு)

இவ்விதமாக வஞ்சிக்கின்ற இந்தக் கொடுமைபொருந்திய கா ளியானவள் நலிசெய்வாளாகில் வலிமையடையத்தக்கவர்கள் உல கத்தினிடத்து ஒருவருமில்லை, பாவமேதிரண்ட உருவமாகிய இவ ள் சத்திக்கின்றதொனியுடனே இந்த இடத்திற்கும்வருவாளோவெ ன்று மனமுந்துடித்து வருந்துகின்றது இதற்கு ஒரு உறுதியாகி யமார்க்கம் அறிந்திருப்பீராகில் அநுக்கிரகஞ் செய்யுமென்று கே ட்க்க - (எ-று) (௰)

பணியினொடும்பணிபுருவன்பகர்ந்திடலும்விினைமுனி ... ...*
மணியனையகளமுடையான்மருவுமிடமவராகி .. ... ... *
யணிபுறமித்தலைதியானுகர்தலரிதஞ்சலைநீ . . . ... ...*
துணிநிறியெயவவஞ்சேறிச்சுநந்கமுனிதனைக்காட ... ... *

(இதன்பொழிப்பு)

ணை க்கத்தோடி கார் சோடமுனிவன் கூறியகாலத்தில் நாரத முனிவரானவர் நீலமணிக்குச் சமத்துவமான கண்டத்தையுடை

யவனாகிய தேவர்சிங்கப்பெருமான் வீற்றிருக்கின்ற இடம் வரப் பிரசாதத்தன்மையையுடையதாகி அழகுபொருந்தியிருக்கும், இவ் விடத்தில் இன்மையாகிய காளியானவள் ஓர் உயிர்க்களையும் பசிப் பது மெத்த அருமையாம் நீர் அஞ்சவேண்டாம் துணிவுகொள் ளுமென்றுகூற, அக்காற்கோட்டுமுனிவர் தேறுதலையடைந்து சுந ந்தமுனிவர் இருக்கின்ற இடத்தைத்தெரிவிக்க-(எ-று) (௰௧)

கருத்தினையுமருத்தினையுங் கட்டியொருவழியாக்கித் ... ... .. *
திருத்தமுறுஞ்சமாதியினைச்சேர்ந்துசிவத்தெளிவாய ... ... *
வுருத்திகழவுடம்படிபூமிற்பொருவாதுறக்கண்டு .. .. .. *
டருச்செடியாம்புல்லுருவாயதுகண்டதிசயித்தே ... ... *

(இதன் பொழிப்பு)

மனத்தையும் சஞ்சரிக்கின்ற வாயுவையும் அயிக்கஞ்செய்து ஒருவழியாக்கித் திருத்தமாகிய சமாதியினைப்பொருந்தி சிவத்தைத் தெளிந்ததாகிய உருவம்விளங்கும்படி திருமேனியானது பூமியி லிடத்துப்பொருந்தி நிலைவிட்டுப்பெயராமல் இருத்தலினால் அவ ரருகிலிருக்கையானது தருப்பைப்புல்லின் உருவமாகியதைப்பார்த்து அதிசயம் அடைந்து -(எ-று) (௰௨)

உள்ளமகிழ்வொடுசுநந்தனுற்றதவத்தினைவாழ்த்தி ... ... .. *
வெள்ளியநட்பினொடுங்காற்கோடன்விடுப்பமறை ... ... *
வள்ளலடியிணைபோற்றிமாகவழியிடையேகக் .. ... ... .. *
கள்ளமுறுங்கடுங்காளிகண்டுவார்ந்திடநினைய ... ... ... *

(இதன் பொழிப்பு.)

இதயமகிழ்ச்சியுடனே சுநந்தமுனிவன் பொருந்திய தவத்தை வாழ்த்தி சொல்வதற்கரிதாகிய சிநேகத்துடனே வழிவிட வேதவ ள்ளலாக இருக்கின்ற தேவர்சிங்கப்பெருமானைத் துதித்துக்கொண் டு ஆகாயமார்க்கமாகப் போகாநின்றகாலத்தில் வஞ்சகத்தன்மை பொருந்திய கொடுமையாகிய காளியென்பவள்கண்டு நாரதமுனி வனைக் கவளமாக எடுப்பதற்கு எண்ணங்கொண்டகாலத்தில்-(எ-று)

தெரிந்தமுனிக்காந்தவுருச்செறிந்தடருஞ்சினக்காளி ... ... *
புரிந்தபுரிவினைமாற்றிப்புனிதமுனிவரன்போகிப் ... ... ...*
பரிந்துவகைமனத்தோடுநம்பான்மேவிப்பாணிபல... ... *
விரிந்தவரிதந்திரிதல்மேல்விரலாற்றடவியபின் ... ... .. *

(இதன்பொழிப்பு)

காளியினது எண்ணத்தை அறிந்த நாரதமுனிவர் மறைந்தவுருவத்தைப்பொருந்தி கொலைசெய்யாநின்ற காளியானவள் விரும்பிய இச்சையை விரத்தமாக்கி சுத்தபாவனமாகியமுனிவன் காற்கோடனிடத்து அன்புவைத்த சந்தோஷித்தங்கிய மனத்துடனே நாய்வீற்றிருக்கப்பட்ட வைகுந்தத்துக்குவந்து பலவாக இசைவிரிந்திருக்கின்ற தந்திகளைத் தனதுமிருதுவாகிய விரலினாலே தடவிப்பார்த்தபின்பு-(எ-று) (யச)

மெல்லிசையவீணையொலிவிளைத்துநமதுறும்புகழே ... ...*
புல்லியகொல்லியிற்பாடிப்புனைந்துபணிந்திடப்போத ... *
நல்லியனாரதனைமிகநயங்களித்துநலங்கூர ... ... ... ...*
வெல்லியனூமுலகெங்குமியங்குநீயியம்புதியால் .. ... ... *

(இதன்பொழிப்பு)

மிருதுவாகிய வீணாகானத்தைச்செய்து நம்மிடத்திற்கலந்திருக்கின்ற கீர்த்தியைத்தானே பொருத்தமாகிய கொல்லிப்பண்ணினாற்பாடி அலங்கரித்து நமஸ்கரித்திட மிகவும்நல்லதன்மையாகிய நாரதமுனிவனிடத்தில் அதிகமாகச்சந்தோஷித்து இன்பம் அதிகரிக்க சூரியர்கள்வாசஞ்செய்யாநின்ற உலகமெல்லாம் சஞ்சரிக்கின்ற நீர்சொல்லும் - (எ-று) (யரு)

மறைமுறையுமந்தணருமகருமினுமற்றையவுங் ... .. .. *
குறைவறவேநலமேவிக்குலவியதேகூறுகென . ... .. *
நறைகமழுந்துளவோய்நீநயந்தருளிக்காத்தலினு .. .. ...*
விறையுமொருகுறையில்லையாயினுங்கேளெனச்சொல்வான்.. *

(இதன்பொழிப்பு)

வேதமுறைமையும் பிராமணர்களும் யாகங்களும் இன்னுமற்றவைகளுங் குறைவில்லாமலே நன்மைபொருந்தி குலாவியிருக

கின்றதோ சொல்லுமென்றுகேட்க்க தேவ்களுடனே சுந்திக்காநி லீற திருத்துளவமாலையைத்தரித்த எம்பெருமானே நீர் விருப்ப முற்று காக்குந்தன்மையினுல் எள்ளத்தனையும் ஒர்குறையில்லை யா ளுலுங் கேளுமென்றுசொலவான் நாரதன் - (எ-று) (யகூ)

ஆலவனமெனும்புனிதவடவியினிற்கதிநேரக் ... .. ... *
காலவன லுருவாகுங்காளிகடிபுலடமேவ ... ... ... .. *
ஞாலவுயிர்மிகவொடுங்கிநடுங்கலவைபுரிகின்று ... ... .. *
ணீலமணிதயமுடையாய்நினைந்திலேயோவெனவுரைக்க ... .. *

(இதன்பொழிப்பு)

திருவாலங்காடென்று சொல்லத்தக்க சுத்தபவித்திரமாகிய வ னத்திலிடத்து நடக்குந் தன்மைபொருந்திய காலாக்கினியினது உருவமாகிய காளியானவள் பசாசுகளெல்லாம் பக்கத்திற்பொருந் திவரும்படியாக உலகத்திலிருக்கின்ற உயிர்க்களெல்லா மிக வும் ஒடுக்கமுற்று நடுக்கம்அடையத்தக்கவைகளைச் செய்கின்றாள் நீலமணியானது பொருந்திய மார்பையுடைய எம்பெருமானே அதைநினைந்திலேயோ வென்றுசொல்ல-(எ-று) (யள)

இன்றுமொழிந்தனைபீதுநானறிந்துமறியார்போ ... ... .. *
லின்றுமிருந்தனன்காளியெய்போல்வாரிகள்மேவின் ... ... *
வென்றுகுலமுத்திறந்திறத்தாளம்பிரத்தவிசனைக்கொன் ... .. *
றன்றுமையிங்கிடையீந்தபெருவரத்தோடமர்கின்றன ... *

(இதன்பொழிப்பு)

நீர் இவ்விஷயத்தினைச்சொல்லினீா இந்தக்காளியின்செய்தியை யான்அறிந்தும் அறியாதுபோல இன்றளவும்இருந்தேன் எம்போ லியர்களெல்லாம சண்டைக்குப்போவோமேயாகில் நாங்கள் செ யித்தலினால் தோற்பை அடையத்தக்கவளாம்று அக்காலத்தில் இரத் தவிசனைக்கொன்றதினத்திலே பார்வதியானவர் இவளுக்குத்தந்தரு ளிய மகத்தாகிய வரப்பிரசாதத்துடனே வசித்திருக்கின்றாள் (எ-று)

பாதிமதியணிவேணிப்பரனுலகமேவற்றினுக்கு .. .. .. *
மாதுபதித்திடுக்காளியகந்தையானபருடைத்த .. ... .. *

நிழலினைப் பற்றும்படியாகிய மோக்ஷத்தைத் தருகின்ற ஸ்ரீகயிலாயபருவதத்திற்குச்சென்று தெளிவும்பொருந்திய சனகன்முதலிய யோகர் - சித்த - வித்யாதரா - சத்தத்தெதிவலியாகிய முனிவர்கள் - இயக்கர் - காந்தருவர் - தேவர்கள் - நாகலோகத்து அரசர்கள் - (எ-று)

சிற்றைவெளிசெய ஞானிவரொஸ்றது - ஆணவ இருளாகிய அறையிலிருக்கப்பட்ட அகங்காரமென்னும் வலியகல்லைச் சேதித்து மனமாகிய பூமியைத் திருத்தி மௌனமாகிய வித்தைப்பதித்து அன்பாகிய சலத்தைச் சமர்த்திசெய்து அப்பயிர் வளருகின்றவளாக்ரும் மாயையென்னும் பக்ஷிகள்வந்து கொத்தித்தின்றுவிடாமல் சிவத்தியானத்தினால் நிலைத்துக்காத்துச் சிவபோகத்தை யருந்துவர்களென்னும் குறிப்புத்தோன்றவாம். (உக)

*
அருக்கர்பன்னிருவர்வசுக்களிருவரைவரசர்மாநிதியமர்சுனிக .. *
ருருத்திரர்சத்தமாதரார்சணங்களொட்டிலாநந்திமாகாளர் *
மருககமழ்தருவின்மருவுறையதேவர் மாலயன்முதலியோர்போற்ற
வுருக்குமெல்லிசைபூடரம்பையராதி யொளிமுகிலின்னவ
(இதன்பொழிப்பு) [சையம்.

தாத்துரு - சக்கரன் - அரியமன் - மித்திரன் - வருணன் - அஞ்சுமான் - இரணியன் - பகவான் - திவச்சுவான் - பூடன் சவித்திரு- துவட்டன் - என்கின்ற பெயரையுடைய பன்னிரண்டு சூரியரும், அனலன் - அனிலன் - ஆபச்சைவன் - சோமன் - தரன் - துருவன் - பிரத்தியூசன் - பிரபாசன் - என்னும் அஷ்டவசுக்களும், இவ்வுலகத்து அரசர்களும், அச்சுவினிதேவர் இருவரும், சங்கநிதி - பதுமநிதியென்னும் இருநிதியும், மாதேவன் - அரன் - உருத்திரன் - சங்கரன் - நீலலோகிதன் - ஈசானன் - விசயன் - வீமதேவன் - பவோற்பவன் - காபாலி - சௌமியன் - என்னும் பதினொருவராகிய உருத்திரரும், அபிராமி - இந்திராணி - இலக்குமி - சரசுவதி - வராகி- துர்க்கை - பார்வதி - என்னுஞ் சத்தமாதாக்களும், கணங்களும், நந்திதேவரும், மாகாளமுனிவரும், பரிமளிக்கின்ற கற்பகத்தருநீழலில் வீற்றிருக்கின்ற மற்றுமுள்ளதேவர்களும், பிரமன-விஷ்ணுமு

தலியபேர்களும் போற்றவும், அனைவரையும் உருக்கப்பட்ட மிரு துவாகிய இசையுடனே அரம்பையர்கள் நிர்த்தஞ்செய்து ஒளி பொருந்திய மேக சம்பந்தமாகிய மின்னலைப்போல அசைய வும் - (எ-று) (உஉ)

அரிமதர்மழைக்கணெழில்குவித்தனைய ... .. *
வணிமுலையலங்குமுத்தாரம் .. ... ... *
பொரியரைச்சந்துகருப்பரநாணம் ... ... .. *
பொற்றுகில்பொற்புறவேந்தி . ... ... *
வரியளிபயிலமருமழைபொழியு .. ... ... .. *
மாலையும்பணிகளும்வாய்ந்து .. ... ... *
சொரியிருட்கூந்தற்றேலைகையோர்பாகிற் . . *
றுன்னியேமன்னுயிர்க்கருள ... ... ... *

(இதன்பொழிப்பு.)

அரிகள்பரந்தும் மதர்த்தும் குளிர்ச்சிபொருந்தியும் இருக்கி ன்றகண்களையும் அழகையெல்லாங் குவித்துவைத்தனபோல் அழ காகிய ஸ்தனபாரங்களையும் பிரகாசிக்கின்ற முத்தாரங்களையும் பொருக்குகள்பொருந்திய அடியையுடைய சந்தனங்களையும் பச் சைக்கருப்பூரங்களையும் கஸ்தூரிகளையும் பீதாம்பரங்களையும் அழ குபொருந்தத்தக்கதாகத்தாங்கி இசைபாடாநின்றவண்டுகள்வாசஞ் செய்யப்படி தேன்வருஷித்தை வருஷியாநின்ற புஷ்பமாலைகளும் ஆபரணங்களும்பொருந்தி யிருளைத்தானேவருஷிக்கின்ற அளக பாரத்தையுமுடைய உமாதேவியார் ஒருபாகத்திற்பொருந்தி உலக த்திலிருக்கின்ற உயிர்க்களுக்கெல்லாம் அனுக்கிரகஞ்செய்யவும். ()

மறிமழுசூலந்தமருகங்கபாலம்வல்லியும்வரதமுமற்றும் . .. *
வெறியுறுகமலமலர்க்கையினேந்திவேதமூர்த்திகடுத்தேத்த[மேற்
வெறிகதிர்மணியம்பணியசெய்பொன்னுமிழைத்தபூகுறுத்தியவணை
செறிதருமுலகமுழுவதுமேத்தவமர்ந்தனன்றெய்வநாயகனே *

(இதன்பொழிப்பு)

மான் - மழு - சூலம் - உடுக்கை - கபாலம் - கிளி - வரதம்-இவை முதலியவைகளெல்லாம் பரிமளம்பொருந்திய தாமரைமலரை

யொத்தக் கைத்தலத்திலிடத்தில் தாங்கி வேதபுருஷர்களெல்லாந் துதித்தேத்தும்படியாக வீசுகின்ற கிரணம்பொருந்திய இரத்ன ங்களும் பசியசெம்பொன்னும் இழைத்து அழகுபொருந்தச்செ ய்த சிம்மாதனத்தின்மீது நெருங்கியிருக்கின்ற சகலாண்டங்க ளும் ஸ்துதிசெய்யும்விதமாக வீற்றிருந்தனன் தேவநாயகன்-எ-று

சுருதியின்முடிவுங்கருதியமனமுந்துணிவருஞ்சோதியாயவனைப்*
பருதிகளநந்தமாமெனக்கதிர்கள்பரப்பியபடிவமேயானை [ணரா
யொருதனிமுதலாயுலகெலாம்படைத்துமுன்னமற்றினனதென்று
நிருமலனுபமெபாருவிலாவமலநீதியையாதிநாயகனை ... ...*

(இதன்பொழிப்பு)

வேதத்தின் அந்தத்தினாலும் கருதிக்கொண்டிருக்கின்ற மனதி னாலும் துணிந்துசொல்வதற்கரிய சோதியாகஇருக்கின்றவனே அந ந்தசூரியர்களென்றுகூறும்படி கிரணங்களைப்பரப்பிய வடிவம் பொருந்தினவனே ஒருதனிமுதலாகி அகிலாண்டங்களையெல்லாம் படைத்தும் நினைப்பதற்கு இன்னதென்றுஅறியப்படாத நின்மல னாகிய ஒப்பில்லாத அமலநீதியானவனே ஆதிகாரணமாகிய நாய கனே-(எ-று) (உரு)

கண்டெடன்போற்றி மண்டுமாநந்தக் களியினாற்பரவசமாகிப்,
பண்டுதானறியாவின்பமீதூரப் பரமனைப்பல்முறைப் பணிந்து,
தொண்டுபூண்டியல்வார்க் கின்பமேயளிக்குஞ் சோதியேயாதிநா
யகனே, வண்டுவார்கூந்தன்மங்கையோர்பங்க வழங்குதியருளென
மேவி .. .. .. ... ... ... ... ... ... ... ...*

(இதன்பொழிப்பு)

தரிசித்து உடனேதியானித்து நிறைந்த ஆநந்தத்தேனினாலே பரவசமாகி முன்பு எக்காலத்தும் தான் அறியாத இன்பமிகுதியா கப் பரமசிவனைப் பலபலதரம் நமஸ்கரித்து தொண்டின்றன்மை யைச்சார்ந்து நடப்பவர்களுக்கு இன்பத்தையேயளிக்குஞ் சோ தியே ஆதிகாரணமாகியநாயகனே வண்டார்குழலியென்னும் பா ர்வதியார்வீற்றிருக்கும்பாகத்தையுடையவனே அடியேனுக்குஅரு ளைத்தாருமென்றுவந்து -(எ-று) (உசா)

சந்நிதிமுன்னிருந் துயர்வீணைத்தந்திரிதைவருமுறையா... .. *
லின்னரம்பிரங்குநயன்னர்மேல் கீதமிருஞ்சுவையமுதிநுமினிய *
பன்னயமுற்றுந்தன்னிசைசிதறிப்பணிய தித்துளியெனப்பாடிப் *
பின்னமிறயத்தாற்சதிவிதமேவப்பிறங்கியகளியினுனடித்தான் ...*

(இதன்பொழிப்பு.)

சந்நிதானத்தின்முன்புநின்று வீணையினது தந்திகளைத் தடவத்தக்க முறைமையால் இனிய தந்தியினின்று வருகின்ற நன்மை மிகுந்த மிருதுவாகிய கீதம் பெரிதாகிய சுவைபொருந்திய அமுதத்தைப்பார்க்கினும் இனிமையாகிய பலவகைப்பட்ட நயங்கள் முற்றினுந் தனது இராகத்தினுற் சந்திரகிரணமிர்தம்போலச் சொரிந்துப்பாடி அதன்பின்பு அபிநயத்தினுல் தாளவொத்துக்கிசைய விளக்கம்பொருந்திய சந்தோஷித்தினுலநிர்த்தஞ்செய்தான்(எ-று)

ஆங்கவன்செய்கைக்கங்கணன்மகிழ்ச்சியார்ந்தவற்கருண்மொழி கூறிப், பாங்கினிலளித்துட்பன்முறையுலகிற்பயின் றணையாதலிற்பகர்வாய், தீங்ககன்றுலகஞ்சிறந்ததேயெனைத்தேவநின்கருணையாற்றிகழ்ந்தே, யோங்குலகளித்தியாதலிற்குறையேதாயினுமுரைப்பதொன்றுளதால் ... ... . ... ... ... ... ... *

(இதன்பொழிப்பு )

அந்த நாரதமஹாமுனிவனது சங்கீதத்துக்குப் பரமசிவன் சந்தோஷித்தையடைந்து அம்முனிவனுக்குக் கிருபையாகியவசனத்தைமொழிந்து முறைமையாகிய பரிசுகளையந்தந்து ஓநாரதமுனிவரோ பலபலதரம் உலகத்தில் வாசஞ்செய்திருக்கிறீர் ஆதைால் தீங்கில்லாமல் உலகஞ்சிறந்திருக்கின்றதோ சொல்லுமென்று கூறியகாலத்திலே தேவனே நின்னுடைய அருட்சத்தியினுல் பிரகாசித்து ஓங்கிய உலகத்தை இரக்ஷிக்கின்றீர் ஆனதன்மையினுலே என்னகுறையுளது ஆயினும் அடியேன்சொல்லுவது ஒன்றிருக்கின்றது - (எ-று) (உஅ)

செங்கனியாலனைமெனச்சிறந்தத்திருப்பநியதனிலடத்திய . *
வெங்களியோடுகோளராத்திரிபோலவினாவுறுவிகடவத்திரியாட்ப் *
பொங்குருகங்காளபூண்டனையாகிபுரிவொடுநரர்மிருகங்க ... .. *
ளுங்கவேவுங்கர்றதுபூதவேதாளநெருக்யுறுகடிபலரும... ... *

(இதன்பொழிப்பு.)

சிவந்த கனிகளையுடைய வடாரண்யமென்று சொல்லும்படி சிறப்புப்பொருந்திய க்ஷேத்திரத்தினிடத்துத் திண்மைபொருந்திய கொடியசந்தோஷத்தோடு பிரளயாந்தகார இருளைப்போல் கறுத்தும் நடக்குந்தன்மையையுடையதாய் விகற்பத்தைச்செய்யாநின்ற மலைக்கொப்பாகியும், மிகுந்த மூதுகெலும்புகளால் ஆபரணத்தை யணிந்தவளாகியும், அவ்புடனே மனிதர்களையும் - மிருகங்களையும் - சின்னபின்னப்படுட்டுபுசித்தும், வேதாளங்களும் ஆரவாரவசத்தையுடைய பலபசாசுகளுஞ் சூழவும் - (எ-று) (உ௯)

உறும்பயயகன்றும்தெறுங்கொலைமேவிபுயரியவயிரவியுருவாய்.. ✻
குறும்பொறையடவிவெறுத்துகளாங்கிகுலவிடுங்கொடியவள்கொ
டுமை, யறுப்பதற்குறியகந்தையைமாற்றியாற்றுதியல்றெனினு
லகை, பிறும்படியாகதுமுனையலாதவளை யெதிர்ப்பிமைவர்களுமில்லை

(இதன்பொழிப்பு.) [யாவ.

யாதொரு பயமுமவாராதென்று அச்சந்தீர்ந்தும் - யாவரையுங்கொலவும்படியான குணத்தைப்பொருந்தியும் - உயர்ந்த வயிரவியுருவமாகியும் - சிறியமலைகள்சூழ்ந்த ஆரண்யத்தை வறியபுழுதியாக்கியுஞ் சஞ்சரியாநின்ற கொடுமையாகிய காளியென்பவள் செய்யப்பட்ட துஷ்டகிர்த்தியநீங்குதற்குஅனுகுணமாகப்போய் அவளது அகங்காரத்தைநீக்குவாய் அவ்வாறுசெய்யாவிடில் உலகமெல்லாம் வதையும்படி கொலைசெய்வாள், நின்னையன்றி அவளை எதிர்த்து போர்செய்யத்தக்கவாகளும் இல்லை - (எ-று) (௩0)

என்றவனுரைப்பநன்றெனமேவியிடமுறுவடவனமென்ன ...✻
வன் றுரையளித்தசுநந்தனையரவையருளொடுநினைந்துயர்வனத்திற்
சென்றுயர்காளித்திறலறவின்னேசெல்குவம்போவெனவென்று ✻
நன்றுசெய்முனிவன்போயினனலவனத்துறநயந்தனனம்பன்...✻

(இதன்பொழிப்பு)

இப்படியென்று நாரதமஹாமுனிவர் சொல்லியகாலத்திந் நல்லதென்றுசொல்லி அக்காளியானவள் பொருந்தி வாசஞ்செய்

யாநின்ற இடம் வடாரண்யமென்று தெரிந்தவுடன் அக்காலத்தில் தாம் உத்திரவுசெய்து விடுத்தச் சுநந்தமுனிவனையும் - கார்க்கோட முனிவனையுங் கிருபையுடனே நினைந்து அந்த மேன்மைபொருந்திய வடாரண்யத்திற்குப்போய் உயர்ந்தவளாகிய அககாளியினது வல்லமைகுன்றும்படியாக இத்தினமே நாம் எழுந்தருளுவோம் நீர் உமது ஸ்தானத்துக்குப் போமென்றுசொல்ல என்றும் நன்மையாகிய செயலைச்செய்யத்தக்கவராகிய நாரதமுனிவர் போயி ஸ்ரீ. பரமசிவப் திருவாலங்காட்டுக்கு வருவதற்கு விருப்பங்கொண்டனர் - (எ-று) (௫௧)

வேறு.

வீணைமாமுனிமேவிவிளைத்திடும் . . .. ... *
பாணைமேயபயன்றருநற்கதை ... ... .. *
பூணைமேயடணர்முலைபங்கினன் ... .. .. *
சேணைமேவத்திருத்தசநல்குமே . .. . . .. *

(இதன்பொழிப்பு.)

வீணைமுனிவராகிய நாரதமுனிவர்போய்ப்பாடியஇசையைப் பொருந்திய பிரயோசனத்தைத் தரும்படியான நல்லகதையானது ஆபரணங்களைத்தாங்கிய உபய தனபாரங்களையுடைய பார்வதிபாகனாகிய சிவபிரானிவீற்றிருக்கின்ற ஸ்ரீகயிலாயத்தினை அடையும்படியாக நன்மையைத்தரும் - (எ-று) (௫௨)

நாரதர்சருக்கம் - முற்றும்



ஆக சருக்கம் - ௰௬ - திருவிருத்தம் - ௪௪௬.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நிருத்தயுத்தச்சருக்கம்.



போற்றியமுனிவன்சூழ்ந்துபோயபின்பணிதல்செய்கைச் ... ,, *
சாற்றுதியென்னப்பாரைத்தழன்மணிச்சுடிகைமீதே ... ... *
யாற்றியசேடன்கேட்பவறிதுயிலமர்ந்தமாயன் . . ... ...*
மேற்றிகழ்வண்ணமுற்றாங்கிவையுறவிளம்புகின்றான் ... ... *

(இதன்பொழிப்பு.)

ஆதிசெய்த நாரதமஹாமுனிவர் சுவாமியை வலம்வந்து தம் பீடத்துக்குப் போனபின்பு பரமசிவன்செய்த செயலைச்சொல்லு மென்று அக்கினிமயமாகிய இரத்னச்சுடிகையினால் பூமியைத்தாங் காநின்ற ஆதிசேடன்விண்ணவிடத் திருப்பாற்கடலினிடத்து யோக நித்திரைசெய்யாநின்ற விஷ்ணுவானவர் அதற்குமேல்நடந்த வித ங்கள்யாவும் ஒழுங்குபடச் சொல்லுகின்றான் - (எ-று) (க)

புலித்திளமதியஞ்சூடிப்புரிசடைப்புவனநாதன் .. ... ... *
கனித்துவர்வாயாளபங்கன்கதுமெனக்கயிலைநீங்கிக் ... ... .. *
குனித்திடுங்கணங்கள்பூதங்களிவேதாளங்கொட்டத் ... ... *
துனித்தொருகணத்திலாலவனத்திடைச்சோதிசேர்ந்து ... .. *

(இதன்பொழிப்பு.)

புதிய இளஞ்சந்திரனைச்சூடியிருக்கின்ற மண்டலவிருத்தமா கிய சடாபாரத்தையுடைய புவனநாதனும் - ஆதொண்டைக்கனிக் கும் பவழத்துக்குஞ் சமமாகிய வாயையுடைய பார்வதிபங்கனு மாகிய சிவபெருமான் அதிதுரிதமாகத் திருக்கயிலாயத்தினின்று நீங்கி நிர்த்திரிக்கப்பட்ட சிவகணங்கள் - பூதங்கள்-கூளிப்படைகள்- வேதாளங்கள் - இவைகளெல்லாஞ் சூழ்ந்துவரும்படியாகக் வேக பத்தையுடையவராய் ஒருசணத்துக்குள்ளே திருவாலங்காட்டினிட த்துக்குப் பரமசிவம் வந்து - (எ-று) (உ)

ஊழியிற்கொள்ளுங்காலவுருத்திரவடிவமூழ்த்திப் ... ... .. *
பாழிவெங்கனலைச்சிறப்பவயிரவப்படிவமாக . ... ... ...*
வாழிமாமறையோனுதிவானவர்நடுங்கியின்னே ... ... ... *
பூழியாமுலகமென்னவஞ்சினர்புழுங்கிவேர்த்தார்.. ... ...*

(இதன்பொழிப்பு)

நித்தியபிரளயம் - நிமித்தபிரளயம் - பிராகிருதபிரளயம்- என்னும் இவைகளுக்கந்தமாகிய ஆத்தியந்தபிரளயகாலத்திற் கொள்ளத்தக்க காலருத்திரவடிவமானது பெருமையுங் கொடுமையும்பொருந்திய ஊழித்தீயைக் கோபிக்கும்படியாகிய வயிரவமூர்த்தமாகக் கொண்டகாலத்தில் நன்மைபொருந்திய பிரமாமுதலிய தேவர்களெல்லாம் பயந்து இன்றையத்தினமே நிர்த்தூளியாய்விடும் உலகமென்று பயந்தவர்களாய் மனமானது வெப்பமடைந்து வெயர்வையடைந்தார்கள்-(எ-று) (௩)

நெருப்புமிழ்ந்தண்டகூடநெட்டிலைத்தலையிற்சேர்க்கும்... .. *
பொருப்பெனச்சுழலுஞ்சூலங்கரமுறப்புணரியேழு... ... *
மருப்படவனிமுற்றுமடுப்பினுநிறையாதாய .. ... .. *
வுருப்புணர்கபாலங்கையிலேந்தினனுலகமுட்க... ... ... *

(இதன்பொழிப்பு)

அக்கினியைக்கக்கிக்கொண்டு அண்டகூடங்களையெல்லா நீண்ட இலைகளாகிய தலைகளிற் றாங்கிக்கொண்டிருக்கும்படியான பருவதத்தைப்போலச் சுழலப்பட்ட சூலமானது கைத்தலத்திற்பொருந்தும்படி சத்தசமுத்திரத்தையும் துன்பம் வருந்தும்படியாக உலகம்யாவையும் நிறைத்தாலும் நிறைவிலாதாகிய உருவம்பொருந்திய கபாலத்தையுங் கையிலே ஏந்தினன் உலகமெல்லாங் குன்றும்படியாக-(எ-று) (௪)

பெரும்பிரமாண்டமென்னப்பிறங்கியகபாலமாலை ... ... *
நெருப்புறக்கனலிற்சீறுநெட்டுடலரவஞ்சூழ்ந்து ... ... ...*
கருந்துகோடரமிசைதுனிநீராக்கங்கைசூடி .. ... ... *
பொருந்துமா [illegible] சேர் [illegible] பாலிசுருதிலைப்போல .. *

(இதன்பொழிப்பு)

பெரிதாகிய பிரமாண்டங்கள் என்றுசொல்லும்படியாக விளங்கிய கபாலமாலைகள் நெருங்கும்விதமாய் நீண்டவுடலைப்பொருந்திய சர்ப்பங்களினாற்கட்டிச் சுருங்கியிருக்கப்பட்ட சடாபாரத்தின் மீது கங்காதேவியைச்சூடியது ஒற்றுமையாகிய கிரீடமென்பதைச் சேர்ந்த நெற்றியினிடத்துப் பிரகாசிக்கின்ற திலகத்தையொத்திருக்கவும் -(எ-று) (௫)

நெற்றியிற்றிகழ்ந்தநாட்டநெருப்புறுகொழுந்துமேல்போய்.. *
பற்றிவெண்குறையிற்றங்கப்பனிச்சுதைபரந்துவீழ .. ... *
முற்றுசீர்க்காரமேவமுரிதருபுருவமேறி .. .. ... .. *
யெற்றிமேற்குனிப்பவூழியின்றெனக்கலைகள்சேப்ப .. ... *

(இதன்பொழிப்பு)

நெற்றியினிடத்துவிளங்கிய கண்ணின்கணுள்ள அக்கினியிற்பொருந்திய சிகையானது மேலேபோய்த்தாவி வெண்மையாகிய சந்திரனிடத்துத் தங்கிய அழகுபொருந்திய குளிர்ந்த அமுதமானது பெருகிவிழவும் முதிர்வாகச்சிறந்த கோபமானது சம்பவிக்க வளைந்த புருவங்களானவை உயர்ந்துதுடித்து நெற்றியின்மேலேவளையவும் இதைப்பார்க்கினும் ஊழித்தீ யில்லையென்று சொல்லும்படிகருங் கலைகள்சிவந்திடவும் - (எ-று)

சந்திரனை வெண்குறையென்றது குணஆகுபெயராம் (அதற்குச்சூத்திரம்) பொருண்முதலாறோ டளவைசொறறூணி கருவி காரியங்கருத்தனதியு ளொன்றன்பெயரானதற்கியைபிரிதைத்தொன்முறையுரைப்பன வாகுபெயரே. (௬)

வெண்டலையாவினோடுமிடைந்திருகாதிற்றூழ்ந்த ... ... .. *
குண்டலமாகமின்னக்குலவுலகொருங்குசுற்றுஞ் .. ... .. *
சண்டமாருதமேபோலவுயிர்ப்புறத்தழல்கள்சிந்த ... .. *
மண்டியவதனத்துறறவளைபிறையெயிறுவாயால் ... ... *

(இதன்பொழிப்பு.)

பிரமகபாலங்களைச் சர்ப்பத்துடனேசேர்த்து இரண்டுகாதினிடத்தினுந் தொங்காநின்ற குண்டலமாகப் பிரகாசிக்கவுங், குலா

விய உலகங்களையெல்லாம் ஒன்றாகச்சுழற்றுகின்ற சண்டமாருதத் தையே ஒப்பாகப் அக்கினிகள்சிதறுநின்ற நெருக்கமாகியமுகத்தி னிடத்துத்தங்கிய வளைந்த பிறைபோன்ற தந்தங்களையுடையவாயி னல்பெருமூச்செறியவும்-(எ-று) (௭)

அண்டகோடிகளுங்கண்டமாயுறக்கடித்துப்பல்லாற் ... ...*
றுண்டமதாக்கிக்கொண்டுவிழுங்கிடுந்தோற்றம்போல... ... *
தண்டியவெயிற்றினூறுசராசரமனைத்தும்வாரி ... ... ..*
புண்டிடுவடவைபோலவொளிருநாவுழலவாக்கி ... ... ... *

(இதன்பொழிப்பு.)

அண்டகோடிகளெல்லாங் கண்டங்கண்டமாகக் கடித்துப் பற்களினாலே துண்டமாக்கிக்கொண்டு விழுங்காநின்ற தோற்றத்துக் கொப்பாக வக்கிரமாகிய பல்லால் சராசரமுழுவதையும் வாரியுண்ணத்தக்க வடவாக்கினியைப்போல் பிரகாசிக்கின்ற நாவினை உலாவும்படியாகச்செய்தும்-(எ-று) (௮)

மடித்தகல்பகுவாய்பிர்ந்தமருங்குறப்பவளமன்னித்... ... ..*
துடித்திடுமதரத்தோடுந்நெருங்கரவிரலினுச்சிப் ... ... *
படித்தலஞ்சுமந்தமேருப்பற்பலவுழலச்செய்ய ... ... ..*
வடித்தகைத்தலங்களோடுவலிகெழுதிரடோண்மல்க ... ... *

(இதன்பொழிப்பு.)

மடித்துமடித்துத் திறக்காநின்ற இருபிளவாகிய வாயானது அதன்பக்கத்திற் பொருத்தமாகப்பிளந்து பவழ உருவம்பொருந் தின்ற அதரத்துடனே நிறையவும், உச்சியினால் உலகத்தைத் தாங் கிக்கொண்டிருக்கப்பட்ட பலவாகிய மகமேருக்கள் சஞ்சரிக்கும் படிகுறைந்து நெருக்கிய விரல்களுடனே நன்மையாகியகைக ளோடு வலிமையினால் விளங்காநின்ற திரண்ட புயங்கள்நிறைய வும் - (எ-று) (௯)

தோள்வளைகடகமங்குலியகஞ்சுடரிம்மின்னைக் .. ... ..*
கோள்படுகாலனாகமாசுடசோடியபாசம்... ... ... *

வாள்படுபலகைசத்திமணியுமென்கரத்துமன்னு .. ... ...*
மாள்வினையுடையவெட்டுமாபரணங்களாக... ... .. ... *

(இதன்பொழிப்பு.)

வாகுவலயம் - அஸ்தகடகம் - மோதிரம் - இவைகள் சோம சூரியாக்கினிகளைப்போலப் பிரகாசிக்கவும், வலிமைபொருந்திய கபாலம் - சூலம் - அங்குசம் - பாசம் - வாள் - கேடகம் - வேல் - மணி - இவ்வெட்டுப்படைகளும் அஷ்டபுயங்களினும் பொருத்த மாகிய முயற்சியையுடைய எட்டுஆபரணங்களாகப் பிரகாசிக்க வும் - (எ-று) (ய)

வலியொடுபரந்தமார்பின்வானிடைக்கங்கையாற்றிற் ... . *
பொலிதரவேதநாகம்புனைந்தபொற்புரிநூல்மின்ன.. .. *
ஒலிசெய்கிண்கிணியாமாலையுரகமாமரைஞாண்மீது .. .. *
கலிலெனவாடவேதன்கபாலமாலைகளினோடு ... .. ... *

(இதன்பொழிப்பு)

மிக்கவலிமையுடனே விசாலம்பொருந்தியமார்பாகிய ஆகாயத்தில் உலாவுகின்ற கங்காநதியைப்போல விளக்கமாக வேதசர்ப்பங்களினால் அலங்கரித்திருக்கின்ற பொன்மயமாகிய பூணல்கள் பிரகாசிக்கவும், ஒலியைச்செய்கின்ற கிண்கிணிக் கோவைகளான பெருமைபொருந்திய சர்ப்பமாகிய அரைஞாண்மீது கலீலென்று பிரமகபாலமாகிய மேகலாபரணங்களோடு சத்திக்கவும் - (எ-று)

வேதம் - ச - உபவேதம் - ச - ஆகவேதம் - அ, வேதநாகம் என்பவை-அஷ்டநாகங்களாம். அக்கினியும் எதமென்புழி கொடிய நாயகமென்றுரும் ஊமையும். (யக)

பரியகிண்கிணியிற்செய்தபற்பலமாலைத்தாமம் .. .. *
பரிகணைக்காலிற்றூங்கப்படையுடையவொற்றிகோவை . .. *
செறிதருதிசையிற்பூழிசேவடிச்சாடணைவட்டி . *
நெரிதரப்பாருமாகாசத்தினெடிடகாறும் . *

(உ)

# உ ாய அ திருவாலங்காட்டுப்புராணம்.

(இதன்பொழிப்பு)

பரிதாகிய கிண்கிணிவடிவமாகச்செய்த பலபல்மாலைக்கோவைகளுந் தரித்திருக்கின்ற கணைக்காலினின்றுதொங்கிப் பக்கத்திற்படுதலால எழுந்தஒலியானது நெருக்கமாகிய அஷ்டதிக்கிற்சூழவும், சிவந்தபாதங்களைக் கடினமாகவைத்தலினுல் பூமியெல்லாம் நெரிந்திடவும், அட்டகாசஞ்செய்தலில் ஆகாயம்நெரிந்திடவும்-(ம-

அட்டகாசம் என்பது - சிரித்தல

இடுமணிச்சுடலைவெண்ணீறெங்கணும்பூனைந்தகோரத் ... . *
தடுசினக்கொடியவெய்யவனுசராசரக்கூமேவக்.. .. *
கடுவெனச்சுழலுந்தீககட்கடியவாய்நெடியவாயா .. .. . *
னடுநடுங்கக்கொடும்பாமாயவுண்டிடுநாய்கள்சூழ .. ... *

(இதன்பொழிப்ப)

பிரேதங்களைத் தகனஞ்செய்யாநின்ற சுடலைச்சாம்பலைச் சரீரமெல்லாம் அணிந்த கோரத்துடனேயும, போர்செய்யாநின்ற கோபம்பொருந்திய கொடிய தட்டருணமுடையனவாயும், அனுகுணமான சராசரங்களினிடத்துந் தாவுதற்கு விடத்தைதப்போல சுழலும்படியான தீக்கண்களையுடைய கடியதுகளாயும, நீண்டவாயினுலே நடுநடுங்கத்துடனே உலகமெல்லாம அழிந்துப்போம்படியாக உண்ணுநின்றதுகளுமாகிய சுவானங்கள்சூழவும்-(எ-று)(யங)

கோமளமேனிமேவிமூருகராய்மருலவுஞ்செவ்விக்... ... *
காமன்நிறமெற்றவையமாகந்தமனைமதிருவாபாரிற் .. .. *
றுமெனப்பிருங்கிநந்திசண்டனமுதலோர்சூழ ... ... .. *
நாமயார்நடனவேடங்கொண்டியாநம்பல்மேவி ... ..., *

(இதன்பொழிப்பு)

இளமையாகிய சரீரத்தைப்பொருந்தி எழுந்தருளினவராய் அழகையுடைய மன்மதனைப்போல பெறநெடுத்த ஐயனுரா கர்த்தா என்று சொல்லும்படியான இருவாகரும் உலகத்தில் தாபமொன்றுமில்லாமபடி பிருங்கிமுனிவர் - நந்திதேவர் - சண்டனர்-

காரிடக்கணத்திருர்த்துக்கறுவினர்காய்ந்துவெய்ய . *
போரிடைப்புக்குச்சிறியொருவரையொருவர்பூண்டு ... .. *

(இதன்பொழிப்பு)

பூமியைத்துளைத்துக்கொண்டு நீண்டிருக்கின்ற பருவதங்கள்-விருக்ஷங்கள் - இவைகளைப்பற்றி வேருடனேபிடுங்கி விசி ஆகாயங்களில் இடமில்லாமல் நிறைத்தும், மேகக்கூட்டத்தைப்போல் கெற்சனைசெய்தும், ஒருவரையொருவர் கறுவினர்களாகக் கோபிட்புற்று கொடிதாகிய யுத்தகளத்திற்புகுந்து சீறி ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு - (எ-று) (௰எ)

கடித்தனரிடித்துப்பல்லாற்கரறையுறச்கைகள்விசி . . . .. *
யடித்தனர்துடித்துவீழவருவரையனையதோளாற் . .. *
பிடித்தனர்வெடித்துக்கண்பிதுங்கிடப்பெரியகாலான் .. *
மடித்தனரனைந்தார்கூர்த்தநகங்களாலவகிர்ந்தாரரக்கை. ... *

(இதன்பொழிப்பு)

இடித்து உதிரம்வரும்படியாகப் பற்களாற்கடித்தார்கள், துடித்துவீழும்படியாகக் கைகளால்விசி யடித்தார்கள், அருமையாகிய பருவதாகாரம்பெறுமத் தோளினாலே கண்கள்வெடித்துப் பிதுங்கும்படியாகப் பிடித்தார்கள், பெரியகால்களினால் மடக்கியவர்களாய்அடித்தார்கள், கூர்மைபொருந்தியநகங்களினாலே சரீரத்தைப் பிளந்தார்கள் - (எ-று) (௰அ)

சூலிதன்விசையமென்னணிந்தொடர்ந்தொடர்ந்துசெலல .. *
நீலிதன்விசையருஞ்சிந்தித்தவருடநெருங்கிடாமிந் . . *
கோலியிவ்விரவருதானைகுறித்தபோரிவெரிந்தயாலே .. ...*
மேலியற்சாத்தன்சீற்றவெங்களியசுரமேவறி .. . ... *

(இதன்பொழிப்பு.

சூலபாணியாகிய சிவபெருமானுக்குச் செயத்தைக்கூறி இவர்களெல்லாந்தொடர்ந்த போரபொருமகொணிவர காளியினதுவிசையத்தைக்கூறி யசுரர்களுடைய ...

(இதன்பொழிப்பு.)

வந்துசேர்ந்தனம் இரக்ஷிப்பாயென்றுகூற அக்கினியானது கோபித்ததென்று சொல்லும்படியாகக் கோபநிறைந்தவளாயுங் கண்கள்சிவந்த அக்கினிகளைச்சிந்துகின்றனவாகவும் வேகமிகுந்தவளாய் அச்சேனைகளைநோக்கி நீங்கள்நிச்சயத்துவந்த அப்புருஷன் எங்கேயிருக்கின்றான் அவனைப்பிளந்து இத்தினமே கவளங்கொள்ளுவேனென்று வந்து-(எ-று) (உஉ)

வயிற்றெரிமாற்றவந்தவரவெனமகிஷிமேவி .. . ... ...*
யெயிற்றினையதுக்கிவேகத்தெதிர்த்திடக்கண்டுசாத்தன் .. *
செயிர்த்திவள்மேவுஞ்சீற்றச்செய்கையுந்திறலுநோக்கி .. *
யயிற்படைசசேனையோடுமங்கணன்றன்பான்மேவி . .. *

(இதன்பொழிப்பு)

உதராக்கினியைத் தணிப்பதற்குவந்தவராதலென்று மகிஷியடைந்து பற்களைமென்றுங்கொண்டு வேகத்துடனே காளிஎதிர்த்திட ஐயனார்கண்டுகோபித்து இவள்வருகின்ற கோபச்செய்கையினையும் வல்லபத்தையும்பார்த்து சூலபாணியனுகமே சேனைகளுடனே பரமசிவனிடத்துக்குவந்து-(எ-று) (உங)

பொங்கியகாளிமேவும்புரிவினையாற்குக்காட்ட .. .. . *
லுங்கியினமுன்றுகாளியுறுந்திறமறிந்துநாத ... . ... *
னிங்கிவட்கெதிர்வனென்னவெழுந்துதன்னினத்தைக்காப்பான் *
செங்கையிற்சூலஞ்சுற்றியெதிர்ந்திடத்தேவிகண்டு .. .. .. *

(இதன்பொழிப்பு)

அதிககோபங் கொண்டுவராநின்ற காளியினது இச்சையைப் பரமசிவனுக்குத்தெரிவிக்க அக்கினியைப்போற்கொதித்துக் காளியானவள்வரும் தன்மையைத்தெரிந்து பரமசிவனானவர் இங்கு இக்காளிக்கும்நேராக எதிர்ப்பேனென்று எழுந்து தனது இலங்கைகளுக்காகருதியித்தம் சிவந்தஅத்தங்களினால் சூலாயுதத்தைச்சுழற்றிக் கொண்டு எதிர்ந்தஅவதாரத்தில் காளிடானவள்பார்த்து-(எ-று) (உச)

விசும்பிடத் துயர்ந்தவேணிவீக்கமுந்திசைகண்மேவிப் . .. *
பசும்புறமுடைக்கும்மெண்டோட்பரப்புங்கங்காளமார்பு . ... *
மசும்புறச்செறியுந்தாருமாற்றலர்மண்டகோடித் . ... .. *
தசும்பினைத் துளைக்குஞ்சூலத்தகுதியுங்கோரப்பண்பும் .. ... *

(இதன்பொழிப்பு)

ஆகாயத்தினிடத்து உயர்ந்திருக்கின்ற சடாபாரத்தின்மிகுதியும் அஷ்டதிசைகளினுந்தாவி யண்டங்களை யுடைக்கும்படியான அஷ்டபுயங்களின்விசாலமும் கங்காளந்தங்கியிருக்கின்ற திருமார்பமும் தேன்களானது ததும்பும்படி அம்மார்பினிடத்து நெருக்கமாக அணிந்திருக்கின்றமாலைகளும் வல்லபமும் அண்டகோடிகளின் கலசங்களைத் துளைத்துப்போடாநின்ற சூலத்தின்பெருமையுங் கோரமாகிய விலக்ஷணங்களும்-(எ-று) (உரு)

ஈங்கிவனமக்கொப்பாகுமெவந்நினுமென்றுமுன்னம் .. ...*
வாங்கியமருங்குற்றேவியுரைத்திடுமாற்றந்தேறிப் .. ... *
பாங்கினிலுபாயந்தன்னாற்படிப்பமென்றடற்போருள்ள . *
நீங்கினளாகியப்பானின்றிவைசிந்திக்கின்றாள் ... .. .. ...*

(இதன்பொழிப்பு.)

மற்றுமுள்ள எவ்விதமாகிய அங்கங்களினும் இந்தநாயகன் நமக்குச்சமமானவனென்று ஆதிகாலத்தில் வளைந்த இடையையுடையபரமேஸ்வரியார் கட்டளைசெய்திருந்த வாக்கியத்தைத்தெளிந்து நல்லகுணத்தோடு உபாயந்தினாற் சயிப்பேமென்று நெருங்கி யுத்தஞ்செய்வோமென்னும் எண்ணத்தையொழிந்த மனத்தையுடையவளாகி அப்புறத்திலநின்று இவைகளை ஆலோசிக்கத் தொடங்கினாள்-(எ-று) (உசு)

வீரியமேவும்வெஞ்சொல்விதத்தினுறகத்தின்மேவு .. .. .. *
மாரியன்கருத்தைமோர்ந்துநடத்தினுக்கமையசெய்தல் ... *
காரியமாகுமென்றுகருதினள்காளமேக . . .. .. .. *
வாரியின்புறமகமெல்லவரதனேறச்சொலவார ... .. *

(இதன்பொழிப்பு)

சௌரியம்பொருந்திய கொடுஞ்சொற்களாகிய விதங்களினால் நிறைவாகிய அகங்காரத்தோடுவந்த இந்தத்தலைவனது கருத்தைப்பருத்தநிர்த்த நடனத்தொழிலுக்கு இவன்சம்மதப்படச்செய்கின்றது பிரவுத்தியே நல்லகாரியமென்று எண்ணங்கொண்டவளாகப் பரமசிவனைப்பார்த்துச்சொல்லுவாள்-(எ-று) (௨௭)

இபானநீமத்தனாயிக்கடைந்தனைகாளியென்னும் .. ... .. *
பேனையுருணராய்போலும்பேருலகழிக்குமாற்றல்... ... *
போனையுருடையகாலருத்திரன்புகுதமாட்டான் ... .. *
கானயாளடவிமேவியுற்றதுதனியாய்போலும் ... ... *

(இதன்பொழிப்பு)

நீயார் உன்மத்தம் உடையவனாகி இங்குவந்தாய் காளியென்றுசொல்லப்பட்ட நாமத்தையும் அறியாய்போலிருக்கின்றது சர்வாண்டங்களையும் அழிக்கின்ற வலலபமும் யுத்தச்செயலையும் உடையவனாகிய காலருத்திரனும் வருந்தகுதியுடையனல்ல இந்தக்காளியினது வனத்திற்குப் பிரவேசித்துவந்தது ஆலோசிக்காத தன்மையென்று தோன்றுது-(எ-று) (௨௮)

இன்றுநீயிங்குமேவுங்காரியமியாதுவல்லே .. ... ... .. *
யொன்றியமௌனமாறநியுரைசெய்தியுரையாயாகில் ... ... *
பொன்றினைபோலுநின்பாற்புணர்ந்தவர்தம்மைவாரிச் . .. *
சொன்றியின்விழுங்கித்தீர்வன்பசியெனச்சொல்லத்துயோன் *

(இதன்பொழிப்பு.)

இன்றையத்தினம் நீ இந்தயிடத்திற்கு வந்தகாரியம் யாது நீயடைந்திருக்கின்ற மௌனத்தன்மையைநீக்கி விளம்பு அப்படிக்கு விளம்பாயாகில் மடிந்தவனுக்கு நிகரானாய், பின்பக்கத்தில் கலந்திருக்கின்றவர்களையெல்லாம் வாரிக் கவளமாகஉண்டு என்னுடைய உதராக்கினியைச் சாந்திசெய்வேன் என்று காளியானவள்சொல்லக்கேட்டு சிவபெருமான் -(எ-று) (௨௯)

சிரியபுன்மூரலெல்சோட்டிமினைத்ததுயுள்ளடக்கித்தேங்கு ... *
மதிநுனையுலகமுடிவயங்குமகுடபிரவாககாற... ... ... ...*

செறியெயிற்றடவிமுற்றுஞ்செழுநிலாவிறைப்பச்சேர்ந்து ... *
குறுகியகணங்கள்காதிற்குளிர்சுவையமுதமார்ந்த ... ... .. *

(இதன்பொழிப்பு)

சிறிய புன்னகைசெய்து தமக்கிருக்கின்றகோபத்தையுள்ளே அடக்கிக்கொண்டு தடைப்பட்டிருக்கின்ற சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தைமறைத்துப் பிரகாசிக்கின்ற காம்பீரவாக்கினால் நெருங்கிய பல்வரிசையினால் ஆரண்யமுழுதுஞ் செழுமையாகிய சந்திரகிரணத்தைவீசவும் கோபத்தையுடையவர்களாய் குறுகியிருக்கின்ற சிவகணங்களெல்லாஞ் செவியினிடத்து குளிர்ந்த அமுதம்போலே உண்ணவும் - (எ-று) (௬ ய)

கருமுகிலென்னநின்றகாளியைநோக்கிப்பண்பு ... .. .. *
பெருகியமதுரவாக்காற்பேதைநீயாரையிங்கு ... ... ... *
மருவியதேதுநம்மைவழிபடுமடியர்வைகத் .. ... ... .. *
திருவுறுமடவிமுற்றுஞ்சிதைத்தனைதிருவிலாதாய்... ... ... *

(இதன்பொழிப்பு)

கரியமேகத்தைப்போல் நின்றவளாகிய காளியைப்பார்த்து நற்குணமேமிகுந்த மதுரவசனத்தினாலே அடபேதாய் நீ யார் இந்தவடாரண்யத்திலிருப்பது யாதுகாரணம், நம்மை நித்தியகாலமும்பூசிக்கின்ற அடியார்கள் வசிப்பதற்குத்தக்க வளமெல்லாம் பொருந்திய ஆரண்ய முழுவதையும் அழித்தாய் மங்கல மில்லாதவளே - (எ-று) (௬ க)

பாசிலையடவிமுற்றும்பற்றியமக்கண்மாக்கள் ... ... ... ...*
கூசிடவழித்துக்காணுங்குறைத்தனைக்கொடியரோடும் . . *
பேசியதுணர்ந்துவல்லேபோதியோகாட்டிலின்றே .. . *
மூசிலைச்சூலந்தன்னான்முடித்தனைமுனிவுதீர்வன்... ... ... *

(இதன்பொழிப்பு)

பசிய இலைகள் நிறைந்திருக்கின்ற வனமுற்றினும் பொருந்திய மனிதர்கள் - மிருகங்கள - இவைகளைக் கூசும்படியாக அழித்து வனத்தைதையுஞ் சேதனஞ்செய்தாய் ஆனதால் இந்தவனத்தில்

இன்றேபொருந்திய இலைவடிவாகிய சூலத்தினாற்சங்கரித்துக்கோ பந்தலிவன், நாம்சொல்லிய குறிப்பையறிந்து உன்னைச்சார்ந்த துஷ்டர்களுடனே போருமோ என்ன நின்மனது-(எ-று) (கூஉ)

மற்றையவனத்துக்கேசெறியென்றரன்வலிந்துகூறக் .. ... .. *
கொற்றவையின்னுங்கூறுங்கொடுந்தொழில்வல்லாய்போலப் *
பெற்றவைபிதற்றன்மாற்றுப்பின்னொன்செப்பிசொல்வே . *
னிற்றைநாளுய்யவேண்டிலிவ்வனநீங்கிப்போதி... ... .. *

(இதன்பொழிப்பு)

வேறேயிருக்கின்ற வனத்துக்குப்போவென்று சிவபெருமான் சமர்த்தித்துக் கூறியபோது காளியானவள மறுபடியுஞ்சொல்லுவாள், கொடிதாகிய செய்கையிலே மெத்த வல்லவனைப்போல் கற்றவசனங்களைப் பிதற்றுவதைவிட்டுவிடு பின்பு என்னசெய்வாயெனில யான்சொல்லுகிறேன் இவ்வறையத்தினம் நீ பிழைக்கவேண்டுவாயாகில் இந்த வடாரண்யத்தை விட்டுப்போ-(எ-று) (கூகூ)

அல்லதுவலியுண்டாயினடர்ந்தெனைப்பொருதுவென்று... .. *
மல்லலெங்காடுகோடிமறத்திறலவலியிலென்றுயின் . . . ... *
மெல்லநீவாரோன்மேவமேவெனக்காளிவீறு . .. .. .. *
சொல்லுமகிழ்கூர்ந்துதோகைநீசொற்றவாறே .. ... *

(இதன்பொழிப்பு)

அதவன்றி உனக்குச் சாமர்த்தியம் உண்டாகில் என்னைப்போர் செய்து வென்று வளமைபொருந்திய என்னுடைய வனத்தைப் பெற்றுக்கொள், யுத்தஞ்செய்வதற்கு வல்லமை இல்லையாகில் மெதுவாக நீவராதே போகக்கடவது போகக்கடவது என்று காளியானவள் பெரியவசனங்களைச் சொல்லியவளவில் பரமசிவம் மகிழ்ச்சியடைந்து பெண்ணே நீசொல்லியவிதமே-(எ-று) (கூச)

தோட்டுணைமற்போர்விற்போர்சுடுதலைச்சூலவெம்போர்... ...*
மூட்டுறுவாட்போரோதுமுடிவுறுமதனைமுன்னி ... ... *
நாட்டிநியாதும்வேட்டகைநமக்கெனநம்பன்கூறக் .. .. .. *
கேட்டுமுன்பெரியார்தந்தினிதுகேட்கலுற்றாள் ... ... *

(இதன்பொழிப்பு)

இருதோளினுலுஞ்செய்கின்ற மற்போர் - விற்போர் - கொதிப்பாகிய தலைகளையுடைய சூலத்தாற்செய்யாநின்ற கொடிதாகிய போர் - மூளுந் தன்மைபொருந்திய வாட்போர் - இவைமுதலிய வைகளில் எது உனக்குப் பூர்த்தியாகத் தெரிந்திருக்குமோ அந்த யுத்தத்தைநினைத்து ஸ்திரட்பமித்து நமக்குமய அதனையேசெய்வ தற்கு விருப்பமென்று பரமசிவன் திருவாய்மலர்ந்தருள அதைக் கேட்டு காளியானவள் ஆதியில் உமையவள்சொல்லிய வசனத்தை நினைந்துப்பார்த்து இந்தவகேட்டுவிகேட்கத் தொடங்கினள்-(எ-று)

என்றனக்கியைந்தசெய்கைநின்றனக்கியையுமாகி . . *
நன்றெனக்கேட்பனென்னநயந்தனையேதுநீயா . *
மொன்றெனத்துணிவனென்னவுவந்திடநிருத்தமென்றான் *
குன்றெனத்திரண்டதோளானன்றெனக்குளிர்ந்துநெஞ்சம்... *

(இதன்பொழிப்பு)

எனக்குச் சம்மதமாகியசெய்கை உனக்கும் பொருந்தியிருக்குமாகில யான் நன்மையாகக்கேட்பேனென்று காளிகூற, எந்த விதத்தை நீவிருப்புங்கொண்டாயோ யாம் அதை ஒருமையாகவே துணிவனென்று கூற, அப்படிக்கு விருப்பங்கொண்டால் யான் கருதியது நிருத்தமென்றுகூறினள் குன்றைப்போலே திரண்டிருக்கும் புயத்தையுடையவனாகிய பரமசிவன் நலமென்று மனங்குளிர்ச்சியடைந்து - (எ-று) (௩௯)

மறுவறுதவத்தின்மேயசுநந்தன்மாசுணமென்றின்னோர்க . . *
குறுமுறையளித்தமாற்றமுளத்துணர்ந்துபாகோமா ... *
னறுமுலைமுறுவன்மேவிநன்றவடன்னையாடல .... *
பெறுமுறையரங்கமேதுபேசெனப்பேசுகின்றாள் .. *

(இதன்பொழிப்பு)

குற்றமற்ற தவநிலையிற்பொருந்திய சுநந்தமுனிவர் கார்க்கோடமுனிவர் என்றுசொல்லத்தக்க இவ்விருவர்களுக்கும் பொருந்திய முறைமையாகத் திருநடனதரிசனந் தந்தருள்வோமென்று அனுக

இரகித்தவசனத்தைத் திருவுளத்திற்கருதி தேவர்நாயகனாகிய சிவ பெருமான் நலமாகிய முல்லையரும்பைப்போல் புன்னகையுடை யவராய் நன்மையாக அக்காளியைப்பார்த்து நாம் இருவருஞ்செ ய்யாநின்ற நடனத்தைத் தாங்காநிலை றசபை யாது சொல் என்று சிவபெருமான்கூற காளியானவள் சொல்லுகின்றாள்-(எ-று) (௬எ)

அரங்கமுமவைகளாயவறிவருமாடன்மேவ .. ... ... . *
விரங்குபல்லியமுமற்றுமியைவனவாகியுள்ளத்... ... ... *
தொருங்குநீயுவந்ததானமுவந்தியானுறுவனென்ன ... ... *
வரங்கொளவுமைப்பமுமுன்னேவழங்குவன்மகிழ்கூர்ந்து ...*

(இதன்பொழிப்பு)

நிர்த்தஞ்செய்யாநின்றசபையும் அந்தநிர்த்தங்களைப் பகுத் தறியப்பட்ட சபையார்களும் யாவர்களும் அறிதற்கரியநிருத்தஞ் செய்வதற்குச் சத்திக்காநின்ற வாத்தியங்களும் மற்றைய அங்கங்க ளும் பொருந்தினவைகளாகி மனதுமிடத்து ஒருதன்மையாய் நீ யின்பங்கொண்டு நிச்சயித்தஇடத்திற்குச்சந்தோஷிமாக யான்வரு வேனென்று காளியானவள் சுவாமியினது உத்திரவைப்பெறுதற் காகச்சொல்லியபோது பரமசிவன்சந்தோஷித்தும் கூறுவான்-(எ-

தானமுமவையுமற்றுந்தழைதரப்பழுதுநீர்த்த .. ... .. *
ஆனமின்றலங்காட்டிற்குறுநீயென்றேடென்ன .. ... *
வானவர்முதலவன்காளிமகிழ்ந்துபின்னேசவேகித் . .. .. *
மேதனமாமலர்குழ்முத்திநீர்த்தத்தினருகுமென்று ... .. *

(இதன்பொழிப்ப)

நடனத்தானமும் சபையார்களும் மற்றையவைகளும் நமக் குச்செழிப்பாக நடக்குநிமித்தத்துக்கு குற்றநீர்ந்தவைகளா யிருககின்றன யாதொருவிகினமுமில்லை நீயென்னுடனே திருவா லங்காட்டிற்கு வாவென்றுசொல்லி தேவர்நாயகனாகிய சிவபெரு மான் காளியானவள்மகிழ்ந்து பிறகேவருப்படியாக எழுந்தருளி தேன்கள்நிறைந்த புஷ்பங்கள்யொய்த்திருக்கப்பட்ட முத்திதீர்த் தத்தின்பக்கலில் வந்து-(எ-று) (௬௯)

மலையெனவுரத்தின்மன்னிச்சமுதலமருவுந்தான... ... ... *
நிலையெனக்காட்டக்கண்டுகேள்வியொடுநிலயங்காண்பா ... ...*
ரிலையெனவரன்காற்கோடனெலையினேகக்கண்டுத் ... ... *
தலையுறவணங்கிப்போற்றித்தாழ்ந்தனகண்ணீர்கள்வார ... ...*

(இதன்பொழிப்பு)

பருவதத்தைப்போல் வலிமையிற்பொருந்திச் சமமாகஇருக்கின்றதானத்தை இதுதான்நடனஸ்தானமென்று உண்மையாகக் காட்டியவளவில் அந்தஇடத்தைக்காளியானவள்நோக்கிச் சந்தோஷித்துடனே இடம்அமைந்ததுசரிதான் நிருத்தம்பார்க்கத்தக்க சபையார்இல்லையென்றுசொல்ல அதைக்கேட்டுப் பரமசிவனுணவர் காற்கோடமுனிவன் தவஞ்செய்துகொண்டிருக்கின்ற இடத்திற்குப்போக அக்காற்கோடன்அறிந்து தனதுசெல்வியால்வணங்கித்துதிசெய்து நமஸ்கரித்து கண்களினின்று ஆநந்தபாஷ்பஞ்சொரியும்படியாக -(எ-று) (சய)

மெய்ம்மயிர்ப்புளகமேவவீழ்ந்தடிபலகாற்போற்ற ... ... *
மையணிமிடற்றினுனமனத்துளமகிழ்கூரச் . .. .. .. *
செய்தபின்சுனந்தன்மேயமுதங்கெனத்தேவரபோற்று ... *
மையநீயுணர்தியென்னவுமைத்தனுர்வத்தோடும்... ... .. *

(இதன்பொழிப்பு.)

சரீரத்திலுள்ள இரோமராசிகளெல்லாம் புளகிதங்கொள்ளுமாறு நமஸ்காரஞ்செய்து திருவடிகளைப் பலபல ஆவர்த்திஸ்துதி செய்தலினுல் விடமணிந்தகண்டத்தையுடையவருகிய சிவபெருமானும் இதையத்தினிடத்திற் பரிபூரணமாகிய விருப்பங்கொள்ளச்செய்தபின்பு பரமசிவமானவா சுனந்தமுனிவன் வசிக்கின்ற ஸ்தானம் எங்கேயென்றுகேட்கத் தேவர்களெல்லாந் துதிசெய்யப்பட்டஐயனே நீர்அறிந்துகொள்ளுமென்று அப்படனேசொல்லினுன்-(எ-று) (சக)

அரத்தமென்கமலச்செவ்வியழிக்குநின்பாதப்போது .. ... *
வரத்துறவிதயத்தாமகிழுருத்தொடுமனத்தைமாற்றிச் ... .. *

ணதீருக்குத்தருசியாகக் கிருபைதந்தகாலத்தில் சுநந்தமுனிவரும் பெரிதாகிய கலாசிசம்பந்தமாகிய மூலமையமனதின் வாசனையெல்லாந் தோற்றருசெய்திட எழுந்து பரமசிவன் திருவடியைத்து தித்து முள்ளுகளைப்போல் தமதுசரீரமெல்லாஞ் சிலிர்த்துகளெவும் ஆநந்தநகண்ணீரொரியவும் - (எ-று) (சச)

பல்முறைபணிந்துமண்மேற்பாசமேவராறக்குஞ்சோதி .. ...*
யென்முனமெதிர்ந்தவாமுனிவிகுறையொன்றுமில்லேன்... *
கல்மலியுலகின்னேர்சதியினரிலகாமா ... ... ...*
வின்மலர்ப்பதங்களுமேயன்விழியிணைமேவலாலே . ... ... *

(இதன்பொழிப்பு)

பலபலமுறை பூமியிலேநமஸ்கரித்துப் பாசமூலங்களைச் சேதிக்குஞ் சோதியானது நாயேன்முன்பாக நேரிட்ட விதத்தினால் இனி யாதொருகுறையு மில்லாதவனாயினேன் கடலொலியானது நிறைந்த உலகத்திலெ கன்ன எனக்குச்சமமாகியகதியைப்பெற்றவர்களிலலை அழகும் ஒளியும்பொருந்திய சரணாரவிந்தங்கள் அடியேன்றன்கண்களுக்குத் தோற்றிய தன்மையால் - (எ-று)

கல - என்றது ஒலிக்குறிப்பாம் கலி-என்று கடலைக்கூறியது குணவாகுபெயராம் இஃதன்றி கடகளால்நிறைந்த உலகெனினும் அமையும் (ச௫)

ஆழ்கடற்கிடந்தோன்வையமகழ்ந்தகழ்ந்தடிகள்காணான் .. .. *
பாழ்படச்சிறைமேல்போகிப்பறந்தயன்முடியுங்காணு ... *
னாழ்படிதவமேமெதன்பாலுற்றதோவதியேமேருண்சீர்க் ... ...*
காழ்படமிடற்றேய்நீயெல்கண்களிசெய்தபண்பால் ... .. *

(இதன்பொழிப்பு)

ஆழமாகிய சமுத்திரத்திற் பள்ளிகொண்டிருக்கப் பெற்றவனாகிய மஹாவிஷ்ணுவானவன் வராக அவதாரங்கொண்டு கொம்பினாலே பூமியைகருத்திக கிழிக்கிடியுருவி ஆராய்ந்தும் உமது திருவடிகளைக்கண்டவனன்று, அன்னவடிவங்கொண்டு சிறகுகளெல்லா நதேய்ந்துக் கெடுமாறு அண்டாண்டங்களை ஊடுருவிப் பறந்துப்

யோய் ஆராய்ந்தும் பிரமதேவனுனவன் உமதுதிருவடியைக் கண் டவனன்று, காந்தியும் - சிறப்பும் - பலமும்பொருந்திய விடக ண்டத்தையுடையவனே நீர் அடியேன் கண்களுக்கு ஆநந்தத்தை யுண்டாக்கியதன்மையால முற்சஞ்சிதத்தில் இயற்றிய தவங்கள் யா தேனும் இருந்ததோ அறியேன் - (எ-று) (சகா)

துணிதருமறையினீறுமிற்றெனத்துணியமாட்டா ... ... ...*
தெணியெணிமருளுமெல்லாவியாவர்நின்னியல்புகாண்பார் *
பணியணிபரமயோகிபராபரபாவநாச . .. ... .. ..*
மணிவளர்மிடற்றாய்போற்றியென்றடிவணங்கிப்போற்றி ... *

(இதன்பொழிப்பு)

துணிவுபொருந்திய வேதாந்தமும் இத்தன்மைத்தென்று நிச் சயித்தற்கொண்ணுது பலவாகநினைந்து மயக்குமென்றால் மற்று யாவர் நின்னுடையசுபாவத்தை அறியத்தக்கவர்கள் சர்ப்பாபரண த்தையணிந்த பரமயோகியே பாவநாசனே கரியவிடமானதுவள ராநின்ற கண்டனேபோற்றக்கடவேனென்றுகூறி திருவடிக்கமலங் களை நமஸ்காரஞ்செய்து தியானித்து-(எ-று) (சஎ)

மூடுமாநந்தசோதிமூதிர்தரமோகநீங்கிக் .. ... ... ... *
கூடுமன்புருவமாகிக்குலைமநந்தகட்வியார்ந்ததாழ . ... .. *
வாடிவார்குழலாள்மீட்டுமனத்தடனிவிமேணிச் . . . . *
சூடுமோமுஞ்சிநீக்கிச்சனந்தனுக்குச்சொல்வான் ... .. ...*

(இதன்பொழிப்பு)

தன்னைமறைக்கும்படியான ஆனந்தசோதியானதுமிகுந்திட மோகமானது நீங்கிப் பொருந்திய அன்புருவமாகி மனங்குழைவு பெற்று இன்பத்தையடைந்து நமஸ்கரித்தஅளவிலமிருதுவாகவும் நீளமாகவும் இராநின்ற கேசத்தையுடையவளாகிய பார்வதிபாக னென்னும் பரமசிவனானவர் மறுபடியும் மனதுடனே நடவிக கொடுத்து சடையாக முடியிருந்த முஞ்சிகையைவிலக்கிச் சனந் தருமரிஷிக்கு இந்தவசனம்பேசுவான்-(எ-று) (சஅ)

தூஞ்சியசமாதிமேவுநின்னைமண்சூழ்தலாலே... ... ... ..*
குஞ்சிகண்முஞ்சியாகிக்குலவியவதனானீயும் . ... ... *
விஞ்சியமுஞ்சிகேசியெனப்பெயர்விளக்கமேவி ... ... . *
நெஞ்சினிற்களிவார்கீர்த்திநிலவுலகத்தினெய்தி ... ... ... *

(இதன்பொழிப்பு.)

நிலைபெற்று அசைவில்லாதிருக்கின்ற சமாதிகூடியவுன்னைமண் சூழ்ந்துப் புற்றுவளர்ந்ததன்மையினாலே சிகைகளெல்லாந் தருப் பைப்புல்லாகப்பொருந்தினவாம் அதனால் நீயும் உயர்வுபெற்ற மு ஞ்சிகேசியென்றுசொல்லாநின்ற விளக்கமாகிய நாமத்தைப்பெற் று நெஞ்சத்தின்கண் சந்தோஷமிகுந்திடும்படியான கீர்த்தியான து விளக்கமாகியவுலகத்திற்பொருந்தி-(எ-று) (௪௯)

சுரிவளைமுழங்குமாலவனத்திடைத்துன்னிநப்பாற்... ... . *
பிரிவறவுறைதியென்றும்பிறங்குநம்மடியார்தம்மு . . ... *
ளுரிமையின்முன்னராகியுன்னைப்பணிந்தவர்கட்கென்றுந் ... .. *
தெரிவரும்வரங்களீய்ந்துத்தேவரும்போற்றவாழ்வாய் .. *

(இதன்பொழிப்பு)

வலம்புரிச்சங்கங்கள் முழங்காநின்ற முத்தநீர்த்தத்தையுடை ய திருவாலங்காட்டினி த்துத் தங்கி, நமதுபக்கத்தில் பிரிவில்லா மல் எப்போதும்வசித்திரு, விளக்கம்பொருந்திய நமது அடியார் களுக்குள்ளே சுதந்தரத்தன்மையிலே முதற்றன்மையாகியுன்னைவ ணங்கினவர்களுக்கு எக்காலத்தும் அறிதற்கரிதாகிய வரப்பிரசா தங்களைக் கொடுத்துக்கொண்டு தேவர்களும் போற்றிசெய்யப்படி வாழ்வாய் - (எ-று) (௫௰)

பொன்னிறமுஞ்சிதானும்புனிதமாய்ப்பவியில்மல்க ... ... *
மன்னியமருணமுஞ்சிவனைந்தநாணனறையிற்கட்டி .. .. .. *
னின்னியற்சுருதியெய்திப்பவித்திரத்திலங்குமன்னோன் .. ... *
பன்னியமுஞ்சியிலைலான்பரிதனைப்பதகனுவான் ... ... .. *

(இதன்பொழிப்பு )

பொன்னிறமாகிய முஞ்சியானது சுத்தபவித்திரமாக உலகத் தில நிறையக்கடவது, நிலைபெற்றத் தருப்பை ...றைசெய்த அரை

ஞானத் திருவாயிற்கட்டினால் இனிய தேம்பொருந்திய வேதப் பொருளெல்லாங்கிடைத்துப்பவித்திரமாகவிளங்குவான் முன்சொல்லிய தருப்பையை அணியாதவன் குலஞ் சமையம்முதலிய ஒழுக்கத்திநின்று நீங்கினவனாய்ப் பாதகனாவான்-(எ-று) (௫௧)

எனவரம்பலவுநல்கியிலங்கியமுஞ்சிகேசிப் .. . ... .. *
பனவனைநோக்கிமுன்னம்பகர்ந்திடுதிருத்தம்பாங்கால்.. ... *
முனமுறாங்காளிவாதமுகத்தினாலனைத்துங்காண்டி ... .. *
சினவுகாற்கோடனோடுசெயுநடங்கருதிநீவிர் ... .. ... *

(இதன்பொழிப்பு.)

இப்படியென்று பலவரங்களையுந்தந்து பிரகாசிக்கின்ற முஞ்சிகேசமுனிவனைப் பார்த்து முன்பு உங்களுக்கு சொல்லிய நடனத்தை அழகினால் இதோ முன்னம் இருக்கின்ற காளியினாதுசம்வாத முன்னிலையினால் கோபம்பொருந்திய காற்கோடனோடு தரிசனைசெய்யும் நடனபேக்ஷையுடையவரோ -(எ-று) (௫௨)

சான்பரிவானிகாளிபொருட்படுகடிதினென்னப் .. ... .. *
பூண்பயில்முலையாளீசன்பொலிமுகப்புரிந்துநோக்கிப் ... *
பாண்பயிலியம்பின்மூயினடத்தொழிற்பண்புமுற்றும் ... .. *
வீன்படுமெல்லைவீசன்விலைணவர்வரவுகொண்டான் ... ... *

(இதன்பொழிப்பு)

சுநந்தமுனிவருங் காற்கோடமுனிவரும் பார்க்கவேண்டுமென்றும் அன்பினால் பரமசிவமானவர் காளியே நீ நடனஞ்செய்வதற்கு ஒருமைப்படு அதிதுருதமாகவென்று சொல்லியபோது ஆபரணந்தங்கிய ஸதனபாரங்களையுடைய காளியானவள் சிவபெருமானது விளக்கமாகியமுகத்தை அன்பாகப்பார்த்து இசைபொருந்திய வாகசியமில்லாவிடின் நடனச்செயலின் அழகெல்லாம் விரத்தமாகப் போய்விடுமென்றுசொல்ல, பரமசிவனானவர் தேவர்கள்வருப்படியான எல்லைத்தக்கொண்டார் -(எ-று) (௫௩)

இருணமிடற்றெந்தைகாளியினிதுறவென்னேமுன்ன ... ... *
நடொருதினமவுண்ணியகல்சிறைக்குழுதன்மீது .. ... .. *

சுருள்விரிதுளபமாலைத்துயல்வரவிரவிமினையத் .. ... . *
தெருண்மலரிணைத்தாள்போற்றிச்செறியமர்நடருஞ்சேர்ந்தார் *

(இதன்பொழிப்பு.)

நீலகண்டத்தை யுடை யவராகிய சிவபெருமானைவர் காவி யானவன் இன்பத்தையடையுந்தன்மையாக அடியேனை முன்பா கத் திருவுளத்திலே வருப்படியாகநினைக்க, அத்திருவுளப் பாங்கை யறிந்து அகலமாகிய சிறகினையுடைய கருடாரூடனாகி இதழ்விரி ந்த திருத்துளவமாலையானது அசையும்படி அதிகதுரிதமாகப் போய் தெளிவாகிய உபயபாதகமலங்களைத் துதித்துத் தங்கிய பின்பு மற்றைய தேவர்களும் வந்துசேர்ந்தார்கள்-(எ-று) (௫௪)

பாற்சிறையெகினட்டுதுபங்கயத்தொருவன்பாய . ... *
நூற்பொருளுணர்த்தகேழ்வி நுணங்கியமுனிவர்சூழ .. . . . *
வேறுகருங்கயற்கண்பாணிவிழைந்துறவினாந்துமேவி .. .. *
மாற்கருங்கழற்கால்போற்றிவணங்கினன்மகிழ்கூர்ந்தான் . *

(இதன்பொழிப்பு)

பால்வண்ணமாகிய சிறகினையுடைய அன்னவாகனத்தின்மீது தாமரைகமலத்தில் வசித்திராநின்ற பிரமதேவனென்பவன் சகல சாஸ்திரங்களினுமுள்ள நுட்பமாகிய கேழ்வியினாற் கூரிய புத்தி மான்களாயிருக்கின்ற முனிவர்களெல்லாஞ் சூழும்படியாகவும் வேலைப்போல் கூர்மைபெற்றும், கருமைபெற்றும், கெண்டைமீனை ப்போல் பிறழாநின்றும் விளங்காநின்ற கண்களையுடையவளாகிய சரஸ்வதிதேவியார் விருப்பத்துடனே வரும்படியாக அதிதுரித மாய் வந்துவிஷ்ணுவுக்கரிதாகிய வீரகண்டையைத்தரித்த பாதங்க ளைப்போற்றிவணங்கினவனாக மகிழ்ச்சியடைந்தான் - (எ-று) (௫௫)

சொரிமதக்களிறுவெள்ளைத்தும்பியின்மகவான்மேவ .. ... *
வரிமதர்மழைக்கட்செவ்வாயரம்பையாவசுக்கவானோர் ... ...*
விதிகதிராருக்கர்வீறுமுருத்திரர்விஸ்வதேவ.. ... ... ... *
ருரியகந்தருவர்சித்தர்வித்தியாதரருமோவார்... ... ... ...*

(இதன்பொழிப்பு.)

மதசலத்தை வெள்ளமாகச் சொரிந்துகொண் டிருக்கின்ற வெள்ளையானையின்மீது தேவேந்திரன்வர, அரிகள்பரந்து மதர்த்துக் குளிர்ச்சிதங்கியகண்களும் சிவந்தவாய்களும்உடைய தெய்வப்பெண்களும் அஷ்டவசுக்களும் விரிந்தகிரணத்தையுடைய சூரியர்களும் வீரியம்பொருந்திய உருத்திரர்களும் விஸ்வதேவர்களும் உரிமையாகியகாந்தருவர்களும் சித்தர்களும் வித்யாதரர்களும் ஒழியாதவர்களாய் - (எ-று) (௫௬)

கின்னரரியக்கர்மேயகருடர்கிம்புருடர்மற்றும் ... . *
பன்னருமமரர்சேரப்பாவகன்மேடமீது . .. . .. *
நன்னரும்பகட்டின்மீதுநமனுஞ்சாரயாரும் ... ... *
துன்னிருநிருதிபாசிகாற்றெனத்தொகுத்தாரோடும் . . .. *

(இதன்பொழிப்பு)

கின்னரர்-இயக்கர்-கருடர்-கிம்புருடரும்அன்றி,வேறாகச்சொல்லாநின்ற அமரர்களும்வர, அக்கினிதேவன் ஆட்டுக்கடாவின்மீதும், எமன் நன்மைபொருந்திய எருமைக்கடாவின்மீதும்வர, யாவர்களும்நெருங்குதற்கு அரிதாகிய - நிருதி வருணன் - வாயுவென்று கணக்கிட்ட அஷ்ட திக்குப் பாலகர்களுடனே - (எ-று) (௫௭)

தத்தமக்குரியவூர்திமிசைத்தமக்குரியரோடும் . ... .. *
வித்தகமாகமேவவியானமேற்குபேரன்மேவ . . . *
வத்தகுநிதிகளோடுமடர்த்தனனருக்கன்சோமன் . . .. *
பைத்தலைநாகரின்னும்பற்பலர்பரன்பான்மேவி . ... ... *

(இதன்பொழிப்பு)

தங்கள்தங்களுக்கு உரித்தாகியவாகனத்தின்மீது தங்கள்தங்களுக்குரித்தாகிய பேர்களோடு மிகுந்த அறிவையுடையவர்களாய் வர, புஷ்பவிமானத்தின்மீது குபேரனானவன் பொருத்தமாக அந்தத்தகுதிபொருந்திய சங்கநிதி - பதுமநிதிகளுடனே சேர்ந்தனன் சூரியன்- சந்திரன் - படம்பொருந்திய தலைகளையுடைய நாகலோகத்தார் இன்னும் பலபலபேர்களும் பரமசிவன்பால்வந்து-(எ-று)

முழுதுலகாயசோதிமுன்னவன்மன்னைநோக்கித் .. ... .. *
தொழுதடிபரவிப்பலகாற்றுதித்தனர்சூழ்ந்துநிற்ப .. .. .. *
வுழுவையீருரியோனும்பர்கணங்களையுவந்துநோக்கிப் ... *
பழுதறுகுசலங்கேட்பப்பண்ணவர்பரிந்துசொல்வார் ... .. *

(இதன்பொழிப்பு.)

எல்லாஉலகமுந் தானேயாகிய சோதித்தன்மைபொருந்திய பரமசிவனைப் பொருத்தமாகப்பார்த்து வணங்கித் திருவடியைச் சிந்தித்துப் பலதரம் ஸ்தோத்திரஞ்செய்து தேவர்களாய்ச் சூழ்ந்து நிற்க உழுவையினின்று உரித்த உரியை வஸ்திரமாகத் தரித்திருக்கின்ற பரமசிவன் தேவகணங்களை இன்பமாகநோக்கிக் குற்றமற்ற சவுக்கியங்களைகேட்க்கத் தேவர்கள் அன்புமிகுந்து சொல்வார்கள்-(எ-று)முக

குசலம் - என்பது மந்திரம் எனினும் அமையும்.

நல்லருட்கருணைகூர்ந்தநாயகனீயேயாகி . ... .. ... *
யல்லல்தீரத்தளித்தலாலேயாச்சுமேயன்றிவேறு .. .. .. *
சொல்லதுமுண்டோவென்னச்செப்பினர்பின்னும்போற்றி *
யொல்லெனவிளைத்தவின்னேர்சயவொலியுதவிச்சூழ்ந்தார் ... *

(இதன்பொழிப்பு )

நன்மையாகிய திருவருட்கிருபை மிகுந்த நாயகத்தன்மையுடையவன் நீயேயாகி சஞ்சலங்களையெல்லாம்நீக்கி இரக்ஷித்தலாலே எங்களுக்கெல்லாஞ் செல்வமேயன்றி வேறாகச்சொல்வதுமுளதோ என்று கூறினவர்களாய் மறுபடியுந்துதித்து ஒல்லென்னும் ஒலிக்குறிப்பாகச்செய்த சயஒலியை தேவர்கள்தந்து சூழ்ந்தார்கள்-(எ-று) (சுய)

வேறு.

மூண்டவெஞ்சினக்காளிமுரண்கெடத் ... ... ...*
தாண்டவாரப்பணித்தருளுங்கதை ... ... ... *
வேண்டவேண்டியயாவும்விளைக்குமா... ... .. *
னீண்ட செஞ்சடையானருணீடவே... ... ... *

(இதன்பொழிப்பு)

அதிகரித்துக் கொடூரமாகிய கோபத்தையுடைய காளியினது வல்லமைகெடும்படி சிவபெருமான் தாண்டவஞ் செய்வோமே ன்று திருவாய்மலர்ந்தருளிய காதையானது நீண்டுஞ் சிவந்தும் இராநின்ற சடாபாரத்தையுடைய பரமசிவனது திருவருள் அதி கமாகும்படியாக வேண்டத்தக்க பொருளெல்லாம் உண்டாக் கும் - (எ-று) (௯௧)

திருத்தயுத்தச்சருக்கம்-முற்றும்.



ஆ சருக்கம் - ௰உ௱ - திருவிருத்தம்-௫௱௧௰





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# திருநடனச்சருக்கம்.



நீல்மாமணிவண்ணனைநெட்டராக் .. ... ... ...*
கோலமேவியசேடன்குறிக்கொளா... ... ... *
வாலமுண்டவனாடியவற்புத ... ... ... ...*
ஞாலமுண்டவநல்கெனநல்குவான் .. ... ... *

(இதன்பொழிப்பு)

சிரேஷ்டம்பொருந்திய நீலமணிச்சாயையுடைய மகாவிஷ்ணுவை நீளமாகிய சர்ப்பஉருவங்கொண்ட ஆதிசேடனென்பவன் கருத்திலே இருத்தி ஆலகாலவிடத்தையுண்டவராகிய சிவபெருமான் நிருத்தஞ்செய்ததாகிய அற்புதத்தை உலகத்தையெல்லாம் உணவாகப்பசித்த எம்பெருமானே அனுக்கிரகிக்கவேண்டுமென்றுகூற விஷ்ணுவானவர்சொல்லுவார்-(எ-று) (௧)

பரவிநின்றிடும்பங்கயனேமுதல் ... ... ... .. *
விரவினோவிழைவொடுநோக்கியே . ... .. *
இரவினாடியவெந்தையிலங்குமா . .. ... ...*
நீவிரீதுகேண்மெனச்சாற்றுவான் ... ... *

(இதன்பொழிப்பு)

ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு நிற்கப்பெற்ற பிரமாமுதலிய தேவர்களைப்பார்த்து பிரளய இராத்திரிகாலத்தில் நிருத்தஞ்செய்தருளிய பரமசிவனானவர் உள்ளத்தினிடத்தேப் பிரகாசிக்கின்ற விருப்பத்தினாலே நீங்கள் இந்தவார்த்தையைக் கேளுங்களென்று சொல்வார் - (எ-று) (௨)

கரியளாயவிக்காளிவெங்காட்டுடைமை ... ... ...*
பெரியிற்றீதியிக்கேகலேபோதினீ .. ... ... *
வரியரூப்பிடில்வாதிலடையாடியான் .. ... ...*
சரியவென்றபின்சார்தியென்றெட்டினுள்.. ... *

(இதன்பொழிப்பு.)

கறுத்தஉருவத்தையுடைய காளியானவள் கொடிதாகிய ஆரண்யத்தில் நம்மை அக்கினியைப்போக்கொதித்துச்சீறி இங்குவரவேண்டாம்போ நீ இரத்தவழிக்குவருவாயாகில் வாதமுகமாகநிர்த்தஞ்செய்து யான்பிறகிப்படியாகச் சயம்பெறறபின்பு வாவென்ற சபதஞ்செய்தாள்-(எ-று) (ரு)

மாறுகொண்டவிக்காளிவலியிறூற்... ... ... . .*
கூறுமாடலையாமுன்குறித்தனந் . ... ... ... *
தேறுநீர்நவோய்ககரிசெய்கையின் ... ... . . *
ஞூறுதீர்தாவுற்றிமலதியும் ... ... ... ... *

(இதன்பொழிப்பு)

பகைமைகொண்ட இக்காளியானவள் வல்லபத்தினுற்சொல்லிய நிருத்தத்தொழிலை நாமுடங் குறித்திருக்கிறணம், சகலமுந்தெளிந்தவராகிய நீங்கள் நடுநிலையாகச் சாக்ஷியிருப்பதனுமேல எல்லோருடைய சஞ்சலமுந்திரும்படியாக நம்மைவரும் அதல்லாமலும் - (எ-று) (சு)

ஆடுமங்கமதாய்ச்சதியாங்கதி ... .. .. ... *
கூடுதானவியப்பலகொண்டுநீர் . . ... .. . . *
பீடுசாலப்பிறங்குநிமொன்றர ... ... ... ... *
ஞூடுதேவர்க்குரைத்தபினன்குற ... .. ... ...*

(இதன்பொழிப்பு)

நிருத்தஞ்செய்வதற்கு அங்கமாகத் தாளவொத்தாகிய நடைகள்கூடியதான வரிசையுடைய பலவாத்தியங்களையுங் கைக்கொண்டு வலிமைமிகுதியாக முழங்குங்களென்று பரமசிவனுனவர் அருகிலிருந்த தேவர்களுக்கு கட்டளைசெய்தபின்பு (எ-று) (௭)

திருத்தமேவற்கொருப்படநீடுவா... ... ... ...*
விருத்தன்மேயவர்தத்தமியல்பினிற்... ... ... *
பொருத்தமாயவியம்பலபோற்றிடக் ... ... ...*
கருத்தின்மேயினர்யானெழுங்காதலால் ... ... *

(இதன்பொழிப்பு.)

நடனஞ்செய்வதற்கு இசைந்தகாலத்தில் உயர்வுபொருந்திய தேவலோகத்தில் வசிக்கப் பெற்றவர்களாகிய தேவர்களெல்லாந் தங்கள் தங்கள் சுபாவத்திற் பொருத்தமாகிய பலவாத்தியங்களைச் செய்வதற்குக் கருத்தையுடையவர்களாகக் கூடினார்கள் அக்காலத்தில் யான் மிகுந்த ஆசையுடனே - (எ-று) (சா)

வேறு.

உரங்கிளர்படகம்வானத்தொலியெழுவுரகம்போலுங் .. ...*
கரங்கொடுவிரலான்மோதிமுழக்கிடக்கலந்தவோசை ... ... *
யிரங்கியுருதமெல்லாரிதையமுங்கவரமெல்கிக் ... ... ..*
குரங்கினம்போலுமாழிக்குவலயங்குழைந்ததன்றே ... ... *

(இதன்பொழிப்பு )

வலிமையினாலே விளங்கப்பட்ட மத்தளத்தை இடிமுழக்கத்தினாலே யெழாநின்ற சர்ப்பத்தைப்போலுங் கைகளினிடமாக விளங்குகின்ற விரல்களால் அடித்து முழக்கியதன்மையாற் கலந்தசத்தமும் பலவாத்தியங்களினின்று தொனிக்கப்பட்ட நாதமும், இவ்வுலகத்திலிருக்கின்றவர்களாகிய எல்லாருடைய மனங்களையுங் கிருகித்துக்கொள்ள மெலிந்து வானரக் கூட்டங்களைப்போலுங் கடல்சூழ்ந்த உலகமெல்லாம் உருகியது - (எ-று) (எ)

வார்விசிப்படகஞ்சாயல்வண்ணத்தின்முழக்கநோக்கிப் ... ...*
பார்தொழுமறையோன்றுளம்பாணியிற்பதியப்பற்றிச் .. *
சீர்திருபாணிகானச்சிறப்புறவொத்தச்செவ்வி... ... ... ...*
யார்தருமோசையாகுமானந்தமளித்தவன்றே... ... ... *

(இதன்பொழிப்பு)

வாரினால் கட்டியிருக்கப்பட்ட மத்தளவாத்தியத்தின் அழகு பொருந்திய விதமாகிய சத்தத்தைப்பார்த்து உலகமெல்லாந்

(௩௧)

தொழப்பெற்ற பிரமதேவனானவன் தனது கையினாலிடத்து பொரு ந்தத் தாளத்தைப்பற்றி சீர்பொருந்திய பலங்களுடனே இராகச்சி றப்புக்களும் அமையும்படியாகத் தட்டுங்காலத்தில் அழகுநிறைந்த இச்சத்தங்களானவை யாவர்களுக்கும் ஆனந்தத்தைதந்தன (எ-று)

புரிநரம்பிரங்குறுதப்புதுமதுதுளிப்பவாணி .. ... .. ...*
தெரிதருவீணைமெல்லத்தெரிந்துளர்ந்துகிர்சடாவ ... ... *
வரிதரவெழுந்தகீதமதுரமெல்லிசைவிண்ணோரிற் .. ... .. *
கரியுரிபுனைந்தநாதன்களிப்புறக்கலந்ததெங்கும் ... ... ... *

(இதன்பொழிப்பு)

கட்டியிருக்கின்ற தந்திகளினின்று வராநின்ற இசையாகிய பு தியதேனைத் துளிக்கும்படியாக சரஸ்வதியானவள் அறியப்பெ ற்றவீணையை மெதுவாக ஆராய்ந்து தடவி நகங்களினால் தெறித் திடப் பாடலுடனேயெழுந்த கீதமாகிய மாதுரியம்பொருந்திய மெல்லிய இசையானது தேவரினங்களுக்குள் யானைத்தோலைத் தரித்தவராகிய சிவபெருமான் சந்தோஷிக்கும்படியாக எங்குங் கலந்தது - (எ-று) (௧)

மந்தமத்திமமேதாரமெனுங்கதிவழக்கமூன்றிற்... ... ... *
றந்திடுமிராகமேன்மைதலைழத்தவின்னிசையாற்சந்தத் ... ...*
தந்தமில்கீதசீதவமுதந்தும்புருவினோடு ... ... ... .. *
நந்துநாரதனும்பாடவரம்பையர்நாதமொத்த... ... .... *

(இதன்பொழிப்பு.)

மந்தம் - மத்திமம் - தாரம் - என்று சொல்லாநின்ற கதிகளி ன்வழக்கமூன்றினால் தராநின்ற இராகவிசேடம் செழித்த இனிய பணைகளால் சந்தத்துடனே எழுந்த முடிவில்லாத கீதங்களையும் அமுதம்போன்றிய குளிர்ச்சிபொருந்திய அமுதங்களையுந் தும்புரு முனிவருடனே அழிவில்லாத நாரதமகாமுனிவரும் பாடவும் தேவகன்னிகைகளெல்லாம் இலயப்பிரமாணத்துக்குத்தகுதியாக தங்களுடைய கைகளைத்தட்டவும் - (எ-று) (௨)

இருசுடரவர்களந்தீங்குழலிசையெழுப்பநந்தி ... ... ... *
பொருவருங்கந்தனென்போர்புணரியின்முழக்கம்போலப் ...*
பெருமிதவாடற்கேற்பப்பிறங்கிசைபரப்பமற்றத் ... ... *
தருநிழலவர்கள்காணுந்தலைவராய்சபையோராக ... ... ...*

(இதன்பொழிப்பு.)

சூரியசந்திரா விருவர்களும் அழகுபொருந்தியும் மதுரம் பொருந்தியும் இராநின்ற வேணுக்குழலின் இராகத்தை எழுப்பவும் நந்திதேவரும் ஒப்புசொல்வதற்கரிதாகிய சுப்பிரமணியரென்பவருஞ் சமுத்திரத்தின் கோஷிட்டத்தைப்போல விசிட்டமாகிய நடனத்திற்குச் சமத்துவமாகத் தொனிக்காநின்ற இசையைப்பாடவும் மற்றவர்களாகிய தேவர்கள் அந்த நிர்த்தத்தைப் பார்க்கப்பட்ட தலைமைத்தன்மை யுடையவர்களாகி சபையார்களாக வீற்றிருக்கவும்- (எ-று) (யக)

காண்பவருள்ளுமுஞ்சிகேசிகார்க்கோடனென்போ ... ... *
ரேண்படுதலைவராகவிருடிகளிருவருங்காணக் ... ... ... ...*
கோண்பயிலிறையினுனுங்காளியுங்குனிக்குஞ்செய்கை ... *
பூண்பவராகவெல்லாவங்கமும்புணர்ந்தகாலை ... ... ... ...*

(இதன்பொழிப்பு )

திருநடனதரிசனஞ் செய்கின்றவர்களுக் குள்ளேயும் முஞ்சிகேசிமுனிவர் கார்க்கோடமுனிவர்என்று சொல்லத்தக்கஇருவர்களையும்உயர்ந்ததலைவர்களாக வைத்துக்கொண்டு முனிவர்கள்யாவரும் தரிசிக்கும்படியாக வளைவுபொருந்திய அர்த்தசந்திரனனது உலாவுகின்ற சடாபாரத்தையுடைய பரமசிவனுங்காளியும் நடனஞ்செய்கின்றதொழிலைத் தாங்கினவர்களாக எல்லா அங்கங்களுங் கூடியகாலத்தில் - (எ-று) (யஉ)

குழலொலிவீணைதாளங்குலவியகீதமூன்று... ... ... ...*
முழவணிபடகமுற்றுமுருபபடமுரல்றனுத ... ... ... *
விழவுறக்கோகேகோட்டியெனும்பெயர்விளைக்குமாடல் ... ...*
பழமறைப்டரதனுற்பகர்ந்ததுபாலமேற்கொண்டான் ... *

